

# அருள்நெறிப் புரவலர்
# ஆர். ஏ. என். முத்துசாமி முதலியார்
# வாழ்வும் தொண்டும்




பல்கலைக் கழகப் பாவேந்தர் ஆய்வாளர்

**டாக்டர் மா. அண்ணாதுரை**

எம்.ஏ., எம்.எல்.ஐ.எசு., பி.எட்., பிஎச்.டி.,

நூலகர்

ஈரோடு கலைக்கல்லூரி (தன்னாட்சி)

ஈரோடு – 638 009




## பூங்கொடி வெளியீடு
## POONGODI PUBLICATION

| | |
|---|---|
| கார்த்திக் இல்லம் | 27–காந்தி வீதி |
| 30-பாரதி நகர் | கதிர்காமம் |
| மூலப்பாளையம் (அஞ்சல்) | தட்டாஞ்சாவடி (அஞ்சல்) |
| ஈரோடு - 638 002 | புதுச்சேரி–605 009 |




## *BIBLIOGRAPHICAL DATA*

## நூல் விளக்கக் குறிப்பு


| | |
|---|---|
| Title of the Book | : Arulnerippuravalar R. A. N. Muthusamy Mudaliar Vazhvum Thondum |
| நூலின் பெயர் | : அருள்நெறிப் புரவலர் ஆர். ஏ. என். முத்துசாமி முதலியார் வாழ்வும் தொண்டும் |
| Author | : Dr M. Annadurai |
| ஆசிரியர் | : டாக்டர் மா. அண்ணாதுரை |
| Date of Pubilcation | : 18-09-1994 |
| வெளியீடு நாள் | |
| Edition | : First 1994 |
| பதிப்பு | : முதற் பதிப்பு |
| Publisher | : பூங்கொடி வெளியீடு |
| வெளியீட்டாளர் | Poongodi Publication<br>கார்த்திக் இல்லம்<br>30, பாரதி நகர்<br>மூலப்பாளையம் (அஞ்சல்)<br>ஈரோடு – 638 002 |
| நூல் வடிவமைப்பு | : திருமதி விருத்தாம்பிகை அண்ணாதுரை<br>எம்.ஏ., எம்.எட்., எம்ஃபில்., |
| Language | : Tamil |
| மொழி | : தமிழ் |
| Copy Right | : Dr M. Annadurai |
| நூல் உரிமை | : டாக்டர் மா. அண்ணாதுரை |
| Size of the Book | : Crown 18 × 13 cm |
| Paper | : Mysore 11.6 kg Map Litho |
| Type | : 10 Points |
| Total No of Pages | : 212 |
| Price | : Rs. 50-00 |
| Printer | : Sri Sabanayagam Printers<br>73-A, East Car Street<br>Chidambaram – 608 001 |

# முன்னுரை

புகழ் ஒருவர்க்கு நினைத்த அளவில் கிடைப்பதில்லை. புகழ் வேண்டின் முயற்சி தேவை; உழைப்பு தேவை; பொது நல நோக்கு தேவை. செல்வம் இருந்தால் மட்டும் புகழ் வந்து சேர்வதில்லை; செல்வத்தைப் பிறர்க்குக் கொடுத்து உதவும் பண்பு தேவை; ஈகை உள்ளம் தேவை. மக்கள் தொண்டில் — மக்கள் சேவையில் ஈடுபட்ட அனைவரும் புகழ் பெறுவதில்லை. ஒரு சிலரே நிலைத்த புகழைப் பெறுகின்றனர். அந்தச் சிலரில் அருள்நெறிப் புரவலர் ஆர்.ஏ.என். முத்துசாமி முதலியார் அவர்களும் ஒருவர்.

எண்பது ஆண்டுகள் நிறைவு வாழ்வு வாழ்ந்து வருபவர். ஆனால், ஐம்பது ஆண்டுகள் பொது வாழ்க்கையில், பொதுத் தொண்டில் தம்மை ஈடுபடுத்திக் கொண்ட பெருந்தகை யாளர். இவர்தம் கல்வித் தொண்டு, ஆன்மீகத் தொண்டு பொதுநலத் தொண்டு போன்ற அரும்பணிகள் சமுதாயத் திற்கு ஒரு வழிகாட்டியாகும். குறிப்பாக இளைஞர்களுக்கு வழிகாட்டியாக அமையும். இத்தகைய நோக்கில்தான், தன்னலங் கருதாத அருள்நெறிப் புரவலர் ஆர். ஏ. என். முத்துசாமி முதலியார் அவர்களின் வாழ்வியல் சிந்தனைகள் - பொதுநலப் பணிகள் தமிழ்ச் சமுதாயத்திற்கு நூல்வடிவில் கிடைக்க வேண்டும் என்று விழைந்தேன். இதன் விளைவே இந்நூல்.

யான் விருப்புடன் பெரியவர் ஆர். ஏ. என். முத்துசாமி முதலியார் அவர்களை அணுகி, நூல் எழுதும் எண்ணத்தை வெளிப்படுத்திய பொழுது, மகிழ்வுடன் அனுமதி அளித்தார். நூல் எழுதுவதற்கு வேண்டிய செய்திகளைத் தந்துதவினார்.

தக்க காலத்தில் திருத்தம் செய்து உதவினார். இஃதோடன்றி, சிறப்பான வாழ்த்துரையும் வழங்கி இருக்கிறார். என்பாலும், என் குடும்பத்தின்பாலும் மிகுந்த அன்பும் அக்கறையும் என்றும் செலுத்தி வரும் பண்பாளர். பெரியவர்க்கு என்றும் நன்றி கலந்த அன்பினைச் செலுத்தக் கடமைப்பட்டவன்.

தமிழ் இலக்கியக் கடல்; தமிழறிஞர் மு. வ. அவர் களின் தமிழிலக்கிய வாரிசு; தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தராக விளங்கியவர் டாக்டர் சி. பாலசுப்பிரமணியன். அருள்நெறிப் புரவலர் ஆர்.ஏ.என். முத்துசாமி முதலியார் அவர்களுடன் நீண்ட நாட்கள் நெருங்கிப் பழகியவர். சிறந்த மதிப்புரை தந்த டாக்டர் சி. பா. அவர்களுக்கு நன்றியுடையேன்.

வந்தவர்களுக்கு வாரி வழங்கிய பாரி வள்ளலில் இளவல்; காலந்தவறாமையைக் கடைப்பிடிக்கும் கடமையாளர்; நம்பியவர்களைக் கரை சேர்த்த தோணி; இந்நூலின் கையெழுத்துப் படிகளைப் படித்து, வேண்டிய கருத்துரைகள் வழங்கிய ஈரோடு கலைக் கல்லூரியின் செயலாளர் & தாளாளர் திருமிகு ராணா க. வெ. இலட்சுமணன் அவர்கள் வாழ்த்துரை தந்து இருக்கிறார். அவர்களுக்கு அன்பு நிறைந்த நன்றி.

முதலியார் கல்வி நிறுவனப் பொறுப்பாளர் திருமிகு K. M. தண்டபாணி அவர்கள் இந்நூலின் கையெழுத்துப் படிகளைப் படித்துத் திருத்தம் செய்து கொடுத்தார். திரு K. M. D. அவர்களுக்கு என் நன்றி.

அமைதியானவர்; நல்நெஞ்சினர்; இலக்கிய முழுநிலவு; ஈரோடு கலைக் கல்லூரித் தமிழ்த்துறையின் தலைமகனார்; பாராட்டுரை நல்கியஎன் கெழுதகை நண்பர் பேராசிரியர் டாக்டர் மே. அ. பாலமுருகன் அவர்களுக்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என் இலக்கிய வளர்ச்சிக்குப் பேராதரவு நல்கி வரும் ஈரோடு இந்தியன் வங்கி மேலாளர் திரு சந்திரசேகரன் அவர்களுக்கும் நண்பர்கள் திரு. E.V. பாலு, திரு. ஜெகநாதன், திரு பாலு, செந்தில்முருகன் அச்சகத்தின் உரிமையாளர் திரு ஜெயபிரகாஷ், நிழற்படக் கலைஞர் திரு பாஸ்கர் ஆகியோர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். குறுகிய கால அளவில் சிறந்தமுறையில் அச்சிட்டுத் தந்த சிதம்பரம் சபாநாயகம் பிரிண்டர்ஸ் திரு R. கௌதமசங்கர் அவர்களுக்கும் நன்றி.

இந்நூல் எழுதுவதற்கு, நேர்காணலில் பதிவு செய்த பல ஒலி நாடாக்களிலிருந்து, திருத்தத்தோடு படி எடுத்துக் கொடுத்தும், எழுதியக் குறிப்புகளை அவ்வப்போது படி எடுத்துத் தந்தும் தோன்றாத் துணையாக விளங்கிய என் அருமைத் துணைவியார் திருமதி விருத்தாம்பிகை அண்ணாதுரை அவர்களின் கடமையுணர்வு என்றும் பெருமைக்குரியதாகும்.

டாக்டர் மா. அண்ணாதுரை

டாக்டர் சி. பாலசுப்பிரமணியன்
பேராசிரியர் & தலைவர்
தமிழ் மொழித்துறை
சென்னைப் பல்கலைக் கழகம்
சென்னை-600 005

## எழுத்திறம் வெல்க!

ஈரோடு முதலியார் கல்வி நிறுவனங்களின் அறங்காவலர் குழுத் தலைவர் பெரியவர் திரு ஆர். ஏ. என். முத்துசாமி முதலியார் அவர்கள் குறித்து டாக்டர் மா. அண்ணாதுரை அவர்கள் எழுதியுள்ள நூலினைப் படித்துப் பெரிதும் மகிழ்ச்சியில் திளைத்தேன். 'அருள்நெறிப் புரவலர் ஆர். ஏ. என். முத்துசாமி முதலியார் வாழ்வும் தொண்டும் என்னும் தலைப்பில் அமைந்த பிறர் வரலாறு (Biography) கூறும் இந்நூல் மிகச் சிறந்த முறையில் எழுதப்பட்டுள்ளது. பிறர் வரலாறு ஒன்றினை எந்த முறையில் செம்மையாகவும் திறம்படவும் எழுத முடியுமோ அந்த வகையில் இந்நூல் எழுதப்பட்டிருப்பது பிறர் வரலாறு என்னும் துறைக்கே பெருமை சேர்ப்பதாகும்.

'வாழ்வியல்' என்னும் தலைப்பில் அமைந்துள்ள முதற் கட்டுரை பெரியவர் முதலியார் அவர்களுடைய முழு வாழ்வினையும் முறையாகவும் சுவையாகவும் தெளிவாகவும் திட்பமாகவும் விரிவாகவும் விளக்கமாகவும் கிளத்திக் கூறுகின்றது. "செம்மாந்த தோற்றம்; சிவந்த மேனி; கனிந்த பார்வை; தெளிந்த சிந்தனை; தேன் குழைத்த மொழி; தும்பைப்பூ கதராடை; அனைவரையும் ஈர்த்துத் தன்வயப்படுத்தும் காந்தக் கண்கள்; அறை அங்குல அளவிற்குச் சீராகக் கத்தரிக்கப்பட்ட நரைத்த தலை. இவையே இராக்கியாபாளையம் ஈன்றெடுத்த தவப்புதல்வர் பெரியவர் முத்துசாமி முதலியார் அவர்களின் தோற்ற மாகும்'' என்று நூலாசிரியர் டாக்டர் மா. அண்ணாதுரை

குறிப்பிட்டுள்ள பாங்கும், "பார்த்ததும் மனதில் படியும் நெடிய உருவம்; உள்ளத்தின் உறுதியை வெளிக்காட்டும் உடல் திண்மை; மற்றவர் மனத்தைப் படிக்கும் எக்ஸ்ரே கண்கள்; பிறர் சொல்வதை உற்றுக் கேட்டு, ஒன்றிரண்டு சொல்லளவில் பேச்சு; முடிவில் எவரையும் தனது போக்கிற்கே கடத்திச் செல்லும் ஆளுமை. இத்தகைய தனித்தன்மைகளுக்குச் சொந்தக்காரர்தாம் கல்வித் தந்தை பெரியவர் திரு ஆர். ஏ. என். முத்துசாமி முதலியார்" என்று டாக்டர் தி. ரா. செல்வராசன் அவர்கள் முதலியாரைப் பற்றி வருணித்துள்ள பாங்கும் இந்நூலில் ஒருசேர இடம் பெற்றிருப்பது உவகை கொள்ளக் கூடிய ஒன்றாகும். தாம் எடுத்துக் கொண்ட பொருளை விளக்க 'முன்னோர் மொழியும் பொன்னே போல் போற்றும்' நூலாசிரியரின் நுவல்திறம் பாராட்டத்தக்கதாம்.

'முதலியார் அவர்களுடைய கல்வித் தொண்டு, ஆன்மீகத் தொண்டு, பொதுநலத் தொண்டு முதலியன பற்றியெல்லாம் நூலாசிரியர் மிகச் சிறந்த முறையில் பெரும் முயற்சி மேற்கொண்டு தக்க செய்திகளை அரிதின் முயன்று தொகுத்துள்ளார். ஒரு நிகழ்ச்சியினைப் பல்வேறு தரப்பட்ட மக்கள் கூற்றால் விளக்கி, அவ்வாறு விளக்கும் ஒவ்வொருவர் கூற்றினையும் அவ்வவர்களுக்கே உரிய பேச்சு நடையில் கூறியிருத்தல் நூலின் சுவை கூட்டுகின்றது.

சுருங்கச் சொன்னால், இந்நூலைப் படிப்போர் நெஞ்சச் சிறையில், பெரியவர் ஆர். ஏ. என். முத்துசாமி முதலியார் அவர்களுடைய வாழ்க்கை வரலாறு பளிச்சிடும். தூயவராய், தொண்டராய், நிறைபண்புகளின் உறைவிடமாய், அறிவிக்கு விளக்கமாய், அன்பிற்கு உறைவிடமாய், எளிமையின் இருப்பிடமாய், ஆன்மீகத்தின் அருளுருவாய் ஒருசேர விளங்கும் முதலியார் அவர்களைப் பற்றிய நினைவு நெஞ்சில் என்றென்றும் நிலைத்து நிற்கும் வண்ணம் இந்நூல் எழுதப் பட்டிருப்பது அறிஞர் உலகு வியந்து பாராட்டத்தக்கதாகும்.

இத்தகு நல்லவர், பெரியவர், பண்பாளர் முத்துசாமி முதலியார் அவர்கள் 'வானமீனினும் பன்னாள்' வகையுற வாழ்ந்து மொழிக்கும் இனத்திற்கும் நாட்டிற்கும் தொடர்ந்து தொண்டாற்ற இறையருள் துணைநிற்க வேண்டுமென்று 'அவனருளாலே அவன்தாள் வணங்குகின்றேன்'. இந்நூலினை நல்ல முறையில் எழுதியிருக்கின்ற என் கெழுதகை நண்பர் டாக்டர் மா. அண்ணாதுரை அவர்களின் எழுத்துத் திறம் வெல்க என வாழ்த்துகின்றேன்.

டாக்டர் சி. பாலசுப்பிரமணியன்

டாக்டர் மே. அ. பாலமுருகன் எம்.ஏ., பிஎச்.டி.,
தமிழ்த்துறைத் தலைவர்
பேரவை உறுப்பினர்
பாரதியார் பல்கலைக்கழகம்
ஈரோடு கலைக்கல்லூரி (தன்னாட்சி)
ஈரோடு-638 009.

## பணிபாடும் பண்பாடு

தமிழர்களுக்குத் தன் வரலாற்றை எழுதும் பழக்கம் இல்லாததால் நாம் சான்றோர் பலரின் அனுபவங்களை இழந்தோம். சங்கப்புலமைச் சான்றோர்களையும், வள்ளுவரையும், இளங்கோவையும், கம்பரையும் பற்றி உலவிவரும் கதைகளையே அறியும் நிலையில் உள்ளோம். 'தன்னைப் பற்றிக்கூறிக் கொள்ளுதல் தகும் புலவோர்க்கே' எனும் மொழியிருந்தாலும் அது நடைமுறையில் இருக்க வில்லை. ஆகவே, வாழ்நாளில் தாம் சந்திக்கும் சான்றோர் களின் வாழ்க்கையை வரையவேண்டுவது எழுத்தாளர்களின் கடனாகும்.

"ஊழிபெயரினும் தாம் பெயரார் சான்றாண்மைக்கு
ஆழி எனப்படு வார்"

எனும் வள்ளுவர் வாக்கிற்கேற்ப பெரியவர் R.A.N. முத்துசாமி முதலியார் எந்நிலையிலும் தந்நிலை பெயராத் தன்மையர். அத்தகு சீராளர் வாழ்வைச் சிறப்புறத் தொகுத்தளிக்கிறார் டாக்டர் மா. அண்ணாதுரை அவர்கள். பாவேந்தர் வாழ்வைப் பாங்குடன் உரைத்த ஆசிரியர் இப்பொழுது கல்வித்தந்தையின் வாழ்வைப்படம் பிடித்துக் காட்டுகிறார். 'பண்புடையார் பட்டுண்டு உலகம்' ஆம்! பண்பாளர்கள் வாழ்ந்ததாலும் வாழ்வதாலும் தான் உலகம் இயங்கிக் கொண்டிருக்கிறது. அரிச்சந்திர நாடகத்தைப் பார்த்த காந்தி வாழ்நாள் முழுதும்

உண்மையையே பேசியது போல், பண்பளார் வரலாற்றைப் படிக்கும் பலரும் பண்பாளராய் வளர்வதும் - வாழ்வதும் நூலின் பயனாகும்.

டாக்டர் மா. அண்ணாதுரை அவர்கள் தளரா முயற்சியுமையவர். பெரியவர் R.A.N. முத்துசாமி முதலியாருடன் பலநாள், பலமணி நேரம் உரையாடி-துருவித்துருவிப் பலவினாக்களைக் கேட்டு அவருடைய இளமை நினைவுகளை வெளிக் கொணர்ந்துள்ளார். பெரியவரின் குடும்பத்தாருடனும், உறவினர்களுடனும் நண்பர்களுடனும் சந்திப்புகளை ஏற்படுத்தி, பல நிகழ்வுகளை வரிசைப் படுத்தியுள்ளார். மேலும், முதலியார் கல்வி நிறுவனத்தின் செயல் பாடுகளைத் தொடக்கத்தி லிருந்து ஆய்ந்து நூலாக்கியுள்ளார்.

எண்பதாண்டு வாழ்வில் பெரியவர் செய்த சாதனை களைத் தொகுத்தும் வகுத்தும் உரைத்துள்ளார். ஆசிரியரின் விடாமுயற்சி-ஆழ்ந்த ஈடுபாடு-பகுத்துரைக்கும் பாங்கு ஆகியன இந்நூலாக்கத்தில் பெரும்பங்காற்றியுள்ளன.

பெரியவரின் வாழ்வில் நடைபெற்ற முக்கிய நிகழ்வுகளின் நிழற்படச்சான்றுகளைத் தந்துள்ளமை பெரியவரின் வாழ்வைப் படித்தறிதலோடு பார்த்தறியும் வாய்ப்பையும் வழங்கியுள்ளது.

தமிழ் கூறும் நல்லுலகம் இத்தகு சான்றோர்களின் வாழ்வைக் கற்றுணர்ந்து பயன் பெற வேண்டும். வாழ்க பெரியவரின் சமுதாயத் தொண்டு! வளர்க இந்நூலாசிரியரின் எழுத்துப்பணி!

டாக்டர் மே. அ. பாலமுருகன்

## ஈரா. அ. நா. முத்துசாமி முதலியார்

தலைவர்

முதலியார் கல்வி நிறுவனம்
ஈரோடு கலைக்கல்லூரி (தன்னாட்சி)
ஈரோடு தொழில் நுட்பப் பயிற்சிக் கல்லூரி
பெரியார் மாவட்டச் செங்குந்தர் மகாசன சங்கம்
செங்குந்தர் முன்னேற்ற சங்கம்

செயலாளர் & பொருளாளர்

அருள்நெறித் திருப்பணி மன்றம்
ஆரம்பப்பள்ளி – மேனிலைப் பள்ளி
ஈரோடு – 638 001

## வாழ்த்துரை

மூன்றாண்டுகளுக்கு முன் சிலர் என்னிடம் வந்தனர்; என்னுடைய வாழ்க்கை வரலாற்றை நூலாக எழுதி வெளியிட விரும்பினர். யானும் பார்க்கலாம் என்று மட்டும் கூறினேன்.

பாவேந்தர் பாரதிதாசன் குடும்பத்தைச் சேர்ந்தவரும் எங்கள் கல்லூரியின் நூலகருமான டாக்டர் மா. அண்ணாதுரை அவர்கள் பல ஆராய்ச்சி நூல்கள் எழுதி வெளியிட்டுள்ளார். ஈரோடு கலைக்கல்லூரியில், என்னுடைய தலைமையில், இரண்டு நூல்கள் எழுதி வெளியிட்டு இருக்கிறார். சிறந்த மதி நுட்பமுடையவர்; அன்புடையவர்; ஒழுக்கமுடையவர்; நம்பிக்கைக்குரியவர்; அமைதியானவர்; கொடுத்தப் பணியையும், எடுத்த செயலையும் திறனுடன் செய்து முடிக்கும் ஆற்றலுடையவர். இத்துணைச் சிறப்புடைய இவருடைய நூல்களை வாய்ப்பு நேரும்பொழுதெல்லாம் படித்து இருக்கிறேன்; மகிழ்ந்திருக்கிறேன். இவர், என்னுடைய வாழ்க்கை நிகழ்ச்சிகளை நூலாக எழுதி வெளியிட விருப்பம் தெரிவித்தார். யானும், டாக்டர் மா.அண்ணாதுரை அவர்கள் மிகுந்த தகுதியுடையவர் என்று

கருதினேன். நூல் எழுத ஒப்புதலும் அளித்தேன். அவ்வாறே, அவரும் என்னுடைய வாழ்க்கை நிகழ்ச்சிகளைச் சிறப்புடன், எளிய தமிழில் ஏற்றமுடன் எழுதியிருக்கிறார்.

நூல் எழுத என்னிடமும், என்னுடைய துணைவியாரிடமும், தவத்திரு குன்றக்குடி அடிகளார், பேராசிரியர் க. இராமதாசு போன்ற பிற சான்றோர்களிடமும் என்னுடன் பழகிய நண்பர்களிடமும் நேரில் சென்று செய்திகளைத் திரட்டி, இந்நூலை எழுதியிருக்கிறார். மேலும், தாம் எழுதிய நூலை என்னிடம் காட்டினார்; தக்க ஆலோசனைகள் பெற்றார்; வேண்டிய திருத்தங்களைச் செய்து கொண்டார். என்னுடைய வாழ்நாளில் - என்னுடைய பார்வையில் பட்டு 'அருள்நெறிப் புரவலர் ஆர். ஏ. என். முத்துசாமி முதலியார் வாழ்வும் தொண்டும்' எனும் தலைப்பில் என் வாழ்க்கை வரலாற்று நூல் வெளி வந்துள்ளது.

சிறந்த முறையில் அச்சிட்டு, பொருட் செலவைப் பொருட்படுத்தாது இந்நூலை வெளியிட்டுள்ள டாக்டர் மா. அண்ணாதுரை அவர்களைப் பாராட்டுகின்றேன். போற்றுகின்றேன். என்றென்றும் அவர்க்குக் கடப்பாடு யுடையேன். இந்நூலாசிரியர் எல்லா நலமும் வாழ்வில் பெற, வளமுடன் வாழ, எல்லாம் வல்ல அருள்தரும் அன்னை காமாட்சியம்மன் தாள் போற்றி, வாழ்த்துகின்றேன்.

அன்புடன்

ரா. அ. நா. முத்துசாமி முதலியார்

கு. செ. இலட்சுமணன் M.A., B.Com., M.B.A.,
செயலாளர் & தாளாளர்
ஈரோடு கலைக்கல்லூரி (தன்னாட்சி)
ஈரோடு தொழில்நுட்பப் பயிற்சிக் கல்லூரி
ஈரோடு மகளிர் கலைக்கல்லூரி
இந்து கல்வி நிலையம் – மேல்நிலைப்பள்ளி
ஈரோடு – 638 001

## வாழ்த்துரை

எங்கள் கல்லூரியின் நூலகர் டாக்டர் மா. அண்ணாதுரை. பாவேந்தர் பாரதிதாசன் குடும்பத்தைச் சேர்ந்தவர். இவர் தொடர்ந்து ஆற்றிவரும் இலக்கியப் பணியைத் தமிழகம் நன்கறியும். தமிழக அரசின் 'பல்கலைக் கழகப் பாவேந்தர் ஆய்வாளர்' எனும் சிறப்புப் பட்டத்தையும், 'பாவேந்தர் பாரதிதாசன்' எனும் நூலுக்கு முதல் பரிசும் பெற்ற இந்நூலாசிரியர், முதலியார் கல்வி நிறுவனத்தலைவர் கல்வித்தந்தை திருமிகு ஆர். ஏ. என் முத்துசாமி முதலியார் அவர்களின் வாழ்க்கை வரலாற்றை நூலாக எழுதி வெளியிட்டுள்ளார்.

புலவர்கள், தங்களை நாயகியாகவும், இறைவனை நாயகனாகவும் பாவித்து இலக்கியம் புனைவர். அதுபோல, இந்நூலாசிரியர் தம்மை மகனாகவும், பெரியவர் ஆர். ஏ. என். முத்துசாமி முதலியார் அவர்களைத் தந்தையாகவும் கருதி, 'அருள்நெறிப் புரவலர் ஆர். ஏ. என். முத்துசாமி முதலியார் வாழ்வும் தொண்டும்' எனும் நூலை எழுதியுள்ளார்.

'காலத்தி னாற்செய்த நன்றி சிறிதுஎனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது'

என்பர் வள்ளுவர் பெருந்தகை. முத்துவிழா கண்ட பெரியவர் அவர்கட்குக் காலத்தால் இந்நூலைப் படைத்திருக்

கிறார். நூல்வடிவில், நிலையான வரலாற்றைத் தமிழகத்திற்கு வழங்கியுள்ளார்.

பெரியவர் ஆர். ஏ. என். எம். அவர்களின் வாழ்வும் பொதுத் தொண்டும் திறந்த புத்தகமாகும். இவர்தம் வரலாற்று நிகழ்வுகளைப் பெரியவர் அவர்களிடமும், பிற சான்றோர்களிடமும் கண்டு, கேட்டறிந்த செய்திகளையும் இந்நூலில் நிரல்பட, அழகுற எழுதி இருக்கும் நூலாசிரியரின் திறம் போற்றத்தக்கது; பாராட்டத்தக்கது. கல்வித்தந்தை ஆர். ஏ. என். எம். அவர்களின் வாழ்வும், தொண்டும் தமிழக இளைஞர்களை நல்வழிப் படுத்தும். இந்தப் பயனை இந்நூல் தந்திருக்கிறது.

இந்நூலை எழுதிய டாக்டர் மா. அண்ணாதுரை அவர்களின் பணி பாராட்டுதலுக்குரியது. இந்நூலாசிரியரின் தமிழ்ப்பணி மென்மேலும் வளர வாழ்த்துகிறேன்.

அன்புடன்
க. வெ. இலட்சுமணன்

# பொருளடக்கம்

# ஆர். ஏ. என். முத்துசாமி முதலியார்

## வாழ்வியல்

### கொங்கு நாடு

அகிலும் சந்தனமும் நிறைந்து மணம் பரப்பும் நாடு கொங்கு நாடு. இயற்கை வளங்கள் மிகுதியாக நிறைந்தது. சேர-சோழ-பாண்டிய மன்னர்கள் ஆண்ட பெருமைக்குமுரியது. பாவலர்களால் பாடப் பெற்றது. தமிழ்ச் சான்றோர் பலர் தோன்றிப் புகழ் சேர்த்த பெருமைக்குரியது.

### ஈரோடு

கொங்கு நாட்டின் ஒரு பகுதியே ஈரோடு. வரலாற்றுச் சிறப்புடைய இந்நகரின் புகழினைக் 'கொங்கு மண்டல சதகம்' பின்வருமாறு குறிப்பிடு கிறது:

''சீரிய செங்கம லாலயம்
மேவும் திருவெழில் மிக்கு
ஆரிரு மங்கையர்க் காவயி
ராவதம் தன்னில் வந்து
போரியல் வேல்விழி இந்திராணி
நாயகன் பொன்னோடுபூ
மாரி பொழிந்ததும் ஈரோடு சூழ்
கொங்கு மண்டலமே''

மேலும், 'சாலி நிறைந்த ஈரோடு' என்றும், 'பெரும்புனல் பொன்னி பீடுற ஓங்கப் பிறங்கும் ஈரோடு' என்றும் இலக்கியம் போற்றுகிறது.

## இராக்கியா பாளையம்

கொங்கு மண்டலத்தைச் சேர்ந்த ஈரோடு, பகுத்தறிவுப் பகலவன் தந்தை பெரியார் அவர்களைத் தமிழகத்திற்கு வழங்கிய மண். உலகம் புகழும் கணித மேதை இராமானுசம் அவர்களை ஈன்றெடுத்த மண். ஈரோடு நகரத்திற்கு அருகில் அமைந்த இயற்கை எழில் மிகுந்த சிற்றூரே இராக்கியா பாளையம். இவ்வூரில் தோன்றியவரே அருள்நெறிப் புரவலர் ஆர்.ஏ.என். முத்துசாமி முதலியார்.

## புகழ்முத்து தோன்றியது

தோன்றின் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று

என்ற வள்ளுவரின் வாய்மொழிக்கு ஒப்ப, இராக்கியா பாளையத்தில் 03-09-1913'இல் நாகப்ப முதலியாருக்கும் மசிரி அம்மாளுக்கும் அருமை மகனாகத் தோன்றியவர் பெரியவர் முத்துசாமி முதலியார்.

## பெறற்கரிய பிறவி

'அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது' என்பது ஔவை வாக்கு. மானிடப் பிறவி பெறற்கரிய பிறவி. பிறவியின் பயன் மண்ணில் நல்லவராக-வல்ல வராக வாழ்தலாகும். மாந்தர்க்கு மானுடக் கடன் செய்தலாகும். பயனற்ற-குறிக்கோளற்ற வாழ்க்கை நெறியற்ற வாழ்க்கையாகும். அது நூல் அறுந்த

காற்றாடி போன்றதாகும். மேலும், பிறந்தவர் இறப்பது உறுதி. இவ்வுலகம் நிலையற்றதாகும். இவ்வுலக வாழ்வும் நிலையற்றதாகும். நிலையற்ற வாழ்வில் நிலையான செயல்கள் செய்து, நிலைத்த புகழைப் பெறுதலே வாழ்வின் பயனாகும்.

"மன்னா வுலகத்து மன்னுதல் குறித்தோர்
தம்புகழ் நிறீஇத் தாமாய்ந் தனரே"

என்ற புறநானூற்றுப் பாடல் புகழின் பெருமையைக் குறிப்பிடும். புகழை விரும்பி, தம் வாழ்நாளின் பெரும் பகுதியைச் செலவிட்டவர் பெரியவர் முத்துசாமி முதலியார். இன்றும், நிலைத்த புகழுக்குரிய அரிய செயல்களைச் செய்து, பிறவி எடுத்ததன் பயனை முழுமையாகப் பெற்றுவருபவர் இவர்.

**குழந்தைச் செட்டி முதலிக் கட்டம்**

கொங்கு நாட்டு முதலியார் இனமக்களிடையே 'பங்காளிகள் கூட்டம்' என்ற அமைப்பு முறைகள் உள்ளன. பங்காளிகளாகக் கருதப்படும் ஒரு கூட்டம், அதே கூட்டத்திலுள்ளவர்களுக்குப் பெண் கொடுப்ப தில்லை. அதேபோல் பெண் எடுப்பதில்லை. வேறு கூட்டத்தைச் சேர்ந்த தம் இனமக்களுக்கே பெண் கொடுப்பதும், பெண் எடுப்பதும் வழக்கம். பெரியவர் முத்துசாமி முதலியார் குழந்தைச் செட்டிச் கூட்டத்தைச் சேர்ந்தவர். இக்கூட்டத்தைச் சேர்ந்தவர் கள் காமாட்சியம்மையைத் தங்களின் குல தெய்வமாக வழிபடுகின்றனர்.

**உடன்பிறந்தோர்**

பெரியவர் ஆர். ஏ. என். முத்துசாமி முதலியார் அவர்களுடன் பிறந்தோர் ஐவராவர், தமையன்

ஆர். ஏ. என். அங்கப்ப முதலியார்; தம்பியர் மூவர்; ஒருவர் ஆர். ஏ. என். சென்னியப்ப முதலியார்; மற்றொருவர் ஆர். ஏ. என். தர்மலிங்க முதலியார்; ஆர். ஏ. என். பழனிசாமி முதலியார்; இவர் இறந்து விட்டார். உடன்பிறந்த தங்கையின் பெயர் மாரியாயி அம்மாள்.

**அளவற்ற அன்பு**

உடன் பிறந்த தமையன், தம்பியர், தங்கை ஆகியோர் மீது அளவற்ற அன்புடையவர். பாசப் பிணைப்புடையவர்; அண்ணன்—தம்பியர் ஒற்றுமையில் அதிக நாட்டம் உடையவர் பெரியவர் ஆர். ஏ. என். முத்துசாமி முதலியார்.

**தோற்றம்**

செம்மாந்த தோற்றம்; சிவந்த மேனி; கனிந்த பார்வை; தெளிந்த சிந்தனை; தேன்குழைந்த மொழி; தும்பைப்பூக் கதராடை; அனைவரையும் ஈர்த்துத் தன்வயப்படுத்தும் காந்தக் கண்கள்; அரை அங்குல அளவிற்கு சீராகக் கத்தரிக்கப்பட்ட நரைத்தலை; இவையே இராக்கியாபாளையம் ஈன்றெடுத்த தவப்புதல்வர் பெரியவர் முத்துசாமி முதலியார் அவர்களின் தோற்றமாகும். இவரின் தோற்றப் பொலிவினைத் தென்னிந்திய செங்குந்தர் மகாசன சங்கத்தின் பொதுச்செயலாளர் டாக்டர் தி. ரா. செல்வராசன் பின்வருமாறு குறிப்பிடுகிறார்:

> ''பார்த்ததும் மனதில் பதியும் நெடிய உருவம்; உள்ளத்தின் உறுதியை வெளிக்காட்டும் உடல் திண்மை; மற்றவர் மனத்தைப் படிக்கும் எக்ஸ்ரே கண்கள்; பிறர் சொல்வதை உற்றுக்கேட்டு

ஒன்றிரண்டு சொல்லளவில் பேச்சு; முடிவில் எவரையும் தனது போக்கிற்கே 'கடத்திச் செல்லும் ஆளுமை; இத்தகைய தனித்தன்மைகளுக்குச் சொந்தக்காரர் தாம் கல்வித்தந்தை பெரியவர் திரு. ஆர்.ஏ.என். முத்துசாமி முதலியார்''.

**திண்ணைப் பள்ளிக்கூடம்**

இராக்கியாபாளையத்தில் அந்நாளில் கல்வி கற்கப் பள்ளிக்கூடம் எதுவும் இல்லை. மேலும், தமிழ் கற்றுக் கொடுக்கும் பள்ளிகளும் அறவே இல்லை. திண்ணைப் பள்ளிக்கூடத்தில் அல்லது தனி ஆசிரியரிடத்தில் மட்டுமே தமிழ் அறிவு பெற வேண்டும். பெரியவர் முத்துசாமி முதலியார் திண்ணைப்பள்ளியில் எட்டாம் வயதுவரை கல்வி கற்றார். திண்ணைப் பள்ளிக் கூடத்தில் தாம் கல்வி கற்ற அனுபவத்தைப் பின்வருமாறு குறிப்பிடுகின்றார் பெரியவர் முத்துசாமி முதலியார்:

''பிறந்ததிலிருந்து எட்டு வயதுவரை திண்ணைப் பள்ளிக்கூடத்தில் படித்தேன். படிக்கப் பத்து பையன்கள் கூட வரமாட்டார்கள். அதுவும் எங்கள் ஐயா சம்பளம் கொடுத்துப் படிக்க வைப்பார். இரண்டாவது படிப்பதற்குப் பென்சிலோ, பேனாவோ, காகிதமோ கிடையாது. சிலேட்டும் கிடையாது. கையில் எழுதிப் பழகுவது. மணலில் எழுதிப் பழகுவது. இப்படித்தான் இரண்டாவது படித்து முடித்தேன்''.

**திண்ணைப் பள்ளியில் பாடமுறை:**

திண்ணைப் பள்ளிக் கூடத்திற்குத் தினமும் காலை ஆறு மணிக்குச் செல்ல வேண்டும். காலை ஒன்பது மணி வரையில் ஆசிரியர் பாடம் கற்றுத் தருவார். பிறகு வீட்டிற்குச் சென்று பழைய சோறு சாப்பிட விடுவார். அவ்வாறு பள்ளியை விட்டுச் செல்லும் போது ஒழுக்கமுடன் எறும்பு ஊர்வதுபோல் ஒருவர் பின் ஒருவராகச் செல்ல வேண்டும். செல்லும்போது பள்ளி ஆசிரியர்க்கு மரியாதை செலுத்த வேண்டும். அஃதாவது ஆசிரியர் கற்றுத் தந்த சரணம் முறைப்படி சொல்ல வேண்டும்:

"காலையே எழுந்தோம் ஐயா! கால்முகம்
சுத்தி செய்தோம்!
கோலமாய் நீறுபூசி
குழந்தைகள் பசியாற
பாடமாய்ப் பாடம் தந்தோம்
தடியடி பட்டுக்கொண்டோம்!
சீடரை அனுப்பும் ஐயா! திருமுடி பாதம்
சரணம் ஐயா!"

திரும்பப் பத்து மணிக்குப் பள்ளிக்கு வருதல் வேண்டும். வகுப்பில் அமர்ந்து கவனத்துடன் பாடம் கேட்க வேண்டும். பகல் ஒரு மணி வரை பாடம் கற்றுத் தருவார் பள்ளி ஆசிரியர். மறுபடியும் பகல் உணவுக்குச் செல்லும் போது, ஆசிரியர் சொல்லிக் கொடுத்த சரணம் சொல்ல வேண்டும்:

"சட்டப்படியே கணக்கு எழுதி
சரியான இடத்தில்
இட்டகணக்கோ வாசகமாம் எழுதியே
நாங்கள் படித்துக்கொண்டோம்!

சீடரை அனுப்பும் ஐயா! திருமுடி பாதம்
சரணம் ஐயா!''

பகல் உணவிற்குப் பின் பள்ளிக்கு வந்து முறையாகக் கல்வி கற்க வேண்டும். அந்தியில் வீடு திரும்புமுன் ஆசிரியர்க்கு அந்தி வணக்கம் செலுத்த வேண்டும். பெரியவர் முத்துசாமி முதலியார் ஆசிரியர்க்குச் செலுத்திய அந்தி வணக்கப் பாடல் இது:

"அந்திக்குப் போகிறோம் நாங்கள்
அகத்தினில் விளையாடாமல்
சுந்தர விளக்குமுன்னே சுவடிகளை
அவிழ்த்துப் பார்த்து
வந்தது வராதது எல்லாம்
வகையுடன் படித்துக்காட்டி
இந்திரன் சேவற்கூவ
எழுந்திருந்து ஓடி வருவோம்
சீடரை அனுப்பும் ஐயா! திருமுடி பாதம்
சரணம் ஐயா!

**சூடாமணியில் சிறந்த பயிற்சி**

பெரியவர் முத்துசாமி முதலியார் திண்ணைப் பள்ளிக் கூடத்தில் கல்வி கற்ற போது கல்வியில் மிகுந்த ஆர்வங் காட்டி இருக்கிறார். இவர், சூடாமணி நிகண்டில் சிறந்த பயிற்சி யுடையவராக - சிறந்த புலமையுடையவராகத் திகழ்ந்து இருக்கிறார். சூடாமணி நிகண்டிலுள்ள பாடல்கள் அனைத்தும் இவர்க்கு மனப்பாடம். இதற்குக் காரணம் இவர்தம் தந்தையாரே என்று இன்றும் நினைவு கூறுகிறார்:

"இரண்டாவது படித்தாலும், எங்கள்
(தந்தை) யிடம் பாடம் ஒப்புவிக்கும்போது

கண்டிப்புடன் நடந்துகொள்வார்.
நிகண்டிலுள்ள பாட்டுக்களைக் கணக்காக
மனப்பாடம் செய்து சொல்ல வேண்டும்''.

**கதராடை**

பெரியவர் முத்துசாமி முதலியார் தம் இளமை முதற்கொண்டே கதராடை அணிந்து வந்தார். எளிமையானவர்; ஆடம்பரம் எதுவும் இல்லாதவர்; அகத்தில் எவ்வளவு எளிமையோ அதுபோலவே புறத்திலும் அவ்வளவு எளிமை நிறைந்தவர். வெண்மையான கதராடை போன்றே இவர்தம் அகமும் வெண்மையானது; கரையற்றது.

**விளையாட்டில் வீரர்**

விளையாட்டு உடலுக்கும் உள்ளத்திற்கும் நல்லது. இது மனத்திற்கு மகிழ்வைத் தருகிறது. சோம்பலற்ற வாழ்வைத் தருகிறது. திடமான உடல் ஒரு மனிதனுக்கு வேண்டின், உடற்பயிற்சி வேண்டும்; விளையாட்டில் ஆர்வம் வேண்டும். பெரியவர் முத்துசாமி முதலியார் இளமையில் விளையாட்டில் மிகுந்த ஆர்வமுடையவராக விளங்கி இருக்கிறார். விளையாட்டு வீரர்க்குரிய உடல் அமைப்பு பெற்று இருந்தார். சிலம்பு போன்ற விளையாட்டில் வல்லவர் இவர். இளமையில் விளையாட்டில் ஆர்வம் காட்டியதால்தான் எண்பது வயது நிறைவு பெற்ற இவரால் இன்றுவரையில், உடலைக் கட்டமைப்புடையதாக வைத்துக் கொள்ள முடிகிறது.

**உணவுப் பழக்கம்**

ஒரு மனிதனின் வாழ்நாளை மிகுவிப்பது உணவுப் பழக்கமே. சிறந்த உணவும், உட்கொள்ளும் முறையும்

அம்மனிதனின் உடலுக்கு மாமருந்தாக அமைகிறது. உண்ணும் உணவு மிகினும் குறையினும் உடலுக்கு நோய் செய்யும் என்றும், உண்ட உணவு செரித்த பின் மறுஉணவு உட்கொண்டால் மருந்து எதுவும் வேண்டிய தில்லை' என்றும், 'மாறுபாடு கொள்ளாத உணவை நிரம்ப உண்ண வேண்டும் என்னும் ஆசைக்கு இடங் கொடுக்காமல், கொஞ்சம் வயிற்றில் இடம் இருக்கும் அளவு குறைத்து உண்டால் உயிர்க்கு நோயினால் துன்பம் உண்டாவது இல்லை' என்றும் திருக்குறள் குறிப்பிடுகிறது. இக்குறள் நெறிக்கேற்ப, அருற்நெறிப் புரவலர் முத்துசாமி முதலியார் உணவுப் பழக்கத்தில் மிகுந்த கட்டுப்பாட்டு நெறிமுறைகளைப் பின்பற்று கின்றவர். எளிய உணவு, மிகுதலும் குறைதலும் இல்லாத உணவு, மாறுபாடு இல்லாத உணவுப் பழக்கம் ஆகிய பண்புகளை இவரிடம் இன்றும் காணலாம்.

## முத்துசாமி–சீரங்காயம்மாள் திருமணம்

கவுந்தப்பாடி எனும் ஊருக்கு அருகிலுள்ள மேட்டுப் பாளையத்தில் உயர்குடியில் தோன்றிய செல்வந்தர் செங்கோட முதலியார். இவர்க்கு இரு தாரம். முதல் மனைவிக்கு ஐந்து மகன்கள்; ஒரு பெண். இரண்டாம் மனைவி பழனியம்மாள்; 'சித்தூர்' என்னும் ஊரைச் சேர்ந்தவர்; எளிய குடும்பம்; இவர்க்கு ஒரு மகனும் இரண்டு பெண்களும் உண்டு. சீரங்காயம்மாள் இரண்டாம் மகளாவார்.

திருமதி சீரங்காயம்மாள், பெரியவர் முத்துசாமி முதலியார்க்குத் தூரத்து உறவுக்காரர். தூரத்து உறவினரான பெரியவர் முத்துசாமி முதலியார் சீரங்காயம்மாளை மணம் முடிக்க விரும்பினார்.

முறைப்படி சென்று பெண் கேட்டார். பெண் வீட்டார் விருப்பம் தெரிவித்தனர். திருமணம் நிச்சயம் செய்யப்பட்டது. திருமணம் நிச்சயம் செய்ததன் அடையாளமாகப் 'பருப்பு சோறு' போடப்பட்டது.

### திருமண ஏற்பாட்டில் தடங்கல்

பெரியவர் முத்துசாமி முதலியார்க்கும்–சீரங்காயம் மாளுக்கும் திருமண ஏற்பாடுகள் தொடர்ந்து நடை பெற்றுக் கொண்டிருந்தன. திடீரென்று பெரியவர் செங்கோட முதலியாரின் முதல் தாரத்து வழியில் தோன்றிய அண்ணன் மனைவி இயற்கை எய்தினார். ஆறு திங்கள் 'அடைப்பு' (துக்கம்) கடைபிடித்தனர். இதனால் நிச்சயம் செய்யப்பட்ட பெரியவர் முத்து சாமி முதலியாரின் திருமணம் தடைப்பட்டது.

### வேறு மாப்பிள்ளையைத் தேடல்

இதற்கிடையில் சீரங்காயம்மாளின் உறவுக் காரர் களில் சிலர் பெரியவர் முத்துசாமி முதலியார்க்குப் பெண் கொடுப்பதில் ஏற்படும் சிக்கலை எண்ணினர். இதனால், இவர்களின் திருமணம் மேலும் தடைப் பட்டது. ஒரு வருடம் கழிந்தது. வேறு மாப்பிள்ளையைத் தேடும் முயற்சியில் இறங்கினர் சீரங்காயம்மாளின் உறவினர். இவர்தம் பங்காளி வழியில், அத்தை மகனுக்கு நிச்சயம் செய்தனர். மாப்பிள்ளை வீட்டார் உடன் திருமணம் செய்யும் நிலையில் இல்லை. திருமணத்திற்கு வேண்டிய நெல்லும், பணமும், அறுவடைக்குப் பின்தான் கிடைக்கும் என்றனர். இந்நிலையில், சீரங்காயம்மாளின்

தாயார் திருமணத்திற்கு வேண்டிய நெல்லும் பணமும் மாப்பிள்ளை வீட்டார்க்கு அளிக்க முன் வந்தார்.

இருப்பினும், சீரங்காயம்மாளின் உள்ளம் தடைபட்ட திருமணத்தை எண்ணியது. 'முதலில் நிச்சயம் செய்யப்பெற்ற மாப்பிள்ளையான பெரியவர் முத்துசாமி முதலியாரை நாடியது இவரது மனம்; உள்ளம் உருகிற்று; நெஞ்சம் படபடத்தது; இரவு முழுவதும் மனம் உழன்றது; ஊன் உறக்கம் இல்லை' எனக் குறிப்பிடும் சீரங்காயம்மாள், தம் திருமண நினைவுகளைப் பின்வருமாறு சுவைப்பட தெரிவிக்கின்றார்:

> ''மறுநாள் பொழுது விடிந்ததும் களத்து
> மேட்டிற்குச் செல்ல தயாரான தாய்க்குச்
> சாக்குப் பைகளெல்லாம் எடுத்துச் சுருட்டிக்
> கொடுத்தேன். இரவு உணவு உண்ணாத என்
> முகவாட்டத்தைக் கண்டார் தாய்.
> ஏன்? சீரங்கு! நீ இராத்திரியும் சாப்பிடவே
> இல்லையே! ஏன்? இப்பொழுதும் சாப்பிட
> மாட்டேன் என்கிறாய்? என்ன?
> போய்ச்சாப்பிடு''

என்று கூறினார் சீரங்காயம்மாளின் தாய். இதற்கு மறுவிடையாகத் தம் தாய்க்குப்பின்வருமாறு விளக்கம் தந்தார்:

> ''ஏம்மா! வயிறு பசித்தால் சோறு தானே
> சாப்பிடுவோம். வேறுவொன்றையும் நாம்
> உண்ண மாட்டோம். அம்மா! கல்யாணத்திற்கு
> உறுதியெல்லாம் சொல்லிப் போயிட்டோம்.
> அவர்தான் (முத்துசாமி முதலியார்) வந்தார்;
> நாம் பருப்புச்சோறு போட்டு, நிச்சயம்
> செய்தோம்''.

இவ்வாறு தம் ஆழ்மனத்தில் இரண்டாண்டுகளாக அலைமோதிய எண்ணச் சிதறல்களைத் தேங்காய் உடைப்பது போல், தம் தாயிடம் உடைத்தார் சீரங்காயம்மாள்.

தாயும் மகளும் உரையாடிய இந்த உரையாடலை அருகில் இருந்து கேட்ட முதல்தாரத்து வழியில் பிறந்த தமையனார், சீரங்காயம்மாளின் மனத்திட்பத்தை எண்ணி வியந்தார்; உள்ளக்கிடக்கையைத் தெளிவாக உணர்ந்தார், மேலும், தம் அருகில் அமர்ந்திருந்த பெரிய தந்தையை அழைத்தார்.

> "பெரியப்பா! இங்கே வா! பிள்ளை (சீரங்காயம்மாள்) வெட்டியாய்க் கிணற்றில் விழுந்து, செத்துப்போயிடும். அவர் (முத்துசாமி முதலியார்) வந்து கல்யாணத்தைப் பண்ணிக் கொண்டு போகட்டும்"

என்றார் முதல் தாரத்துவழியில் பிறந்த தமையனார்.

**மணங்கொண்டவரை மணந்து கொண்டார்**

மனைத்தக்க மாண்புடைய – மனைமாட்சியுடைய சீரங்காயம்மாள் உள்ள உறுதியுடன் இருந்தார். துன்பங்கள் பல எதிர்கொண்டாலும், ஒருமுறை மனத்தால் எண்ணியவரான பெரியவர் முத்துசாமி முதலியாரை விரும்பி மணந்துகொண்டார். தம் உள்ள உறுதியையும், மன உலச்சலையும் பின்வருமாறு குறிப்பிடுவர் சீரங்காயம்மாள்:

> "இரண்டு வருடமாகத் தடைபெற்ற திருமணத்தைப் பற்றி என் மனத்துக்குள் எண்ணிக் கொண்டு இருந்தேன். என் மனத்தில்

உள்ளதைத் தாயிடம் சொல்லாது போனால், வேறு மாப்பிள்ளைக்குக் கல்யாணம் முடித்து விடுவார்கள். எனவே, சொல்லித் தான் ஆக வேண்டும் என்று என்மனம் தெளிவுபடுத்தியது. என் தாயிடம் பின்வருமாறு கூறினேன்.

"எப்பொழுது வந்து நிச்சயம் பண்ணி, பரியங்கட்டி, உறவுமுறைகளை எல்லாம் கூப்பிட்டு, சபையில் வைத்து நிச்சயம் செய்தபின் மனம் மாறுவது இழுக்கு. எப்போது சபையில் கூடி, சபையில் வைத்து பரியங் கட்டினார்களோ, அவர்தான் (முத்துசாமி முதலியார்) எமக்குப் புருஷன். வேறொரு புருஷன் கட்டினால் எமக்கு இரண்டாவது புருஷன் கட்டியது போலவாகும் என்று கருதினேன்".

**கணவனே கண்கண்ட தெய்வம்**

"தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்"

என்பர் வள்ளுவப் பெருந்தகை. சீரங்காயம்மாள் தன்னைக் காத்துக் கொண்டவர். தன்னைக் கொண்ட வராகிய பெரியவர் முத்துசாமி முதலியாரையும் காத்தவர்; தம் குடிக்குரிய பெருமையைப் போற்றியவர்; புகழைக் காத்தவர்; இல்லறக் கடமையைச் சரிவரச் செய்தவர்; துறந்தார்ப் பேணல், விருந்தயர்தல், வறியவர் மாட்டு அருள் உடைமை போன்ற நற்குணங் களும், வாழ்க்கைக்குவேண்டிய பொருள்கள் யாவை என அறிந்துகடைப்பி டித்தல். அட்டிற்றொழில் வன்மை'

ஒப்புரவு செய்தல் போன்ற நற்செயல்களும் சீரங் காயம்மாள் தம் கடமையாகக் கொண்டு இலங்கினார்.

'தெய்வம் தொழாஅள் கொழுநற்றொழு தெழுவாள்' என்ற சிறப்பிற்குரிய சீரங்காயம்மாள், தம் கணவர் பெரியவர் முத்துசாமி முதலியார் பற்றி குறிப் பிடுவது என்றும் நினைத்தற்குரியதாகும்:

> "இன்றும் நான் நினைத்துக் கொள்வேன். எத்தனைக் கஷ்டம் வந்தாலும், இரவில் துயில் கொள்ளப் போகும் முன் அவரைக் (முத்துசாமி முதலியார்) கும்பிட்டு விட்டுத்தான் உறங்குவேன்; காலையில் துயிலெழுந்த உடன் கும்பிட்டு விட்டுத்தான் எழுவேன்; எங்கள் குடும்பத்தையே-அப்பா வீட்டுக் குடும்பத்தையே காப்பாற்றியவர். எத்தனையோ கஷ்டம் வந்துள்ளது எனக்கு! இங்கேயும் வந்து எத்தனையோ கஷ்டத்தையும் அனுபவித்துள்ளேன்! ஆனால், அவரால் (முத்துசாமி முதலியாரால்) எந்தக் கஷ்டமும் அனுபவிக்க வில்லை."

**துணைவியரைப் பற்றித் துணைவர்**

கணவன் – மனைவி இல்வாழ்வில் ஒருயிராய் வாழ்தல் அரிது; அதுவும் கருத்து வேற்றுமை இல்லாது வாழ்தல் அதனிலும் அரிதான செயலாகும். ஆனால், பெரியவர் முத்துசாமி முதலியாரும் இவர்தம் துணை வியார் சீரங்காயம்மாளும் மனம் ஒத்தவர்களாக-மன வேறுபாடு அற்றவர்களாக வாழ்ந்து வருகின்றனர். வாழ்வின் முழு உண்மையை உணர்ந்தவர்களாக விளங்

குகின்றனர். மேலும், பெரியவர் முத்துசாமி முதலியார் தம் மனைவியை மனந்திறந்து வாயார வாழ்த்துகின்றார்; தம்முடன் மனமொன்றி வாழ்ந்து வருகின்ற தம் இல்லாளுக்கு நன்றியைத் தெரிவிக்கின்றார்:

"தெய்வப் பக்தியில் என் சம்சாரம் அளவுகடந்த
நம்பிக்கை உடையவள். தனக்கென எதுவும்
கேட்காத மனத்தை உடையவள்.
இதுவரைக்கும் என் சம்சாரம் என்னுடன்
ஒத்துழைத்ததற்கு என்ன கைம்மாறு செய்வது
என்று எனக்குப் புரியவில்லை. அந்த அளவிற்கு
என் சம்சாரம் நடந்து கொண்டாள்.
வாழ்க்கையில் நான் பெற்ற பேறு இதுவாகும்".

**பகலில் விவசாயம், இரவில் நெசவு**

பெரியவர் முத்துசாமி முதலியாரின் குடும்பத்தினர் விவசாய நிலத்தில் குடியேறினர். விவசாயத் தொழிலில் தீவிரமாக ஈடுபட்டனர். பெரியவரின் தந்தை, அண்ணன், தம்பிமார்கள் ஆகிய எல்லோருமே விவசாயம் செய்வதில் நாட்டம் உடையவர்கள். பகலில் வயல் வரப்புகளைச் சீர்செய்தல், ஏர் ஓட்டுதல், விதை விதைத்தல், அறுவடை செய்தல் போன்ற விவசாயப் பணிகளைச் செய்தனர். இரவில், நெசவுத் தொழிலை மேற்கொண்டனர். பகலில் விவசாயத் தொழிலிலும், இரவில் நெசவுத் தொழிலிலும் ஈடுபட்டதன் நோக்கமே வாழ்வில் தங்களை உயர்த்திக் கொள்ள வேண்டும் என்று ஆசைப்பட்டனர்.

"விவசாயத் தோட்டத்தில் குடியேறினோம்;
அங்கிருந்து கொண்டு பகலில் விவசாயம்
செய்தோம்; இரவில் நெசவு செய்தோம்,

வீட்டுத் தேவைக்காக நெசவு நெய்து சம்பாதித்தோம்; விவசாயச் செலவிற்காக விவசாயம் செய்து சம்பாதித்தோம். இந்த முறையில் விவசாயமும் செய்துகொண்டு நெசவும் செய்துகொண்டு வாழ்க்கையைக் கழித்து வந்தோம். விவசாயத்தில் தகப்பனார் உள்பட எல்லோருமே செய்தோம். வாழ்க்கையில் வெற்றிபெற வேண்டும் என்பதே எங்களின் இலட்சியமாக இருந்தது.''

**விவசாய நிலத்தில் குளத்தையே உருவாக்கிய குடும்பம்**

பெரியவர் முத்துசாமி முதலியார் காலத்தில் விவசாயம் என்பது இந்நாளில் உள்ளது போன்றதன்று. காடு கழனி திருத்துவது முதல் அனைத்து வேலைகளையும் மனிதர்களே செய்ய வேண்டும். இவை அனைத்தும் பெரியவர் முத்துசாமியின் குடும்பமே செய்தது. பெரியவர் தம் எட்டு வயதில் விவசாயத் தொழிலில் ஈடுபட்டார்; கடுமையாக உழைத்தார். இவர்தம் தந்தை கழனி வேலை செய்ய, தமையன்–தம்பிமார்களுடன், பெரியவர் முத்துசாமி முதலியார் பட்டி, தொட்டி காத்தார்; ஆடு, மாடுகள், மேய்த்தார். மேலும், விவசாய நிலத்தில் அனைவரும் உழைத்து ஒரு பெருங்குளத்தை வெட்டினர்; நீர்ப்பாசன வசதியை உண்டாக்கினர்; தம் இளமை நினைவை – தாம் கடந்து வந்த கரடுமுரடான பாதையைப் பின்வருமாறு குறிப்பிடுவர் பெரியவர் முத்துசாமி முதலியார்:

''ஐயா (தந்தை) விவசாயம் பண்ணுவார்; விவசாயம் பண்ணும்போது, பட்டி, தொட்டி காக்க வேண்டும்; ஆடு, மாடுகள் மேய்க்க

வேண்டும்; தலையில் மண் சுமக்க வேண்டும்;
ஏரிக்கு மண் சுமந்து போட வேண்டும்;
வாய்க்காலையே உண்டாக்கினோம்; ஒரு
குளத்தையே உண்டாக்கினோம். இதனால், என்
தலையிலும் கூட சொட்டையாக இருக்கும்.
மண் சுமந்து சொட்டையாகப் போனது; எட்டு
வயதிலிருந்து பதினைந்து வயது வரைக்கும்
ஆடு, மாடுகள் மேய்த்து, பட்டி தொட்டிகளைப்
பார்த்து, விவசாயத்தில் முன்னேறுவதற்கு
என்ன வழி இருக்கிறதோ அத்தனையும்
செய்தேன்...''

**மாடு-கன்று மக்கட்செல்வம்**

ஒரு குடும்பம் என்று இருந்தால் மாடு—கன்று இருக்க வேண்டும். மாடு, மக்கட் செல்வங்களில் ஒன்று. இந்தச் செல்வம் ஒரு குடும்பத்திற்கு நன்கு வாய்க்கப் பெற்றிருந்தால் அந்தக் குடும்பம் முன்னேறும். பெரியவர் நாகப்ப முதலியாரின் குடும்பத்திற்கு மாடு—கன்று என்ற செல்வம் நன்றாக அமைந்திருந்தது. எனவே, விவசாயம் செய்வதற்கு எளிதாக இருந்தது.

''விவசாயம் செய்யும்போது, ஒரு மனிதனுக்கு
மாடு கன்றுதான் ஒழுங்காக வாய்க்கவேண்டும்.
எங்கள் ஐயா 35 ரூபாய்க்கு மாடு வாங்கி
வைத்திருந்தார். அது வருடம் ஒரு கன்று
போடும். 10 வருடத்தில் 10 கன்று போட்டது.
அந்த மாடுகள் மூலம் வருமானம் கிடைத்தது;
அந்த மாடுகளே விவசாயத்திற்கும் பயன்படுத்தி
னோம். எனவே, ஒரு மாடு ஒரு குடும்பத்திற்கு
வாய்த்தால் அதுவே பெருஞ்செல்வம்''

என்று பெரியவர் முத்துசாமி முதலியார் குறிப்பிடு வதன் மூலம் மாடு-செல்வம் என்பதை நன்கு உணர்ந் திருக்கிறார்; வாழ்க்கையில் முன்னேற்றம் காண, இந்தச் செல்வம் உறுதியாகத் தேவை என்பதையும் நம்பி இருக்கிறார்.

### முதலாளி – தொழிலாளி என்ற பேதம் இன்மை

'விவசாயம் என்பது ஒரு கூட்டுத் தொழில். அனைவரும் இணைந்து பாடுபட்டால்தான் பலன் கிடைக்கும். பலன் கிடைக்க, நிலத்தின் சொந்தக்காரர், விவசாயத் தொழிலாளியிடம் வேலையை மட்டும் வாங்குதல் கூடாது. தாமே முன்னுதாரணமாகத் திகழ வேண்டும். முதலாளி–தொழிலாளி என்ற வேறுபாடு இருக்கக் கூடாது' என்று பெரியவர் முத்துசாமி முதலியார் தம் இளமைகாலத்தில் விவசாயத் தொழிலில் தமக்கிருந்த அனுபவத்தை வெளிப்படுத்துகின்றார்:

"எங்கள் விவசாயத் தோட்டத்தில் அதிக வேலை இருந்தால் விவசாய ஆள் போடுவோம். விவசாயத் தொழிலாளியை வேலைக்கு அமர்த்தினால், நாம் முதலில் வேலைக்குப் போக வேண்டும். நாம் வரப்பு மேலே இருந்து வேலை வாங்கக் கூடாது; நிலத்தில் இறங்கி வேலை செய்ய வேண்டும். நாம் வேலைக்கு முதலில் போக வேண்டும். ஏரோட்டுவதா, பாத்திப் பிடிப்பதா, களை வெட்டுவதா, எதுவாக இருந்தாலும், நாம் முதலில் வேலை செய்ய வேண்டும். விவசாயத் தொழிலாளி வேலை பிறகு இருக்கவேண்டும். சும்மா

நின்று வேலை வாங்கினால்தான் தப்பாகச்
சொல்வான். விவசாயத் தொழிலாளியுடன்
சேர்ந்து உழைக்கும் பொழுதுதான் விவசாயம்
உருப்படும்''

**தெய்வ நம்பிக்கையில் தந்தையும் தனயனும்**

பெரியவர் முத்துசாமி முதலியாரின் தந்தையார் தெய்வ நம்பிக்கை மிக உடையவர். எந்தக் காரியத்தைச் செய்தாலும், தெய்வத்தை நினைக்கும் வழக்கம் உடையவர். தம் தந்தையின் தெய்வ நம்பிக்கையைப் பின்வருமாறு புலப்படுத்துவர்:

''என் தந்தையார் தெய்வ நம்பிக்கை
மிகுதியாக உடையவர். எந்தக் காரியத்தைத்
தொடங்கினாலும் தெய்வத்தை நினைப்பர்.
எது எழுதத் தொடங்கினாலும் பிள்ளையார் சுழி
போட்டுவிட்டுதான்-சிவமயம், கடவுள் துணை
என்று போட்டுவிட்டுதான் எழுத ஆரம்பிக்கும்
வழக்கமுடையவர். தெய்வ நம்பிக்கையை பற்றி
எந்தவித தப்பு எண்ணமும் எண்ணியதில்லை.
வாழ்வின் முன்னேற்றத்திற்குத் தெய்வம்
அவசியம் தேவை என்றவர். அதன்படி
வாழ்ந்து காட்டியவர் என்னுடைய தந்தையார்''.

**தந்தையின் அளவு சாப்பாடு**

பெரியவர் முத்துசாமி முதலியாரின் தந்தையார் விவசாயத்தில் மிகுந்த அனுபவமுடையவராக இருந்தார். எனவே, நாட்டின் நடப்பை ஓரளவு அறிந்து இருந்தார். மக்கள் பெருக்கம், மழையின்மை போன்ற காரணங்களினால் எதிர்காலத்தில் உணவுப் பற்றாக்குறை வரும் என உறுதியாக நம்பினார்,

நாட்டின் எதிர்கால நிலையை எண்ணி அந்நாளில் பெரியவர் நாகப்ப முதலியார் அளவு சாப்பாடு உண்டு வந்தார். தம் தந்தையாரின் அனுபவ அறிவைப் போற்றும் முறையில் குறிப்பிடுகின்றார் பெரியவர் முத்துசாமி முதலியார்:

"எதிர்காலத்தில் நாட்டில் அளவு
சாப்பாடு தட்டுப்பாடு வரத்தான் போகிறது
என்று நம்பிய என் தந்தையார்,
அளவு சாப்பாடுதான் சாப்பிடுவார்.
ஒருமுறை இலையில் உணவு வைத்தால்
மறுமுறை கொண்டு வந்து வைக்கக்கூடாது.
இந்த அளவு சாப்பாடே போதுமானது என்பார்".

**தந்தையின் மறைவு**

உழைப்பின் சின்னமாக விளங்கிய பெரியவர் நாகப்ப முதலியார், திடீரென்று 1936-ஆம் ஆண்டில் இயற்கை எய்தினார். தந்தையின் மறைவு பெரியவர் முத்துசாமி முதலியாரின் உள்ளத்தைப் பெரிதும் பாதிக்கச் செய்தது. நெஞ்சுரம் மிக்க தந்தையின் வழிகாட்டுதலைத் தம் உள்ளத்தில் ஏற்றார். தந்தை காட்டிய அறவழியில் இன்றும் நெறி பிறழாது வாழ்ந்து வருகிறார்.

**அண்ணனே தாய்-தகப்பன்**

பெரியவர் முத்துசாமி முதலியாரின் உடன் பிறந்தார்கள் தனிக்குடித்தனமாக இருந்தனர். தந்தை இயற்கை எய்திய பொழுது, வேறு வேறாக இருந்த குடும்பங்களை ஒன்று சேர்த்தார். 'அண்ணன் தான் தகப்பன்' என்றும், 'தாயும் தகப்பனும் அண்ணன்தான்'

என்றும், உடன் பிறந்தார்களிடையே தெளிவுபடுத்தினார்; பிரிந்திருந்த குடும்பத்தை ஒன்று சேர்த்தார்.

> "தந்தை இருந்தபோது, தனித்தனி குடும்பமாக இருந்தோம். தந்தை மறைந்தவுடன், அண்ணன் அங்கப்பன் அவர்களை அழைத்தேன். தகப்பன் இருக்கும்போது நாம் எப்படி இருந்தாலும் பரவாயில்லை. தகப்பன் இல்லாதபோது 'அண்ணன்தான் தகப்பன்' நம்முடைய குடும்பம் வேகமாக முன்னேற வேண்டும். அதற்கு நீங்கள்தான் தாயும் தகப்பனுமாக இருக்கவேண்டும்".

என்றார் பெரியவர் முத்துசாமி முதலியார். தம்முடைய அண்ணன் ஆர். ஏ. என். அங்கப்ப முதலியார் மீது வைத்திருந்த அன்பும், பாசமும், பற்றும், நம்பிக்கையும் தான் பல்லாண்டுகள் அனைவரும் ஒற்றுமையாக இருக்க காரணமாக இருந்தது.

**தங்கை மாரியாயிக்குச் சீர்கள்**

பெரியவர் முத்துசாமி முதலியாரின் அன்புத் தங்கை மாரியாயி என்பவர். தங்கையின் மீது அன்பும் பாசமும் கொண்டு இருந்தனர் உடன்பிறந்தவர்கள். தங்கையின் பூப்பு நன்னீராட்டு விழாவிற்கும், திருமணத்திற்கும் தம்முடைய அண்ணன் ஆர். ஏ. என். அங்கப்ப முதலியாருடன் சேர்ந்து, தம் தங்கைக்குச் சீர்கள் செய்தார்; குடும்பத்திற்குப் பல உதவிகள் செய்தார்.

**பஞ்சாயத்துத் தேர்தலில் தம்பி தர்மலிங்கம்**

பெரியவர் முத்துசாமி முதலியாரின் தம்பி தர்மலிங்கம் மற்ற உடன் பிறந்தோர்களைக் காட்டி

லும், சற்று வித்தியாசமானவர்; தைரியமிக்கவர்; அரசியலில் ஈடுபாடுடையவர். இவர், கவுந்தபாடியில் நடைபெற்ற பஞ்சாயத்துத் தேர்தலில் நின்றார். உடன் பிறந்தார் அனைவரும் தம்பி தர்மலிங்கத்தின் வெற்றிக்குப் பாடுபட்டனர். ஆனால், ஐந்து ஓட்டு வித்தியாசத்தில் வெற்றி வாய்ப்பை இழந்தார்.

**பிறந்த மண்ணை விட்டுக் குடிபெயர்தல்**

பிறந்த மண் இராக்கியா பாளையம். இவ்வூரில் விவசாயம் செய்து வந்த பெரியவர் முத்துசாமி முதலியாரின் குடும்பத்திற்கும் ஊரில் வாழ்ந்த சில இன மக்களிடையேயும் கருத்து வேற்றுமை உருவா யிற்று. ஊரைவிட்டுக் குடிபெயர்தலே சிறந்தது என்ற முடிவிற்கு வந்தார் பெரியவர். இராக்கியா பாளையம் எனும் கிராமத்தை விட்டுக் குடி பெயர்ந்தார். துடுப்பதி எனும் ஊரில் குடியேறினார். துடுப்பதியில் நெசவுத் தொழில் செய்தார். ஜவுளி வியாபாரம் புரிந்தார். பின்பு, வியாபாரத்தில் மேன் மேலும் செழிப்படையும் நோக்கில் 'கவுந்தப்பாடி' எனும் நகரத்திற்குச் சென்று குடியேறினார்.

கவுந்தப்பாடியில் ஜவுளி வியாபாரத்தில் தனக் கெனப் புகழ்க்கொடி நாட்டினார் பெரியவர் முத்துசாமி முதலியார். மேலும், ஜவுளி வியாபாரத் துறையில் புகழ்பெற - செல்வம் ஈட்ட எண்ணினார். இதன் காரணமாக ஈரோடு நகரில் குடும்பத்துடன் குடி யேறினார். ஈரோடு வந்து அடைந்த பின்பு, ஏற்கனவே தாம் பெற்ற புகழை மேன்மேலும் உயர்த்திக் கொள் வதற்கும், ஈட்டிய புகழை நிலை நிறுத்திக் கொள் வதற்கும் பெரியவர் முத்துசாமி முதலியாரின் பொது நலக் குறிக்கோள்கள் உறுதுணையாக இருந்தன.

**நன்மக்கட்பேறு**

"ஆர்கலி உலகத்து மக்கட் கெல்லாம்
மக்கட் பேற்றிற் பெரும்பே றில்லை"

இவ்வுலகச் செல்வங்களுள் தலையாயது மக்கட் செல்வமே. ஒருவர் பெறும் பேறுகளுள் அறிவறிந்த மக்கட்பேறுதான் சிறந்தது. நன்மக்கட்பேறு பெற்ற ஒருவர்க்கு அவர்தம் ஏழு தலைமுறைக் கண்ணும் துன்பங்கள் அணுகுவதில்லை. மேலும், நற்செயல் செய்யும் பெற்றோர்க்கே நன்மக்கள் வாய்ப்பர். பெற்றோர் முதுமை பெற்ற காலத்தே நன்மக்கள் நற்செயல் புரிவர். முதுமைக்குத் துணையாவர். வள்ளுவரும்

"தம்பொருள் என்பதம் மக்கள் அவர்பொருள்
தம்தம் வினையான் வரும்"

என்று குறிப்பிடுவர். "பெற்றோர் மனந்தூயராய் நற்செயல் செய்து, வாழ்க்கைத் துணைபெற்று, நன் மக்களைப் பெற்றாராக, அவர் முதுமை பெற்ற ஞான்று, அம்மக்களும், மனந்தூயராய் நற்செயல் செய்து, தம் பெற்றோரின் முதுமைக்கு ஏற்ற துணையாவார்" என்று பாரதிதாசன் எடுத்துக் காட்டுவர். அருள்நெறிப் புரவலர் முத்துசாமி முதலியாரும் தம் வாழ்வில் நன்மக்கட்பேறு பெற்றவர்.

**புதல்வர்கள்**

பெற்றோரின் நிறை வாழ்விற்கும், அமைதியான வாழ்விற்கும், மாசற்ற வாழ்விற்கும், நிலைத்த புகழ் வாழ்விற்கும் மக்கட் செல்வங்களே காரணமாக அமைகின்றனர்.

"பெறுமவற்றுள் யாமறிவதில்லை அறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற"

என்ற குறள் கருத்தை மெய்ப்பிக்கும் வகையில், அருள் நெறிப் புரவலர் முத்துசாமி முதலியார்–சீரங்காயம்மாள் இரண்டு நன்முத்துக்களை ஈன்றெடுத்தனர். ஒருவர் மு. அருணாசலம்; மற்றொருவர் மு. சுந்தரர்.

### நன்முத்து அருணாசலம்

பெரியவர் முத்துசாமி முதலியாரின் தலைமகன் மு. அருணாசலம் என்பவர். இவர் எண்ணியதை முடிக்கும் திண்ணிய உள்ளம் பெற்றவர். தந்தை சொல்லுக்கு மிக்க மந்திரம் இல்லை என்று கருதுபவர். மாற்றுக் கருத்துக் கருதாத உள்ளத்தினர். தந்தை வழியே நூல் வணிகத்தைத் தொடர்ந்து திறம்பட நடத்தி வருபவர். உயர் கல்வியைக் கற்காவிட்டாலும், உயர் எண்ணங்கள் உடையவர். புதிய சிந்தனைகள் வெளிப்படுத்தும் வேட்கையினர்.

### கற்றுத் துறைபோகிய சுந்தரர்

தாம் கற்காவிடினும், தம் புதல்வர்கள் கல்வி – கேள்விகளில் சிறந்தவர்களாக விளங்க வேண்டும் என விரும்பியவர் பெரியவர் முத்துசாமி முதலியார். இவர்தம் இரண்டாம் புதல்வர் சுந்தரர் கல்வியில் மிகுந்த ஆர்வமுடையவர். இவர் பொறியியல் பட்டப் படிப்பை (பி.ஈ.) அனந்தப்பூரில் பெற்றார். மேலும், டி.வி.எஸ். தொழில் நிறுவனத்தில் தொழில் பயிற்சியை இரண்டு ஆண்டுகள் பெற்றார். பின்பு, சுந்தரர் பிலாய் உருக்குத் தொழிற்சாலையில் இரண்டு ஆண்டுகள் பொறியியல் வல்லுநராகப் பணிபுரிந்தார்.


அருள்நெறிப் புரவலர் முத்துசாமி முதலியாரின் குடிவழி மக்கள்
ஆர். ஏ. என். முத்துசாமி முதலியார்
சீரங்காயம்மாள்
மு. அருணாசலம்
இலட்சுமி
மு. சுந்தரர்
முத்துலட்சுமி
அ.விஜயகுமார்
மாலதி
சித்ரா
சங்க
மேஸ்வரன்
அ.சண்முகம்
கயல்விழி
ரா.அ.நாகராசன்
சக்தி
நாகேந்திரன்
நந்தகுமார்
சந்தோஷ்-
குமார்
பிரியங்கா
ராஜேஸ்வரி
சௌந்திரராஜன்
சு.ஆனந்தன்
ஆனந்தி
சு.முருகேஷ்
மலர்விழி
சு.சிவக்குமார்
கீர்த்தி
ஐஸ்வரியா
நிஷாந்த்

இவர் கல்கத்தாவில் பணிபுரிந்தபோது இவரின் திறமையை நிர்வாகம் நன்கு உணர்ந்தது. இவரைத் தொழிற் பயிற்சி பெறுவதற்காக அமெரிக்க நாட்டிற்கு ஓராண்டு காலத்திற்கு அனுப்பியது. பின்னர், துர்க்காப்பூரில் பொறியாளராக இருபது ஆண்டுகள் பணி புரிந்தார்.

தந்தையின் தொழில் முன்னேற்றத்திற்கு உறு துணையாக விளங்க விரும்பினார் சுந்தரர். எனவே, ஈரோடு திரும்பினார். இவரின் திறமையை அறிந்த முதலியார் கல்வி நிறுவனம், 1982–ஆம் ஆண்டில் புதியதாகத் தொடங்கப் பெற்ற ஈரோடு தொழில் நுட்பப் பயிற்சிக் கல்லூரியின் முதல்வராக நியமித்தது. ஊதியம் எதுவும் பெற்றுக் கொள்ளாமல் ஆறு திங்கள் முதல்வராகப் பணியாற்றினார்.

**சுற்றத்தைப் பேணுபவர்**

பெரியவர் முத்துசாமி முதலியார்க்கு நெருங்கிய உறவினர் ராணா இலட்சுமணன். இவரின் வளர்ச்சியில் பெரிதும் அக்கறை காட்டியுள்ளார். விவசாயி குடும்பத்தில் பிறந்தவர் ராணா இலட்சுமணன். இவரை சி. ஏ., படிக்க வைக்க விரும்பினார். ஆடிட்டராக உருவாக்க எண்ணினார். கோவை, பூ. ச. கோ. கலை, அறிவியல் கல்லூரியில் புகுமுக வகுப்பில் சேர்த்துப் படிக்க வைத்தார். சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் வணிகவியல் துறைக் கல்வியில் பட்ட வகுப்பு படிக்கப் பேருதவியாக இருந்தார். நன்முறையில் படித்தப் பட்டம் பெற்றார் ராணா இலட்சுமணன். படிக்க வைத்ததோடு தம் நிதிநிறுவனத்தில் பணியில் அமர்த்திக்

கொண்டார். கைத்தறி நிதிக்குழுவில் இயக்குநராக இருந்த போது, தம் செல்வாக்கைப் பயன்படுத்திக் கூட்டுறவுச் சங்கத்தில் பணியில் அமர்த்தினார். கூட்டுறவுச் சங்கங்களில் நேர்மையற்ற சூழ்நிலை இருந்ததைக் கண்டு மனம் வருந்தினார் ராணா இலட்சுமணன். இதன் காரணமாகச் சென்னை, மதுரை போன்ற இடங்களுக்கு இடமாற்றம்செய்யப் பெற்றார்.

பின்பு, கூட்டுறவுச் சங்கப் பணியிலிருந்து விலகினார். பெரியவர் முத்துசாமி முதலியாரின் ஆலோசனைக்கிணங்க, Ultra Bags Pvt. Ltd நிறுவனத்தில் மேலாளராகச் சேர்ந்தார்.

பெரியவர் முத்துசாமி முதலியாரும், ராணா இலட்சுமணன் அவர்களின் தந்தை பெரியவர் வெங்கடாசல முதலியாரும் சம்பந்தியர். உறவுநிலைக்கு அப்பாற்பட்டு இருவரும் அன்பு பூண்டொழுகிய நல்நெஞ்சினர். அவர் தம் மகன் ராணா இலட்சுமணன் அவர்களுக்குத் திருமணம் செய்ய விரும்பினார். பெரியவரிடம் தம் விருப்பத்தை வெளிப்படுத்தினார்; பெரியவர் முத்துசாமி முதலியார் தம் தமையனார் ஆர். ஏ. என் அங்கப்ப முதலியாரின் ஒரே மகள் சரோஜா அவர்களைத் திருமணம் செய்து கொள்ள வேண்டுமென்று கட்டளை இட்டார். தம் தமையனார் பெரியவர் அங்கப்ப முதலியாரையும் திருமணத் திற்கு உடன்படச் செய்தார். பெரியவர் தம் தமையனாரின் மகள் சரோஜா அவர்களை ராணா இலட்சுமணன் வாழ்க்கை துணைவியாக மணம் செய்து வைத்தார்.

பெரியவர் ஆர். ஏ. என். அங்கப்ப முதலியார் இயற்கை எய்தினார். இவரின் மறைவிற்குப் பின்பு, குடும்பப் பொறுப்பை ஏற்றார் ராணா இலட்சுமணன். தம் மாமனாரின் பெயரில் தொழில் தொடங்கினார்; அபிவிருத்தி செய்தார்; தம் மாமனார் மீதுள்ள அன்பின் காரணமாக, பற்றின் காரணமாக அவர்தம் பெயரின் ஆங்கிலச் சுருக்கத்தைத் தம் பெயர்முன் அடையொழியாகச் சேர்த்துக்கொண்டார். இன்று 'ராணா' 'ராணா' என்று அழைக்கப் பெறுகிறார். 'ராணா' என்றாலே அனைவர்க்கும் தெரியும். பெரியவர் முத்துசாமி முதலியாரின் அருளும், ஆசியும், அன்பும், ஆதரவும் 'ராணா'விற்குக் கிடைக்கப் பெற்றதாலே, தமிழகத்திற்கு நேர்மையான-துணிவுடைய-கண்ணிய மிக்க ஒரு அரசியல்வாதியாளராகக் காட்சியளிக்கிறார் ராணா இலட்சுமணன்.

மேலும், ராணா க. வெ. இலட்சுமணன் நிறுவனத்தின் உறுப்பினராக நியமிக்கப் பெற்றார். இவரின் திறமையை உணர்ந்த முதலியார் கல்வி நிறுவனம், 'செயலாளர்' எனும் பதவியை வழங்கியது. பின்பு 1983-ஆம் ஆண்டில் செயலர் பதவியுடன் தாளாளர் பொறுப்பையும் வழங்கியது. ஈரோடு கலைக் கல்லூரியின் செயலாளர்-தாளாளர் பொறுப்பினை ஏற்ற ராணா இலட்சுமணன், பெரியவர் முத்துசாமி முதலியாரின் வழிகாட்டுதலின் பெயரில், இன்று வரையில் தம் பொறுப்பைத் திறம்பட நிறைவேற்றி வருகிறார். பெரியவர் முத்துசாமியைப் போல் ஆசிரியர்கள் - அலுவலர்கள் வளர்ச்சியில், மாணவர்கள் வளர்ச்சியில் ஆழ்ந்த ஈடுபாடு உடையவராகத் திகழ்

இன்றார் ராணா க. வெ. இலட்சுமணன். இருவரும் இணைந்து செயல்பட்டு முதலியார் கல்வி நிறுவனத்திற்குப் பெருமை சேர்த்து வருகின்றனர்.

**தோழமைக்குரிய இயல்புகள்**

எல்லாரிடமும் அன்புடனும் நேச உணர்வுடனும் பழகும் தோழமையாளர்; தோழமைக்குரிய அனைத்து இயல்புகள் அருள்நெறிப் புரவலர் முத்துசாமி முதலியாரிடம் காணலாம். இவர்தம் தோழமைக்குரிய பண்புகளைத் தவத்திரு குன்றக்குடி அடிகளார் பின் வருமாறு பாராட்டுவர்:

"அன்பு நிறைந்த செல்வர்; நல்ல கூட்டாளி; தோழமைக்குரிய இயல்புகள் பலவும் அவரிடம் (முத்துசாமியிடம்) உண்டு"

**புகழெனின் உயிரையும் கொடுக்கும் குணத்தினர்**

புகழுக்கு மயங்காதவர் இவ்வுலகில் எவரும் இலர். முத்துசாமி பெரியவர் புகழ் தரும் எந்தச் செயலையும் செய்பவர்; துணிந்து செய்வர்.

"புகழெனி னுயிருங் கொடுக்குவர் பழியெனின்
உலகுடன் பெறினுங் கொள்ளல ரயர்விலர்
அன்ன மாட்சி யனைய ராகித்
தமக்கென முயலா நோன்றாட்
பிறர்க்கென முயலுந ருண்மை யானே"

என்ற புறநானூற்றுப் பாடலுக்குப் பெரியவர் முத்துசாமி முதலியார் எடுத்துக் காட்டாக வாழ்ந்து வருபவர்.

### அச்சம் அறியாத ஆளுமை

அச்சம் ஆக்கத்தின் எதிரி; அச்சம் கொச்சைப் பண்புடையது; கீழ்மைத் தன்மை நிறைந்தது.

'அச்சமே கீழ்களது ஆசாரம்'

என்று அச்சத்தை இழித்தும் பழித்தும் வள்ளுவம் பேசுகிறது. எனவேதான், ஆன்றோர்கள்.

"அஞ்சுவது யாதொன்றுமில்லை
அஞ்ச வருவதுமில்லை"

என்று உரைத்தனர். பாரதியும் பாரதிதாசனும் அச்சமின்றி வாழும் வாழ்க்கையே வாழ்வில் உயர்வு தரும் என்று பாடினர். இந்த உண்மைக் கருத்துக் களைத் தம் வாழ்வில் கண்டவர்; உணர்ந்தவர்; கடைப் பிடித்தவர் பெரியவர் முத்துசாமி முதலியார். தம் வாழ்வில் அச்சத்தைக் காணாதவர். எதனையும் துணிவுடன் செய்யும் பழக்கமுடையவர்.

### தன்னலங் கருதாத் தகைமையாளர்

பெரியவர் முத்துசாமி முதலியார் பொதுநலங் கருதி தம் வாழ்நாளைப் பெருக்கிக் கொண்டவர். தம் குடும்ப நலம் மட்டும் எண்ணி வாழும் குறுகிய எண்ணமுடையவர் அல்லர்.

"தன்பெண்டு தன்பிள்ளை சோறுவீடு
சம்பாத்யம் இவையுண்டு தானுண்டென்போன்
சின்னதொரு கடுகுபோல் உள்ளங் கொண்டோன்
தெருவார்க்கும் பயனற்ற சிறிய வீணன்!
கன்னலடா என்சிற்றூர் என்போன் உள்ளம்
கடுகுக்கு நேர்மூத்த துவரை உள்ளம்
தொன்னையுள்ளம்......"

என்று எடுத்துக்காட்டும் பாவேந்தர், பொதுநலம் நாடும் உள்ளம் ஒவ்வொரு மனிதனுக்கும் இருக்க வேண்டும் என்பர். முத்துசாமி முதலியாரும் தொன்னை யுள்ளம் இல்லாதவர்; தன்பெண்டு, தன்பிள்ளை, சோறு, வீடு என்று குறுகிய நோக்கோடு என்றும் இருந்ததில்லை. பொது நலங்கருதியே, பொது வாழ்வில் ஈடுபட்டவர்.

### வாடிய நெஞ்சைக் கண்டபோது வாடியவர்

உலகம் மனித நேயத்தால் வாழ்கிறது. பிறர் துன்பம் கண்டு வருந்தும் உள்ளமே அருளுள்ளம் ஆகும். வருந்திய உள்ளத்தின் வாட்டத்தைப் போக்குவது அருளுள்ளம் ஆகும். அருள் சேர்ந்த நெஞ்சினர்க்கு இருள் சேர்ந்த உலகம் இன்மையாகும்.

"வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம்
வாடினேன் பசியினால் இளைத்தே
வீடுதோ றிரந்தும் பசியறாது அயர்ந்த
வெற்றரைக் கண்டுளம் பதைத்தேன்
நீடிய பிணியால் வருந்துகின் றோர்என்
நேர்உறக் கண்டுளந் துடித்தேன்.
ஈடின்மா னிகளாய் ஏழைகளாய் நெஞ்சு
இளைத்தவர் தமைக்கண்டே இளைத்தேன்"

என்றார் இராமலிங்க அடிகளார். வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் - வீடுதோறும் இரந்தும், பசியறாத வெற்றரைக் கண்ட போதெல்லாம்-நெடிய பிணியால் வாடியவர்களைக் கண்ட போதெல்லாம் - ஏழைகளைக் கண்ட போது எல்லாம் வாடினார் அருள்நெறிப்புரவலர் முத்துசாமி முதலியார்.

## ஆராய்ந்து சொல்லும் திறன்

"காசுகளை எண்ணாமல் செலவழித்து விட்டால்
திரும்பச் சம்பாதிக்கலாம். ஆனால்,
சொல் சொன்னதுதான். கேட்போர்
சான்றோராயின் ஒரே வழி பொறுத்தாள்வர்.
ஆனால், இயற்கையில், மனித சமூகத்தில்
சொற்பொறுக்கும் ஆற்றல் மிகக் குறைவு.
ஆதலால், சொற்களைச் சொல்லுமுன் ஆராய்க"

என்று தவத்திரு குன்றக்குடி அடிகளார் குறிப்பிடுவர். தவத்திரு அடிகளார் அவர்களைக் குருவாகக் கொண்ட அருள்நெறிப் புரவலர் முத்துசாமி முதலியாரும் எதனையும் ஆராயாமல் - சிந்திக்காமல் சொற்களை வெளிப்படுத்தமாட்டார். தேவைக் கேற்பவே, சொற்களைக் கையாளும் திறனைப் பெற்று விளங்குபவர்.

## செவிச் செல்வம் மிக்குடையார்

தோய பொருள் ஒரு செல்வம். கல்வி ஒரு செல்வம். சிறந்த மக்கட்பேறு ஒரு செல்வம். இவை போன்ற செல்வங்களில் எல்லாம் தலைமையானது கேள்விச் செல்வம். அஃதாவது செவிச் செல்வம். ஒருவர் செவிச் செல்வம் சிறப்பாகப் பெற்று இருப்பா ரானால், அவர் அனைத்துச் செல்வமும் பெற்றவராகி விடுகிறார்.

'செல்வத்துள் செல்வம் செவிச் செல்வம் அச்செல்வம்
செல்வத்துள் எல்லாம் தலை'

என்று வள்ளுவப்பெருந்தகை நவில்வர். கல்விச் செல்வத்தை முறையாகப் பெறாத பெரியவர் முத்துசாமி

முதலியார். செவிச் செல்வத்தினால் சிறப்புப் பெற்று திகழ்பவர். நீர் கலந்த பாலிலிருந்து, 'பால்' மட்டும் பிரித்துண்ணும் அன்னம் போல், முத்துசாமி முதலியார் பிறர் கூறும் கருத்துக்களில் நல்லவை மட்டும் எடுத்துக் கொள்வர். செவிச் செல்வத்தின்மீது அளவற்ற நம்பிக்கை உடையவர்.

**கேள்வி ஞானம்**

"மருந்தினும் இனிய கேள்வி செவியுற மாந்துவாரும்"

என்று கம்பராமாயணமும்,

"உணற்கினிய இன்னீர் பிறிதுழிஇல் லென்னும்
கிணற்றகத்துத் தேரைபோல் ஆகார்-கணக்கினை
முற்றப் பகலும் முனியா தினிதோதிக்
கற்றலிற் கேட்டலே நன்று"

என்ற பழமொழியும் கேள்வி ஞானத்தின் பெருமையை எடுத்துக் கூறுகின்றன. திண்ணைப் பள்ளியில் கல்வி கற்ற பெரியவர் முத்துசாமி முதலியார் கேள்வி ஞானத்தின் பயனைப் பெரிதும் போற்றினார். எறும்புகள், கல்தேய உணவுப் பொருட்களைச்சேர்ப்பது போல, சிறுக சிறுகக் கேள்வி ஞானத்தைச் சான்றோர் களிடமிருந்தும் கல்வியாளர்களிடமிருந்தும் மிகுதியாகப் பெற்றுக் கொண்டவர்.

**ஈத்துவக்கும் இன்பம்**

வாழ்க்கையில் ஒருவன் செல்வம் சேர்ப்பதும், அதனைத் தம் இல்லோர்க்குக் கொடுப்பதும் ஆகிய செயல்கள் மட்டும் வாழ்வின் பயன்கள் அல்ல. சேர்த்த செல்வம் பிறர்க்குப் பயன்படல் வேண்டும். செல்வத்துப்

பயன் பசிப்பிணி போக்குதலாகும். செல்வத்துப் பயன் ஈதலாகும். செல்வத்துப் பயனைப் புறநானூறு தெளிவாக எடுத்துக் கூறுகிறது:

"தெண்கடல் வளாகம் பொதுமை யின்றி
வெண்குடை நிழற்றிய வொருமை யோர்க்கும்
நடுநாள் யாமத்தும் பகலும் துஞ்சான்
கடுமாப் பார்க்குங் கல்லா வொருவற்கும்
உண்பது நாழி யுடுப்பவை யிரண்டே
பிறவு மெல்லா மோரொக் கும்மே
செல்வத்துப் பயனே யீதல்
துய்ப்பே மெனினே தப்புந பலவே"

பெரியவர் முத்துசாமி முதலியார் ஈத்துவக்கும் இன்பத்தை நன்கு உணர்ந்தவர்; செல்வத்தின் பயனை நன்கு அறிந்தவர். பிறர் வறுமையைக் கண்டவிடத்து இரக்கப்படுவர். ஊர் நடுவே பழுத்தமரம் அனைவர்க்கும் பயன்படுதல் போல், பெரியவர் முத்துசாமி முதலியார் அனைவர்க்கும் பழுத்த மரம் போன்றவர். மேலும்,

மானம், குலம் கல்வி வண்மை அறிவுடைமை
தானம் தவம் முயற்சி தாளாண்மை – தேனின்
சிவந்த சொல்லியார்மேற் காமுறுதல் பத்தும்
பசிவந் திடப்போம் பறந்து.

என்ற ஔவையாரின் பொன்மொழியின் பொருளை அறிந்து, அற்றார் அழிபசி தீர்த்தலைத் தம் கடமைகளில் ஒன்றாகக் கருதுகின்றவர் பெரியவர் முத்துசாமி முதலியார்.

**பொய்யாமை**

இல்லறத்தார்க்குரிய ஒழுக்கங்களைச் சமண நெறி எடுத்துக் கூறுகின்றது. கொல்லாமை, பொய்யாமை,

கள்ளாமை, பிறன்மனை நயவாமை, பொருள் வரைதல் என்பனவாகும். இவ்வைந்து ஒழுக்க நெறிகளைப் பெற்றாரைச் சமுதாயம் மதிக்கிறது. சமுதாயத்தால் மதிக்கப்பெறும் பெரியவர் முத்துசாமி முதலியார் வாய்மை உடையவர்; பொய்யா மொழியினர்; பொய்யாமை, வாழ்வில் எல்லா அறத்தினையும் நல்கும் என்ற நம்பிக்கையுடையவர். அகத்தூய்மையும், பொய்யாமையும் புகழைத் தரும் என்று தம் வாழ்நாளில் பட்டறிவால் உண






**பெரியாரைத் துணைக்கொண்ட பெரியவர்**

"சான்றோர் இனத்திரு"

"அரியவற்றுள் எல்லாம் அரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்"

போன்ற இலக்கிய மேற்கோள்கள் பெரியாரைத் துணைக் கோடலின் இன்றியமையாமையை எடுத்துக் காட்டுகின்றன. பெரியாரைத் துணைக்கோடல் வாழ்வில் ஒரு சிறந்த கலையாகும். அறிவில் சிறந்த பெரியார் யார் என்றும், அனுபவம், ஆற்றல் நிறைந்த பெரியார் யார் என்றும், அறிந்தும் தெரிந்தும் துணைக் கோடல் ஈரோடு முத்துசாமி முதலியாரின் தனிப்பெரும் பண்பாகும். தீயவரைக் காணின் ஒதுங்கி விடுவார். நல்லவரின் நட்பே இவர்தம் வெற்றியின் இரகசியமாகும். கயிலைமணி அ. முனுசாமி முதலியார், சி.கே. கந்தசாமி முதலியார், பி.கே. நஞ்சப்ப முதலியார், ராணா க.வெ. இலட்சுமணன், சி.கே. இராமநாதன், எஸ். வையபுரி முதலியார், கே.கே பாலுசாமி, கே எம். தண்டபாணி, கே.என். முருகேசன், பேராசிரியர். க. இராமதாசு, அம்பாசமுத்திரம் ஏ.வி.ஆர்எம். சங்கரநாராயணன்,

ஏ.கே. குமாரசாமி, பி.பி.
முன்னாள் பதிவாளர் நாராயணன் போன்றோர்
சதாசிவம், பிரபாத் ஜே.கே. பெருமைக்கு அடித்
களின் துணையே இவருடைய பெரியோர்களின் துணைக்
தளமாக இருந்தன. இந்தப் இன்றும் செய்து
கொண்டு, ஆற்றல்மிகு செயல்களை முதலியார். இவர்
வருகின்றார் பெரியவர் முத்துசாமி கொண்ட பாங்கினைத்
பெரியாரைத் துணைக் முன்னாள் முதல்வர்
தெளிவாக எடுத்துக் காட்டுவர்
க. இராமதாசு:

"யாரைக் கொண்டு என்னென்ன காரியத்தைச்
செய்ய வேண்டும் என்பதைத் திரு. முத்துசாமி
முதலியார் அறிந்து இருந்தார். மனிதனை
எடை போடுகின்ற திறன், மதிப்பிடுகின்ற திறன்
அவரிடம் நிறைய உண்டு. ஒவ்வொருவருக்கும்
இன்னென்ன குணங்கள் இருக்கிறது என்பதை
உணர்ந்து பயன்படுத்த வேண்டுமென்பதில்
அவர் நிபுணர். இந்த வகையில்தான்
திரு அ. முனுசாமி முதலியாரை நிறுவனப்
பொருளாளராக நியமனம் செய்தார். தேர்வில்
தேர்ந்தெடுக்கப்பெற்ற பதவிதான். ஆனால்,
முனுசாமி முதலியார்தான் பொருளாளராக
இருக்க வேண்டும் என்று விரும்பினார். இதற்கு
யாரும் எதிர்ப்புச் சொல்லவில்லை".
என்னிடம் ஒருமுறை பெரியவர் கூறினார்.
'முனுசாமி முதலியார் பொருளாளராக
இருக்கும்வரை எந்தக் கவலையும் இல்லை.
எதற்கும் பயப்பட வேண்டியதில்லை' என்றார்.
அவர்மேல் அவ்வளவு பூரண நம்பிக்கை.
இராமர்-இலட்சுமணர்போல் இணைபிரியாது

இருந்தனர். இருந்து வருகின்றனர்.
எந்தவொரு நிலையிலும்–துன்பத்திலும்
இருவரும் கலந்து ஆலோசித்து, செய்து
வருகிறார்கள். பெரிய பெரிய கட்டடங்கள்
கட்டுகிற போதுகூட, இஞ்சினியர்கள்
ஆலோசனை சொன்னாலும், கடைசியில்
முடிவு திரு. முனுசாமி முதலியார் அவர்களுடைய
முடிவாகத்தான் இருக்கும். திரு. அர்த்தநாரி
முதலியார்க்கு ஒரே பிள்ளையாக இருந்தாலும்,
காலம் நேரம் பார்க்காது, நிறுவனத்
தலைவருடன் சேர்ந்து, கல்லூரிக்கு நிறைய
பாடுபட்டு வருகிறார். மற்ற நிறுவன
உறுப்பினர்களும் பாடுபட்டு வருகின்றனர்''.

**காலமும் இடனும் அறிந்த அறிஞர்**

ஞாலத்தில் நெடிய புகழினைப் பெற வேண்டுமாயின் காலம் கருதி செயல்கள் புரிதல் வேண்டும்; இடன் அறிந்து செயல் ஆற்ற வேண்டும்.

''காலம் கருதி இருப்பர் கலங்காது
ஞாலம் கருது பவர்''

''தொடங்கற்க எவ்வினையும் எள்ளற்க முற்றும்
இடங்கண்ட பின்அல் லது''

என்று குறிப்பிடுவர் வள்ளுவர்.

''இடத்தொடு பொழுதும் நாடி
எவ்வினைக் கண்ணும் அஞ்சார்
மடப்பட லின்றிச் சூழும்
மதிவல்லார்க் கரிய துண்டோ?''

என்று சீவக சிந்தாமணி எடுத்துக் கூறுகின்றது.

எந்தச் செயலைச் செய்தாலும் காலம் கருதுவார்; இடன் அறிந்து செய்வார்; காலமும் இடனும் அறிந்து செய்யும் செயல் வெற்றியை நல்கும் என்பதில் உறுதி உடையவர் பெரியவர் முத்துசாமி முதலியார்.

## முயற்சி-உழைப்பு முத்துசாமியின் சொத்து

எளிய விவசாயியான இவர்-எளிய வர்த்தகரான இவர்- எளிய நெசவாளியான இவர், இன்று உலகோர் போற்றும் வகையில் உயர்ந்தார் எனில் இவர்தம் உழைப்பே-முயற்சியே மூல காரணமாகும்.

உழைப்பே இவர்தம் வாழ்வை உயர்வாக்கியது என்பர் தென்னிந்தியச் செங்குந்தர் மகாசன சங்கத்தின் தலைவர் ஜெ. சுத்தானந்தன். மேலும் இவர், முத்துசாமி பெரியவரின் உழைப்பின் பெருமையைப் பின்வருமாறு சுட்டுவர்:

> "பெரியவர் ஆர். ஏ. என். முத்துசாமி அவர்கள்
> எளிய முறையில் வாழ்க்கையைத் தொடங்கி,
> இன்றைய நிலைக்கு உயர்ந்து, புகழ்
> பெற்றதற்குக் காரணம் அவருடைய
> கடுமையான உழைப்பேயாகும். அவர்
> அடைந்துள்ள உயர்ந்த புகழ் என்றும்
> அழியாமல் நிலைத்து நிற்கும்''.

பெரியவர் முத்துசாமி முதலியார் என்றும் ஓயாத உழைப்பினைத் தம்பால் உடையவராகத் திகழ்ந்தார் என்பதை முன்னாள் முதல்வர் க. இராமதாசு பின்வருமாறு மதிப்பீடு செய்வார்:

> "திரு. முத்துசாமி முதலியார் அவர்களை
> சந்தித்ததிலிருந்து இன்று வரை அவரைப் பற்றி

என் மனத்தில் ஓடுகின்ற எண்ணம் அவருடைய ஓயாத உழைப்புதான்".

### முடியும் எனில் முடித்துக் கொடுப்பர்

ஒருவர் தம்மால் இயன்ற செயலையே செய்தல் வேண்டும். தம்மால் முடியாததை 'முடியும்' என்று சொல்லுதல் தவறாகும். தம்மால் முடியக்கூடியதை 'முடியாது' என்று மறுத்தல் தவறுடையது. இவ்விரண்டு பண்புகளும் ஒருவடைய வாழ்க்கையில் தவிர்க்கத்தக்க தீய பண்புகளாகும். அருள்நெறிப் புரவலர் முத்துசாமி முதலியார் தம்மால் முடியும் எனில் எந்நிலையிலும், முடித்துக் கொடுப்பார்; முடியாது எனில் 'முடியாது' என்று வெளிப்படையாக எடுத்துக் கூறிவிடுவார்.

### சோம்பல் இல்லாதவர்

'சோம்பித் திரியேல்' என்றார் ஔவையார். சோம்பல் முயற்சியின் முதல் எதிரி. உழைப்பின் எதிரி. சோம்பல் மிகுந்தவனை முயற்சி நெருங்குவதில்லை. பெரியவர் முத்துசாமி முதலியார் சோம்பல் இல்லாத வாழ்க்கையை உடையவர்; முயன்றால் முடியாதது ஒன்றுமில்லை என்று உணர்ந்தவர். முயற்சியும், ஊக்கமும், செயல்திறனும், ஆற்றலும் ஒருங்கே பெற்று இருப்பவர். ஒருநாளும் சோர்வுற்று-சோம்பலுடன் இருந்ததில்லை. காலையில் எழுந்ததிலிருந்து இரவில் படுக்கைக்குச் செல்லும் வரையில் ஏதேனும் பயனுள்ள செயலைச் செய்து கொண்டிருப்பவர். இஃது இவரின் தனிப் பண்புகளில் ஒன்றாகும்.

பகுத்துண்ணும் பண்பாளர்

மனிதன் தோன்றியது முதல் இறக்கும் வரை உயிர் வாழ உணவு இன்றியமையாதது. எனவே, ஒவ்வொரு மனிதனும் தாம் வாழ உணவு தேட வேண்டும். தேடிய உணவைத் தாமும் உண்டு வாழவேண்டும்; பிறருக்கும் கொடுத்து வாழ வேண்டும்.

"வயிற்றுக்குச் சோறிடல் வேண்டும் – இங்கு
வாழும் மனிதருக்கு எல்லாம்"

என்று பாரதியார் பாடியுள்ளார். திருமூலர் தம் திருமந்திர நூலில்,

"யாவர்க்கும்மாம் உண்ணும் போதொருகைப் பிடி"

என்றார். புரட்சிக் கவிஞர் பாரதிதாசன்,

"பசி என்று வந்தார்க்குப் புசி என்று
ஒருபிடி கொடுத்துப் பாரப்பா"

என்று குறிப்பிட்டுள்ளார்.

புலவர் பலரும் எடுத்துக் காட்டியுள்ள பகுத்துண்ணும் பண்பு பெரியவர் முத்துசாமி முதலியாரிடம் காணலாம். தம் இல்லம் வந்தவர்க்கும் உணவு தருவர். ஏழ்மையில் வாழும் எளியவர்க்கு உணவு கொடுத்து உதவுபவர். மேலும், பெரியவர் முத்துசாமி முதலியாரின் பகுத்துண்ணும் பண்பை விருந்தோம்பலின் தன்மையைப் பேராசிரியர் க. இராமதாசு பின்வருமாறு குறிப்பிடுகின்றார்:

"நிறுவனத் தலைவரின் குடும்பத்தினர்க்கு இன்று வரையில் இடர்ப்பாடுகள் தான். முன் அறிவிப்பு எதுவும் இல்லாமல் விருந்தினர்களை அழைத்துக்

கொண்டு வந்து விடுவார். அவர்களுக்கெல்லாம் வீட்டில் உள்ளவர்கள் விருந்தோம்பல் செய்ய வேண்டும். இவரால், இவர் மனைவிக்கும் சரி, மருமகளுக்கும் சரி, மற்றும் குடும்பத்தினர்க்கும் சரி-ஏராளமான இடையூறுகள் தான். இருந்தாலும், அதைப்பற்றி எல்லாம் பொருட்படுத்துவதில்லை. விருந்தோம்பலில் மிகுந்த நாட்டமுடையவராக இருந்தார். குடும்பத்தினரும் இவர் எண்ணத்திற்கு ஈடு கொடுத்தனர்''.

### பிறர்க்குத் தீவினைச் செய்யாமை

வாழ்வில் ஒருவர்க்கு ஒருவர் உதவிடும் நோக்கு இருத்தல் வேண்டும். இன்பம் பயக்கும் செயலையே ஒருவர் செய்திட வேண்டும். மறந்தும் பிறர்க்குத் தீவினைச் செய்தல் ஒழிதல் வேண்டும். வள்ளுவரும், 'மறந்தும் பிறன்கேடு சூழற்க; அவ்வாறு சூழின், அறம் சூழும்; கேடு எண்ணியவர்க்குக் கேடே பயக்கும்' என்றார்.

''நல்லது செய்த லாற்றீ ராயினும்
அல்லது செய்த லோம்புமி னதுதான்
எல்லாரு முவப்ப தன்றியும்
நல்லாற்றுப் படூஉ நெறியுமா ரதுவே''

என்ற புறப்பாடல், பிறர்க்குத் தீவினைச் செய்யாமையை எடுத்துரைக்கின்றது. அருள்நெறிப் புரவலர் முத்துசாமி முதலியார் பிறர்க்கு எக்காலத்தும் தீவினை எண்ணியதில்லை; செய்ததுமில்லை; தீவினை முற்பகல் செய்யின், பிற்பகல் விளையும் என்பதில் ஆழ்ந்த நம்பிக்கையுடையவர்.

**பயனிலாச் செல்லாமை**

சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல்

என்றார் வள்ளுவர். பெரியவர் முத்துசாமி முதலியார் நறுக்குத் தெறித்தாற் போல் பேசுபவர். அவரது சொற்சொல்லில் கண்டிப்பும் நாகரிகமும் இருக்கும். சொற்களை அளந்து பேசுபவர். தேவையற்ற சொற்களை– பயன் விளைவிக்காத சொற்களைப் பேசுதல் இலர்.

**சான்றாண்மை மிக்கவர்**

சான்றாண்மை என்பது மக்கள் பண்புகளில் ஒன்று. நற்குணங்கள் பலவற்றை ஒருங்கே பெற்றிருப்பவரே சான்றாண்மை யுடையவர் என்று கருதப்படுபவர். சான்றாண்மை என்பது 'எல்லாரிடத்தும் அன்புடையவராக இருத்தல், பழிபாவங்களுக்கு அஞ்சி வாழ்தல், எவரையும் உற்ற உறவாகக் கொண்டு எளியவர்க்கு உதவி செய்தல், எப்பொழுதும் உண்மை பேசுதல், பிற உயிர்களிடத்தில் அருள் உள்ளம் உடையவராக இருத்தல், என்று வள்ளுவம் குறிப்பிடுகின்றது. இதற்குச் சான்றாய் வாழ்ந்து வருபவரே பெரியவர் முத்துசாமி முதலியார்.

**பொதுநிதியில் கறைபடாதவர்**

அருள்நெறித் திருப்பணி மன்றம், முதலியார் கல்வி நிறுவனம், கவுந்தப்பாடி சுதேசி வர்த்தகர் ஜவுளி சங்கம், பெரியார் மாவட்டச் செங்குந்தர் மகாசன

சங்கம் போன்ற நிறுவனங்களுக்கும், காமாட்சியம்மன் கோயில் போன்ற பிற அமைப்புகளுக்கும் தேவையான நிதி சேர்க்கும் பொறுப்பில் மிகவும் பொறுப்புடனும் எச்சரிக்கையுடனும் நடந்து கொள்வார் பெரியவர் முத்துசாமி முதலியார். "சேகரிக்கப்படும் பணம் பொதுமக்களின் வியர்வையில் உருவான செல்வம்; பொது நன்மைக்காகச் சேர்க்கப்படும் நிதியில் களங்கம் ஏற்படக் கூடாது. அவ்வாறு களங்கம் அல்லது கறை ஏற்படுமாயின் இதுவரையில் அடைந்த பெரும்புகழை அழித்துவிடும். வெள்ளாடையில் ஏற்பட்ட ஒரு கரும்புள்ளிதான் அனைவருக்கும் தெரியும்" என்று குறிப்பிடும் முத்துசாமி முதலியார் கறைபடாத கரங்களுக்குச் சொந்தக்காரர்.

மேலும், இலஞ்சம் கொடுப்பதும், கொள்வதும் குற்றமாகக் கருதும் முத்துசாமி பெரியவரைப் பற்றி, ஈரோடு கலைக் கல்லூரியின் முன்னாள் முதல்வர் க. இராமதாசு பின்வருமாறு குறிப்பிடுவர்:

> "இலஞ்சம் என்றால் அவருக்குப் பிடிக்காது. கோபம் வந்துவிடும். ஒழுக்கம் தவறி நடந்தால், இலஞ்சம் பெற்றால், கோபத்தின் உச்ச எல்லைக்கே போய் விடுவதுண்டு. அப்போது அவர் உறவினர் என்று பார்க்கமாட்டார். தண்டனை மிகக் கடுமையாக இருக்கும். பொது இடங்களில் அவர்களைக் கண்டிப்பார். அதில் ஒன்றும் தயவுதாட்சண்யம் இருக்காது. அப்படி ஏன் நடந்து கொள்ள முடிகிறது என்றால், அவரிடம் எந்தக் குற்றமும் கிடையாது. தம்மிடம் குற்றம் இல்லாமல் இருந்தால்தான்

ஒருவர் அப்படிச் செய்ய இயலும். அப்படிப்பட்ட ஒருவர் ஈரோடு முதலியார் கல்வி நிறுவனத்தின் தலைவராக அமைந்தது மிகச் சிறப்பு''.

## பொதுநிதியில் சிக்கனம்

முத்துசாமி பெரியவர் செலவு செய்வதில் மிகவும் சிக்கனத்தைக் கடைபிடிக்கும் இயல்புடையவர். தம்முடைய செல்வமாக இருந்தாலும், பொது அமைப்புகளுக்குரிய பொது நிதியாக இருந்தாலும் அச் செல்வத்தை வீணாகச் செலவு செய்யமாட்டார். தேவையைக் கருதி செலவு செய்வார். கல்வி நிறுவனத்தில் செலவு செய்யும்முன் தேவையான செலவுதானா என்பதை நிர்வாகத்தில் உள்ளவர்களிடம் கலந்து பேசுவார். அதன்பின்பே, செலவு செய்ய அனுமதியும் வழங்குவார். இவ்வாறு இவர் பொது நிதியில் சிக்கனத்துடன் செயல்பட்டதாலே, இன்று முதலியார் கல்வி நிறுவனம், அருள்நெறித் திருப்பணி மன்றம் போன்ற அமைப்புகள் ஆலமரமாக வளர்ந்து உள்ளன; செழித்து விளங்குகின்றன.

## தலைமைப் பொறுப்பு

முத்துசாமி பெரியவரின் முயற்சியால் தோற்றுவிக்கப்படுகின்ற அமைப்புகளின் தலைமைப் பொறுப்புகளில் அமர்த்தப்படுவார்; ஏன் எனில் இவர்தம் சீரிய தலைமையில் தொடங்கப்படுகின்ற அமைப்புகள் நன்கு வளர்ச்சி பெறும் என்ற நம்பிக்கைதான் இதற்குக் காரணமாகும்.

கவுந்தப்பாடி சுதேசி ஜவுளி வர்த்தகர்கள் சங்கத்தின் தலைவராக-கவுந்தப்பாடி கலைமகள்

வித்தியாலயத்தின் தலைவராக – ஈரோடு கலைக் கல்லூரி – ஈரோடு தொழில்நுட்பப் பயிற்சிக் கல்லூரி, காமாட்சியம்மன் தொழிற்பயிற்சிக் கூடம் ஆகிய மூன்று நிறுவனங்களை நடத்தி வரும் முதலியார் கல்வி நிறுவனத்தின் தலைவராக-ஈரோடு அருள்நெறித் திருப்பணி மன்றத்தின் செயலர் – பொருளாளராக – பெரியார் மாவட்ட செங்குந்தர் மகாசன சங்கத்தின் தலைவராக – செங்குந்தர் முன்னேற்ற சங்கத்தின் தலைவராக – அருள்தரும் காமாட்சியம்மன் ஆலயத் தலைவராக – இன்றும் பொறுப்பேற்று, நிருவாகத் திறனுடன் செயல்பட்டு வருகின்றார் முத்துசாமி முதலியார்.

**நெஞ்சுரம் மிக்க நெஞ்சினர்**

இளமையில் துணிவும் நெஞ்சுறுதியும் மிகப் பெற்றிருந்தார். எனவே, இன்றும் தம் முதிய வயதிலும் நெஞ்சுரம் மிக்குடையவராக இலங்குகின்றார். ஓர் அமையம் கவுந்தப்பாடி ஜவுளி வர்த்தகச் சங்கத்தின் சார்பில் செயலர் கே. எம். தண்டபாணி அவர்கள் மைசூர், தர்மசாலா, மூகாம்பிகை திருத்தலம் போன்ற இடங்களுக்கு மகிழ்வுலா ஏற்பாடு செய்து இருந்தார். சரவண பெலகுலாவில் 60 அடி உயரமுள்ள மகாவீரர் சிலை மலை உச்சியில் இருக்கின்றது. இளைஞர்களால் மட்டுமே அம்மலையில் ஏறி, அந்தச் சிலையை அருகில் இருந்து காண முடியும். எழுப்பத்தைந்தாம் அகவை நிரம்பப் பெற்றிருந்த போதும், முத்துசாமி பெரியவர், இளைஞர் களுடன் சலியாத உள்ளத்துடன் மலை ஏறினார். நெஞ்சுரம் மிகுதியாகப் பெற்றிருந்த காரணத்தால்தான்

முதிய வயதிலும் இந்த அரிய செயல் இவரால் செய்ய முடிந்தது.

### தூய மனமே வாழ்வின் அடிப்படை

'சுவரை வைத்தே சித்திரம் எழுதவேண்டும்' என்பது முதுமொழி; முன்னோர் மொழி; உடலும் உள்ளமும் நன்றாக இருக்க வேண்டும்; அப்பொழுது தான் இல்லற வாழ்வு சிறக்கும்; இல்லறம் செம்மை பெற உழைக்க முடியும்; நாட்டுக்குழைக்க முடியும்; சமுதாயத் தொண்டு ஆற்ற முடியும்; இவற்றிற்கு அடிப்படை தூய மனமே'' என்று இளைஞர்களுக்குத் தம் அறிவுரையைச் சொற்பொழிவுகளின் வாயிலாக எடுத்துரைப்பர் பெரியவர் முத்துசாமி முதலியார்.

### செயற்கையும் இயற்கையும்

பொதுவாக அரசியல் பெருந்தலைவர்கள் – ஆட்சியின் உயர்தலைவர்கள் தங்களின் உரைகளை ஏற்கனவே தயார் செய்து, அவ்வுரைகளையே படிப்பார்கள். தவறு ஏற்பட்டுவிடக் கூடாது என்பதே இதன் நோக்கமாகும். இவ்வாறே, பெரியவர் முத்துசாமி முதலியாரும், இலக்கிய மேடை என்றாலும், கல்லூரி மேடை என்றாலும், ஆலோசனை வழங்கும் உயர்மட்டக் குழு என்றாலும், தாம் தயாரித்த உரையே முதலில் படிக்கும் வழக்கம் உடையவர். இதனைச் 'செயற்கையான உரை' என்று அந்த மேடையிலே வாய்மையுணர்வுடன் குறிப்பிடுவர். பின்பு, தம் எண்ணத்தில் தோன்றிய கருத்தினைக் குறிப்பிடும் போது, 'இது இயற்கையான உரை' என்று கூறுவர். தாம் சொல்ல வந்த கருத்தினைத் தெளிவாக அனைவருக்கும் எடுத்துக்காட்ட வேண்டும் என்பதே இவரின் நோக்கமாக இருந்தது.

**காந்தி அடிகளுடன் பெரியவர் முத்துசாமி**

இந்திய விடுதலைக்கு அயராது பாடுபட்ட அண்ணல் காந்தி அடிகள் தமிழகத்திற்கு வந்திருந்தார். தமிழகச் சுற்றுப் பயணத்தின் போது ஈரோடு நகரத்திற்கு வருகை புரிந்தார். பெரியவர் முத்துசாமி முதலியார் காந்தி அடிகளை நேரில் சந்தித்தார்; கலந்துரையாடினார்; மகிழ்ந்தார். காந்தியடிகளைச் சந்தித்த செய்தியையும், தமக்கு எவ்வாறு சுதந்திர உணர்வு ஏற்பட்டது என்பதைப் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்:

> "மகாத்மா காந்தியை ஈரோட்டில் நேரில் பார்த்தோம்; நேரில் பார்த்த பின்புதான் சுதந்திர உணர்வே வந்தது. அதிலிருந்து சுதந்திரத்திற்கு வேண்டியவைகளைச் செய்தோம். சுதந்திரம் அடைய இரண்டு கட்சியாக இருந்து போராடுவதால் எந்தப் பயனும் விளைவிக்காது; ஒரே கட்சியாக இருந்து போராட வேண்டும் என்று கருதினோம் இதிலிருந்து மாறுதல் எதுவும் எங்களிடம் இல்லை; சுதந்திரம் பெற என்ன கடைப்பிடிக்க வேண்டுமோ அதனை முழுமையாகக் கடைப் பிடித்தோம்; வேலை செய்து வந்தோம். மாறுதல் செய்யவே இல்லை;"

**பூமிதானம்**

பூமிதான இயக்கத்தலைவர் வினோபா ஒருமுறை கவுந்தப்பாடி நகர்க்கு வந்திருந்தார். இந்திய விடுதலை உணர்வு மிக்க பெரியவர் முத்துசாமி முதலியார் பூமி தான இயக்கத் தலைவரை நேரில் கண்டார்; உரை

யாடினார். நிலதானம் செய்ய முன் வந்தார். வினோபாவுடன் உரையாடிய அனுபவத்தைப் பின் வருமாறு தெரிவிக்கின்றார்:

''வினோபா பூமிதானத்துக்காகக் கவுந்தப்பாடி வந்திருந்தார்; இரவு மணி பனிரெண்டு; காத்திருந்து சந்தித்தோம்; கவுந்தப்பாடி வந்த போது நானும், இவ்வூரில் வாழும் குப்புசாமி முதலியாரும் சேர்ந்து நிலதானம் செய்ய முன் வந்தோம். அரை ஏக்கர், ஒரு ஏக்கர் எழுதித் தருகிறோம் என்று சொன்னோம். அதைச் சரியான படிக்குச் செய்யவில்லை''.

**காமராசர் மீது அளவற்ற அன்பு**

பெருந்தலைவர் காமராசர் இந்திய விடுதலைக்கு அரும்பாடு பட்டவர்களில் ஒருவர். காந்தியடிகள், நேரு போன்ற இந்திய விடுதலை உணர்வுடைய இந்தியத் தலைவர்களிடம் நெருங்கிப் பழகியவர் காமராசர்.

தமிழறிஞர்களால் – அரசியல் அறிஞர்களால் போற்றப்பட்ட பெருந்தலைவர் காமராசரிடம் பெரியவர் முத்துசாமி முதலியார் பெரும் மதிப்பும், மிகுபற்றும் வைத்திருந்தார்; நெருங்கிப் பழகினார்; இந்திய விடுதலைக்குக் காமராசருடன் இணைந்து பாடு பட்டதில் பெரியவர் முத்துசாமி முதலியார்க்கு அளவற்ற மகிழ்ச்சி உண்டு.

''இந்தியச் சுதந்திரத்திற்கு முக்கியமானவர்களில் காமராசரும் ஒருவர்; முக்கியமாக நமக்கு வேண்டியவர்; காமராசர் என்ன சொல்கிறாரோ-எதைச் செய்கிறாரோ அதைச் சொன்னோம்; அதைச் செய்தோம் மாறுதல் செய்யவில்லை''.

**ஊன் உண்ணா உயர் வாழ்வு**

சீவக சிந்தாமணியின் காப்பியத் தலைவன் காட்டு வழியாகச் செல்கிறான். வேட்டுவன் ஒருவன் வழியில் எதிர்ப்படுகிறான். சீவகன், வேட்டுவனை நோக்கி, 'நீ எம்மலையில் வாழ்கிறாய்? நீ உண்ணும் உணவு யாது? என்று வினவுகிறான். பன்றி இறைச்சியைச் சோறொடு கலந்து, அதன்கண் தேனைப் பெய்து உண்டு, பின்பு நெய்யால் ஆக்கிய கள்ளைத்தான் குடிப் பதாகக் குறிப்பிடுகின்றான். வேட்டுவன் கூறியதைக் கேட்டு சீவகன் மனம் வருந்துகிறான். சீவகன் வேட்டுவனை நோக்கி,

> ''முன் பிறவியில் உயிரைக் கொன்று ஊனை
> உண்டதால் நீ இப்போது வேடனாகப்
> பிறந்துள்ளாய்! இனி இத்தகைய உணவினைக்
> கைவிட்டு விடுக''

என்று அறிவுரை கூறுகிறான். மேலும்,

> ''ஊனினை உண்டு உடம்பினைப்
> பெருக்கி, நரகத்தில் உறைவது
> நன்றோ? அல்லது ஊன் உண்ணாது
> உடம்பினை வாட்டி தேவராய்
> உயர்வது நன்றோ?''

என்று எடுத்துரைக்கிறான் சீவகன். 'காட்டில் கிடைக்கும் கிழங்கு முதலியவற்றை உண்பதால், இறுதியில் பேரின்பம் கிடைக்கும்' என்று வேடனுக்கு அறிவுறுத்துகிறான் சீவகன்.

''ஊன்சுவைத் துடம்பு வீக்கி நரகத்தில் உறைதல்'

என்று சமணக் காவியமான சீவகசிந்தாமணியும்

"ஊனைத்தின் றூனைப் பெருக்குதல் முன்னின்னா" என்று இன்னா நாற்பதும் ஊன் உண்ணாமை சிறந்த ஒழுக்கம் என்று குறிப்பிடுகின்றன. ஊன் உண்ணாமை ஒருவனை நரகத்திலிருந்து காப்பாற்றுகிறது; தேவர் உலகில் சேர்க்கிறது.

திருவள்ளுவரும், புலால் மறுத்தல் அதிகாரத்தில் ஊன் உண்டல் ஒழிதல் வேண்டும் என்பர்.

"தன்ஊன் பெருக்கற்குத் தான்பிறி தூன்உண்பான்
எங்ஙனம் ஆளும் அருள்"

"செயிரிற் றலைப்பிரிந்த காட்சியார் உண்ணார்
உயிரிற் றலைப்பிரிந்த ஊன்"

இலக்கியத்தில் போதிய பயிற்சி இல்லாது இருந்தாலும், இயற்கையான அனுபவ அறிவு நிரம்பப் பெற்றிருந்தார் அருள்நெறிப் புரவலர். ஊன் உண்பதால் அருளுடைமை இயைவது அன்று என்று உணர்ந்திருந்தார். தம் வாழ்நாளில் ஊன் உண்ணாமல் இருப்பது சிறந்த ஒழுக்கமாகக் கருதினார். இலக்கியம் சாற்றும் புலால் மறுத்தலை வாழ்வின் நெறியாகக் கருதி வாழ்ந்து வருகின்றார். ஊன் சுவைத்து உடம்பு வீங்கி நரகத்தில் உறைதலை வெறுப்பவர் அருள்நெறிப்புரவலர் முத்துசாமி முதலியார்.

தான் மட்டும் ஊன் உண்ணுதலை வெறுத்தார் என்பதில்லை. தாம் பொறுப்பேற்றுள்ள கல்வி நிறுவனங்களில் உள்ள மாணவர் விடுதிகளிலும் புலால் சமைப்பதற்கும் உண்பதற்கும் தடை விதித்தார்; ஆசிரியர்களையும் புலால் உண்பதைத் தவிர்க்க வேண்டினார்; இவர்தம் புலால் மறுப்புக் கொள்கையை

பேராசிரியர் க. இராமதஸ் பின்வருமாறு குறிப்பிடு கின்றார்:

> "கல்லூரி விடுதியைப் பொருத்தவரை, மாமிச உணவைப் பிடிவாதமாக எதிர்த்தார்; கூடாது என்றார்; கல்லூரி உணவு விடுதியில் மாமிச உணவே கூடாது என்று
> திரு. முத்துசாமி முதலியாரும் திரு. முனுசாமி முதலியாரும் பிடிவாதமாக இருந்தனர்; சமைக்கக் கூடாது என்றனர். மாமிச உணவே இல்லை; இதுவும் மற்ற கல்லூரிகளில் பார்க்க முடியாத ஒன்று".

**கயாவில் விட்ட பழக்கம்**

'ஆங்கிலேயரை இந்நாட்டை விட்டுவிரட்ட வேண்டு மானால் உடலை வலிமைப்படுத்த மாமிசம் உண்ண வேண்டும்' என்று நண்பர்கள் கூறிய ஆலோசனையால் புலால் உண்ணாத குடும்பத்தில் பிறந்த மோகன்தாஸ் காந்தி மாமிசம் உண்டார்.

பின்பு, தம்முடைய தவறை உணர்ந்தார். காந்தியார் திருந்திக் கொண்டார். பெரியவர் முத்துசாமி முதலியார் தாம் பிறந்தது முதல் இன்று வரையில் புலால் உணவு உண்டார் இலர். இவர் 'புலால் உண்ணாமை' எனும் கொள்கையில் உறுதியுடன் இருக்கிறார். இஃது இவரின் இயல்பான கொள்கையில் ஒன்றாகும். மேலும், வட இந்திய புண்ணிய தலங்களுக்குச் சென்ற போது, கயாவில் நீத்தார் கடனாக 105 தலைமுறைக்குரிய சடங்கு செய்தார். அந்தச் சடங்கில், நீத்தார்கடன் கொடுப்பவர் தம் பழக்கங்களில் மூன்றினை விடுதல் வேண்டும். பெரியவர் முத்துசாமியிடம் எந்தப்

பழக்கத்தை விடுவீர்கள் என்று உடன் சென்ற ராணா இலட்சுமணன் அவர்கள் வினவினார்;

> "புலால் உண்பது பாவமானது. அறிவு தெளிந்த நாள் முதல் புலால் உணவு உண்ணாமல் இருந்து வருகிறேன். அவ்வாறு கடைப்பிடித்து வரும் அந்தப் பழக்கத்தை-நல்ல பழக்கத்தைத் தொடர்ந்து கடைப்பிடித்து வருதல் தீயப் பழக்கத்தை விட்டதற்குச் சமமானது."

என்றார் பெரியவர் முத்துசாமி முதலியார். இந் நிகழ்ச்சி இவருடைய புதிய சிந்தனையையும், புதிய நோக்கையும், கொள்கையில். உறுதியையும் வெளிப் படுத்தலாகும்.

**கொல்லாமை**

இந்தியச் சமயங்கள் யாவும் மானிடப் பிறவியின் பயனை முழுமையாக எய்துவதற்கு ஒழுக்க முறைகளை ஏற்படுத்தியுள்ளன. இம்மைப் பயனையும் மறுமைப் பயனையும் பெறுவதற்கு ஒழுக்க நெறிகள் தோற்று விக்கப் பெற்றன. புத்தர் தோற்றுவித்த பேரறங்களில் சிறந்தவை ஒழுக்க நெறிகளே ஆகும், கொல்லாமை, கள்ளாமை, காமமின்மை, பொய்யாமை, கள் ளுண்ணாமை ஆகியன 'பஞ்சசீலம்' என்று பௌத்த பீடம் குறிப்பிடுகிறது.

சமண சமயமும் கொல்லாமை, பொய்யாமை, கள்ளுண்ணாமை, பிறன் மனை நயவாமை, பொருள் நயவாமை ஆகியவை இல்லறத்திற்குரிய ஒழுக்கங் களாகக் குறிப்பிடுகின்றது.

பௌத்த சமயமும் சமண சமயமும் கொல் லாமையை மிகவும் வலியுறுத்துகின்றன. கொல்லாமை

ஒழுக்க நெறிகளில் முதன்மையாக எடுத்து உரைக்கின்றன.

அருள்நெறிப் புரவலர் முத்துசாமி முதலியார் பௌத்த சமய-சமண இலக்கியத்தைக் கற்றது இல்லை. ஆனால், சமயங்கள் எடுததுரைக்கும் ஒழுக்க நெறிகளில் ஒன்றான 'கொல்லாமை' எனும் உயரிய ஒழுக்க நெறியில் நின்று, வாழ்ந்து வந்தார்: வாழ்ந்து வருகின்றார்.

ஓர் அமையம், இவர் ஆற்றிய மேடை சொற்பொழிவில்,

"உயிரைக் கொன்றிடவே-முயலும்
ஒருவனுக்கு அந்த
உயிரின் மேலேதும்-உரிமை
உண்டா? கூறும் ஐயா!
உயிரைக் காப்பவனே-என்றும்
உயிருக்கு உடையவனாம்!"

என்ற தேசிய விநாயகம் பிள்ளையின் பாடல் வரிகளையும் எடுத்துக்காட்டி, உயிர்களைக் கொல்லுதல் பாவம் என்றார்,

உயிரினங்களுள் எதனையும் கொல்லாமலும், கொல்ல நினைக்காமலும் மற்றவர் கொல்வதற்கு மனம், மொழி, மெய்களால் உடன்படாமலும் இருக்க வேண்டும் என்பர் அருள்நெறிப் புலவர் முத்துசாமி முதலியார்.

**தமிழ் மொழியின் மீது பற்று**

"யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல்
இனிதாவது எங்கும் காணோம்;

... ...
... ...
தேமதுரத் தமிழோசை உலகமெலாம்
பரவும்வகை செய்தல் வேண்டும்
... ...
.... ...
சேமமுற வேண்டுமெனில் தெருவெலாம்
தமிழ் முழக்கம் செழிக்கச் செய்வீர்!"

என்று பாரதியாரும்

"வாழ்வினில் செம்மையைச் செய்பவள் நீயே
மாண்புகள் நீயே என் தமிழ்த்தாயே
வீழ்வாரை வீழாது காப்பவள் நீயே
வீரனின் வீரமும் வெற்றியும் நீயே"

என்று பாரதிதாசனும் தமிழின் பெருமையை–ஏற்றத்தைப் பாடுவார்கள். இத்தகைய சிறப்புகள் பெற்ற தமிழ்மொழி, பிறமொழிகளின் ஆதிக்கத்தால் இதன் வளர்ச்சி தடைப்பட்டது. தமிழின் மீதுள்ள பற்றின் காரணமாகப் பல மேடைகளில் தமிழின் வளர்ச்சிக்கு ஆக்கப் பூர்வமான சிந்தனைகள் வழங்கினார் அருள் நெறிப்புரவலர் முத்துசாமி முதலியார்.

தமிழ்மொழி சிறப்பான இடத்தைப் பெறவேண்டுமாயின், கல்வி நிலையங்களில் தமிழ்மொழியே பயிற்றுமொழியாக இருக்க வேண்டும் என்றார்.

"தமிழ்மொழியின் வளர்ச்சியில் ஒவ்வொரு
தமிழனுக்கும் அக்கறை இருக்கவேண்டும்;
பிறமொழிகள் மீதுள்ள பொய்யான பற்றை
விடவேண்டும்; ஒவ்வொருவரும் தம் பெயர்
முன் குறிப்பிடும் தந்தையின் பெயர் தமிழ்

மொழியிலே இருக்க வேண்டும். இதுவே, தமிழ் வளர்ச்சியின் முதற்படி".

என்று மேடைதோறும் முழங்குவர் அருள்நெறிப் புரவலர் முத்துசாமி முதலியார். மேலும், தம்முடைய கையெழுத்து தமிழ்மொழியில் இருப்பதோடு, தாம் மேடைகளில் குறிப்பிடுதல் போல், தந்தையாரின் பெயரைத் தமிழ்மொழியிலே குறிப்பிடுகின்றார். மேலும், தமிழரின் வளத்தையும் வாழ்வையும் உயர்த்த வல்லது தமிழ்மொழி. ஆனால், தமிழ்நாட்டில் தாய்மொழியாகிய தமிழ்மொழி வழியாகக் கல்வி கற்பிக்கவில்லை.

ஏறக்குறைய முப்பது ஆண்டுகள் கல்விப் பணியாற்றிய முத்துசாமி பெரியார், தாய்மொழிச் கல்வி இன்மையால் விளைந்துள்ள அவலநிலையினைச் சுட்டிக்காட்டியுள்ளார்; தமிழ்நாட்டில் கல்வி நிறுவனங் களில் பாடமொழியாகத் தமிழ்மொழியே இருக்க வேண்டும் என்றும், அப்பொழுதுதான் மாணவன் பாடக் குறிப்புகளை எளிதில் புரிந்து கொண்டு, கல்வியில் மேம்பட முடியும் என்றும் பெரியவர் முத்துசாமி முதலியார் கல்வியாளர்களின் அவைகளில் எடுத்துரைத்துள்ளார். இவர் மொழிக் கொள்கையில், தெளிவுடையவராகவே இருந்து வருகிறார்.

**சமத்துவ உள்ளம்**

இந்திய நாடு விடுதலை பெறவேண்டும் என்று பாடுபட்ட காந்தியடிகள் வாழ்ந்த காலத்தில் வாழ்ந் தவர் பெரியவர் முத்துசாமி. எனவே, இயற்கையாகவே, இவரிடம் சமத்துவ உள்ளம் அமைந்திருந்தது.

பிறப்பால் கற்பிக்கப்படும் உயர்வு தாழ்வை வெறுத்தார். சுதந்திர வேட்கை நாட்டில் நிலைபெற வேண்டின், நாட்டு மக்களிடம் சமத்துவ உணர்வு மேலோங்கிட வேண்டும் என்று கூறுவர்; எல்லோரும் சமம் என்பதே இவர்தம் கொள்கையாக இருந்து வருகிறது. இவர் சாதி பேதமின்றி,சமய பேதம் இன்றி, உயர்ந்தவர் – தாழ்ந்தவர் என்னும் பேதமின்றி அனைவரின் இன்ப – துன்ப நிகழ்ச்சிகளில் பங்கு கொள்ளும் சமத்துவ உள்ளத்தினர் ஆவர்.

## பெண்மையைப் போற்றும் பெருங்குணம்

பெண்ணினத்திற்குரிய மதிப்பையும் மரியாதையும் என்றும் வழங்கி வருகின்ற நெறியாளர்; பெருந்தகை முத்துசாமி முதலியார் என்று குறிப்பிடலாம். இவர், பெண்களைத் தாயாகக் கருதுகிறவர்; தெய்வமாக நினைத்துப் போற்றுபவர். பெண்களுக்கு ஆண்களைப் போல் சம உரிமை கொடுக்க வேண்டும் என்பர்; பெண்ணின் பெருமையை மதிக்கத் தவறும் தமிழ் ஏட்டையும் இலக்கியத்தையும் வெறுத்து ஒதுக்க வேண்டும் என்பர்.

## வரதட்சணையை இளைஞர்கள் எதிர்க்க வேண்டும்

இந்நாட்டின் சமுதாய அமைப்பில் வரதட்சணை எனும் கொடுமை நிலவி வருகிறது. பல்வேறு நிலையில் இந்தக் கொடுமை நடந்து வருகின்றது. இஃது இயற்கை நியதிக்கு முரணானது. இந்த வரசட்சணைக் கொடுமை பெண்ணினத்தை அழித்து வருகிறது. இந்தக் கொடுமை யிலிருந்து சமுதாயம் விடுதலை பெற வேண்டும் என்றால், இளைஞர்கள் வரதட்சணை வாங்குவதில்லை

என்ற உறுதி மேற்கொள்ளவேண்டும் என்று வலியுறுத்துவர் பெரியவர் முத்துசாமி முதலியார்.

**மதுவைத் தொடாத மாமனிதர்**

> "உலக உயிர்களுள் தலையாய சிறப்பைப் பெற்றிலங்குபவன் மனிதன்; அவன் தன் வாழ்வில் அன்பு, இன்னா செய்யாமை, வாய்மை, பிறர் நலம் போற்றுதல் முதலான அரும்பெரும் அறங்களைக் கைக்கொண்டு, நல்லொழுக்கத்துடன் அருள்நெறி கடைப்பிடித்து ஒழுகுகின்ற ஒழுக்க வாழ்வே, 'தனிமனித அறம்' எனப் போற்றப்படுவதாகும். உலகில் அறங்களைக் காத்து ஓம்புதற்கென்றே இயற்கையில் உருக்கொண்டுள்ள ஒன்றே மனிதப் பிறவியாகும்''.

என்று திரு. வி. க. தனிமனித அறத்தை வலியுறுத்திக் கூறுவர். தனிமனித அறத்திற்கு அடித்தளமாக விளங்குவது தனிமனித ஒழுக்கமாகும். தனிமனித அறம் ஓங்கினால் சமுதாய அறம் ஓங்கும்.

தனிமனித அறத்திற்கு-ஒழுக்கத்திற்கு இலக்கணமாக காந்தியடிகள், திரு. வி.க. போன்றோர் வாழ்ந்தனர். அருள்நெறிப்புரவலர் முத்துசாமியும் தனிமனித அறத்தின் ஒரு கூறாகிய மதுவை நாடியதில்லை. ஏழை எளிய மக்கள் மதுவின், கொடுமையால் வறுமையில் வாடுவதை எண்ணி மனம் வருந்தினார்.

சான்றோர்கள் எடுத்துரைக்கும் மதுவிலக்கு கொள்கையைப் பின்பற்றி வாழ்ந்துவரும் பெரியவர்

முத்துசாமி, தாம் செல்லும் இடங்களிலும், மேடைகளிலும் மதுவை விலக்க வேண்டும் என்று குறிப்பிடுவர். குறிப்பாக, இளைஞர்கள் மதுவிற்கு அடிமையாகக் கூடாது என்று வலியுறுத்துவர்.

### தீண்டாமையை எதிர்த்த தீரர்

'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்'

'பிறப்பால் உயிர்களிடத்தே வேற்றுமை இல்லை. மனிதனின் தன்னலமே தீண்டாமையைச் சமுதாயத்தில் உருவாக்கியது. தீண்டாமை சமுதாயக் கொடுமைகளில் ஒன்று. எல்லோரும் ஓர் இனம்; 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' எனும் கொள்கைக்கு மாறானது தீண்டாமை' என்றார் பெரியவர் முத்துசாமி முதலியார்.

"தீண்டாமை என்பது இந்து மதத்திலுள்ள ஒரு கறை" என்று கூறுவர் காந்தியடிகள். காந்தீயக் கோட்பாடுகளில் மிகுந்த ஈடுபாடு கொண்ட பெரியவர் முத்துசாமி முதலியார் 'தீண்டாமை' எனும் கொடிய பழக்கத்தை வெறுத்தார்; எதிர்த்தார்; தீண்டாமை என்ற மாசு இந்தச் சமுதாயத்திலிருந்து நீங்க வேண்டும் என்று விரும்பினார்; கடவுள் மனித குலத்தை ஏற்றத் தாழ்வுடன் படைக்கவில்லை என்று நம்பினார்; நாட்டின் வளர்ச்சி தீண்டாமையால் தடைப்படுகின்றது என்று கருதினார்; சமுதாயம் முன்னேற 'தீண்டாமை' எனும் தீயநெறி மாய்தல் ஒன்றே வழி' என்றார் முத்துசாமி முதலியார்.

### கலப்பு மணத்தை ஆதரித்தல்

காந்தியடிகள், திரு. வி. க., பாரதியார், பெரியார், பாரதிதாசன், அண்ணா போன்றோர் சாதியின்

கொடுமையை நாட்டுமக்களுக்கு எடுத்துக்காட்டினர். சாதி–சமுதாயத்திலிருந்து ஒழிய வேண்டும் எனில் கலப்பு மணம் பெருக வேண்டும் என்றார். ஈரோடு பெரியவர் முத்துசாமி முதலியார் 'சாதிப்பாகுபாடு சமுதாயத்தின்கேடு' என்றார்; கலப்பு மணமே சாதிப் பாகுபாட்டை நீக்கும் என்றும், சாதிப்பாகுபாட்டைப் போக்குவதற்கு இதுவே மாமருந்து என்றும் கருதினார்; 'கலப்புமணம் பெருகினால் பிறப்பு வேற்றுமை மறையும்' என்பர் பெரியவர் முத்துசாமி. பல கலப்பு மணங்களை முன்னின்று நடத்தினார். 'கலப்பு மணம்' மூலம் சாதி உணர்வைப் போக்க முயன்றார். தம் இல்லத்திலேயே உட்பிரிவு சாதிகளைத் தாண்டி மணம் முடித்த பெருமைக்கு உரியவர் இவர்.

### மூன்று செருக்குகள் விட்டுவிட வேண்டும்

சாதியில் உயர்ந்தவர் என்னும் சாதிச் செருக்கும், தம்மைவிட கல்வியில் சிறந்தவர் வேறொருவர் எவருமில்லை என்னும் கல்விச் செருக்கும், பெருஞ் செல்வர்க்கு ஏற்படும் செல்வச் செருக்கும் ஆகிய மூன்று செருக்குகள் மனிதனின் உள்ளத்திலிருந்து விடுபட வேண்டும் என்று பெரியவர் முத்துசாமி முதலியார் அடிக்கடி தம்முடைய சொற்பொழிவுகளில் குறிப் பிடுவர்.

### ஆயிரம் பிறைகண்ட அண்ணல்

ஒருவர் ஐம்பது ஆண்டுகள் வாழ்ந்தால் பொன் விழா கொண்டாடுவர். அறுபது ஆண்டுகள் அயராது உழைத்து வாழ்வார்க்கு மணிவிழா கொண்டாடுவர்; எழுபத்தைந்து ஆண்டுகள் சிறப்பாக வாழ்ந்தோர்க்கு

வைரவிழா கொண்டாடுவர். பெரியவர் முத்துசாமி முதலியார் தம் 80 ஆண்டுகளில் தமக்காக - தம் குடும்பத்திற்காக வாழ்ந்தது குறைவாகும். தம் வாழ்நாளில் பெரும் பகுதியைப் பொதுப் பணிக்காக - கல்விப் பணிக்காகச் செலவிட்டவர்.

80 ஆண்டுகள் நிறைந்த இந்த முதிய இளைஞர் ஒவ்வொரு அமாவாசையில் மூன்றாம் நாள் வானில் தோன்றும் பிறையைக் காணும் வழக்கமுடையவர். ஈரோட்டில் இருந்தாலும், வெளியூர்களில் இருந்தாலும், தவறாமல் மூன்றாம் பிறையைப் பார்ப்பர்.

ஒருவர் தம் வாழ்நாளில் ஆயிரம் பிறைகளைக் கண்டால் 80 வயது நிறைவு பெற்றிருக்கும் என்று பெரியோர் கூறுவர். 80 வயது நிறைந்த ஈரோட்டு முத்துசாமி முதலியார் ஆயிரம் பிறைகளைத் தம் வாழ்நாளில் கண்ட பெருமையையும் பேற்றினையும் பெற்றவராவர்.

**மனிதருள் மாணிக்கம்**

மானிட சமூகத்தில் பிறந்த அனைவரும் பேரும் புகழும் பெற்று விடுவதில்லை. ஒரு சிலரே பெரும் புகழினைப் பெறுகின்றனர்; அருஞ் செயல்கள் செய்பவரே புகழினைப் பெறுகின்றனர்.

"வாழ்வார் வாய்வெய்தி ஞாலம் புகழவே"

என்ற கருத்திற்கு ஒப்ப, முத்துசாமி முதலியார் பல அருஞ்செயல்கள் செய்த மனிதருள் மாணிக்கம்; தமிழர்க்கும், தாம் சார்ந்த இனத்திற்கும், சமயத்திற்கும் அளவிடற்கரிய அருஞ்செயல்கள் ஆற்றியவர்; ஆற்றி வருபவர். இவர்தம் அருஞ்செயல்களை முதலியார்

கல்வி நிறுவனத் துணைத்தலைவர் கே. எம். தண்டபாணி பின்வருமாறு குறிப்பிடுவர். இஃது அருள்நெறிப் புரவலரின் நிலைத்த புகழிற்கு மேலும் புகழ் சேர்ப்ப தாகும்.

''சீரோடு விளங்கும் ஈரோடு தனிலே
பேரோடு விளங்கும் பெரியாரே! செங்குந்தர்குல
விளக்கே! இழையினை நோக்கும்கைக்
கோளன்போல
நும்மொழியினைக் கேட்கும் நம்மினம் தானே!

கடமைக்குக் கன்னல்விழி காட்டி என்றும்
கயமைக்குக் கனல்விழி காட்டி நாளும்
திறமைக்குப் பச்சைக்கொடி காட்டி என்றும்
தீமைக்குச் சிவப்புக்கொடி காட்டும் ஏந்தலே!

கல்விப்பணியில் ஆக்கம் ஊக்கம் உணர்த்தி
கடவுள்பணியில் சிந்தனைக் கருத்துடன் செலுத்தி
செம்மார்ந்த செங்குந்தர்குல வாழ்விற்கு
செழுமழையாய்
நம்மார்ந்த குலம்வாழ வழிகாட்டிவரும் வள்ளலே!

அன்பும் அசைவிலா ஊக்கமும் தளர்விலா
உழைப்பும் உயரிய பேற்றினைப் பெற்றிட்ட
மனிதருள் மாணிக்கமே! முத்தான
முத்துசாமியே!
மண்ணுள்ள வரைநீரே விண்ணாய் வாழ்வீரே!

### சமுதாயத்தின் வைப்பு நிதி

வங்கியில் வைத்துப் பாதுகாக்கும் பொதுநிதி சமுதாய மக்களுக்குத் தேவையான காலத்தில் பயன் படும். இதனைப் போலவே, சமுதாயத்தில் மக்கள்

நலன் கருதி உழைப்பவர்களின் உழைப்பும் ஒரு வைப்பு நிதியைப் போன்றதேயாகும். பொதுவாழ்வில் ஈடுபட்ட முத்துசாமி முதலியாரும் ஒரு வைப்பு நிதி போன்றவரே.

"செயல்திறன்மிக்க ஆர்.ஏ.என்.எம்.
நம்முடைய சமுதாயத்திற்கு ஒரு
வைப்புநிதி போன்றவர்"

என்றார் தவத்திரு குன்றக்குடி அடிகளார், இது பெரியவர் முத்துசாமி முதலியாரின் பொது வாழ்விற்குத் தந்த செப்புப் பட்டயமாகும்.

# கல்வித் தொண்டு

"தொண்டு அல்லது சேவை என்று சொல்லுகிற பொழுது சிறை செல்வதையும், தடியடிகள் தாங்கு வதையும், கண்ணீர்ப்புகை, துப்பாக்கிக் குண்டு இவை ஏற்பதையும் தான் பொதுவாகக் கருதுகின்றார்கள். இவைகளை ஏற்பவர்தான் தொண்டர்கள் என்பதில்லை. அடிமை வாழ்வை அகற்றவும், உரிமை நலனைப் பெறவும் முனையும் தற்காலத் தொண்டர்களுக்கு இவை பரிசில்களாகக் கிடைக்கலாம். எவ்வகைத் தொண்டுக்கும் எக்காலத்துக்கும் இவையே கைம்மாறு என்று கூறுதல் சாலாது, உலகிலே அமைதியான முறையில் செய்யத்தகும் நற்பணிகளும் பல உள்ளன. மனிதனைத் தலையெடுக்கவொட்டாமல் ஆழ்த்தி வைக்கின்ற அடிமையென்னும் புறப்பகையை அழித் தொழிக்கும் பணி எவ்வளவு சிறந்ததோ அதுபோல மனிதனை ஒளிபெறவொட்டாமல் ஆழ்த்தி விடுகின்ற அறியாமை யென்னும் அகப்பகையை அழித்தொழிக்கும் தொண்டும் ஒப்பற்ற தொண்டேயாகும்."

அறியாமை எனும் இருள் அகற்ற, அறிவு எனும் ஒளி பரப்ப, மனிதனை முழுமனிதனாக்கும் கல்வித் தொண்டே இறைத் தொண்டாகும். செட்டி நாட்டு அரசர் அண்ணாமலை செட்டியார், பச்சையப்ப

வள்ளல், அவிநாசிலிங்க செட்டியார், ஈரோடு மீனாட்சி சுந்தர முதலியார் போன்ற பெரியோர் பலர் தமிழ் நாட்டில் தோன்றி கல்வித் தொண்டாற்றியுள்ளனர்.

ஈரோடு அருள்நெறிப் புரவலர், ஆர்.ஏ.என். முத்துசாமி முதலியாரும் அறிவுப் பயிர் செழிக்க, தம் வாழ்நாளைக் கல்வித்தொண்டிற்கு அர்ப்பணித்துக் கொண்ட பெருமைக்குரியவர்.

**மக்கள் தொண்டே மகேசன் தொண்டு**

மனித குலத்தில் செல்வர்கள் உண்டு; வறியவர்கள் உண்டு; செல்வர்கள், செல்வத்தின் துணைகொண்டு கல்வியறிவு பெறுகின்றனர்; வாழ்வில் உயர்கின்றனர். வறியோர்கள் செல்வம் இன்மையால் கல்வியறிவு பெற இயலாமல் போகின்றனர். இந்த இழிநிலை சமுதாயத்தில் நிலவியது. எனவேதான், அனைவர்க்கும் கல்வி எனும் கோட்பாடு உருவாயிற்று. எழுத்தறி வித்தவன் இறைவனாகக் கருதப்படுகிறான். மக்கள் தொண்டில் அறியாமையை அகற்றும் கல்வித் தொண்டே தலையாயத் தொண்டாக மதிக்கப் பெறுகிறது. பாரதியாரும்

“அன்ன சத்திரம் ஆயிரம் வைத்தல்
ஆலயம்பதி னாயிரம் நாட்டல்
பின்னருள்ள தருமங்கள் யாவும்
பெயர் விளங்கி யொளிர நிறுத்தல்
அன்ன யாவினும் புண்ணியங் கோடி
ஆங்கோர் ஏழைக் கெழுத்தறி வித்தல்”

என்று கூறினார்.

"கல்வியினால் மனிதரெலாம்
இனம் துறப்பார்
கல்வியினால் நாகரிக
வளர்ச்சி யுண்டு
கல்வியினால் பண்பாட்டின்
வாழ்வும் உண்டு
கல்வியினால் பணம்கூட
கால்தூ சாகும்
கல்வியினால் மனிதமனம்
ஒருமை காணும்".

என்றார் பாரதிதாசன்.

இத்தகைய சிறப்புடைய கல்வியைச் சமுதாயம் பெற விழைந்த பல பெரியோர்களில் – பல சான்றோர்களில் – பெரியவர் ஆர்.ஏ.என். முத்துசாமி முதலியாரும் ஒருவர். தாம் பெறாத கல்வியறிவைச் சமுதாயம் பெற வேண்டும் என விழைந்தார்.

**கல்வித் தொண்டே பெரிதாகக் கருதியவர்:**

பெரியவர் ஆர்.ஏ.என். முத்துசாமி முதலியார் ஆன்மீகத்தில் மிகுந்த நம்பிக்கை யுடையவர்; இறைப் பற்று மிகவுடையவர். ஆனால், இறைத் தொண்டு, கல்வித் தொண்டு இவற்றில் எது முதன்மையுடையது என்றதொரு வினாத் தொடுக்கப் பெற்றால், கல்வித் தொண்டே இந்தச் சமுதாயத்திற்கு முதன்மையாக வேண்டும் என்பர். கல்வியை இரு கண்களாகப் போற்றிய பண்பு இன்றும் இவரிடம் காணலாம்.

"ஆன்மீகத்தில் பற்று உண்டு. அதற்காக
வீண்நேரம் செலவு பண்ணமாட்டார்.

கோயிலுக்குப் போய் வீண் செலவு பண்ணமாட்டார். கோயிலுக்குப் போவது அதிகப்பிரியமா? கல்லூரிக்குப் போவது அதிகப் பிரியமா? என்று கேட்டால் கல்லூரிக்கு வந்து விடுவார். ஆன்மீகத்தில் பற்று உண்டு. அதே சமயம் சமூகப்பணியில், கல்விப் பணியில் ஆர்வம் அதிகம் உண்டு. இரண்டு பேர் இவரிடம் போய், கோயிலுக்குப் போகலாம். பாலிடெக்னிக் போகலாம் என்று கூப்பிட்டால் பாலிடெக்னிக் போய்விட்டு வந்து விடுகிறேன் என்று கூறிவிடுவார். கோயிலுக்கு, நாளைக்கு வருகிறேன் என்று கூறி விடுவார்".

என்று பெரியவர் முத்துசாமி முதலியாரின் கல்வித் தொண்டை மதிப்பீடு செய்வார் தவத்திரு குன்றக்குடி அடிகளார்.

**கவுந்தப்பாடி பெண்கள் உயர்நிலைப் பள்ளி**

கவுந்தப்பாடி நகரில் பெண்களுக்கென்று தனியே உயர்நிலைப் பள்ளி வேண்டுமென்று கருதினர் பொது மக்கள். பெண்கள் உயர்நிலைப் பள்ளியைத் தொடங்க வேண்டுமானால், அரசிடம் வைப்பு நிதியாக ரூபாய் பத்தாயிரம் செலுத்த வேண்டும். இந்தத் தொகையைக் 'கவுந்தப்பாடி சுதேசி ஜவுளி வர்த்தகர் சங்கம்' கொடுப்பதற்கு முன் வந்தது. வர்த்தகர் சங்கத் தலைவர் பெரியவர் ஆர்.ஏ என். முத்துசாமி முதலியார் சங்கத்தின் சார்பில், தமிழக அரசின் கல்வித் துறையிடம் ரூபாய் பத்தாயிரத்தை வைப்பு நிதியாகச் செலுத்தினார். கவுந்தப்பாடி நகரில் பெண்கள் உயர் நிலைப்பள்ளியைத் தொடங்கப் பெரியவர் முத்துசாமி

முதலியார் உறுதுணையாக இருந்தார். ஏழை எளிய குடும்பத்தைச் சார்ந்த மாணாக்கியர்களுக்குச் சங்கத்தின் சார்பில் இலவசப் புத்தகங்களும், குறிப்பேடு களும் வழங்கக் காரணமாக விளங்கி இருக்கிறார்.

இளங்குழந்தைகளுக்குக் கல்வி தருவதன் இன்றியா மையைக் கல்வியாளர்களும் சான்றோர்களும் கூறி யுள்ளனர். பொதுவாழ்வில் தம்மை ஈடுபடுத்திக் கொண்ட பெரியவர் முத்துசாமிமுதலியார் குழந்தைகள் கல்வி பெற வேண்டியதின் தேவையைத் தம் அனுபவ அறிவால் உணர்ந்து இருந்தார்.

மேலும், நெசவாளர்களின் குழந்தைகள் வர்த்தகர் களின் குழந்தைகள் அந்நாளில் கல்வியறிவு பெறுவதில் இடர்ப்பாடு இருப்பதை அறிந்தார். கவுந்தப்பாடி நகரை விட்டு குழந்தைகள் வெளியூர் சென்று படிக்கும் நிலை இருந்தது. இதனால், வர்த்தகர் சங்கத்தின் சார்பில், ஒரு குழந்தைப் பள்ளியை உருவாக்க வேண்டும் என்று சங்கத் தலைவர் முத்துசாமி முதலியார் விரும்பினார். 1963 ஆம் ஆண்டில், குழந்தைப் பள்ளி (Nursery School) ஒன்றினைச் சங்கக் கட்டடத்தில் தொடங்கினார்; இன்று வரையில் இந்தப் பள்ளியைத் திறம்படநடத்தி வருகின்றார்.

## அருள்நெறித் திருப்பணி மன்றத்தின் கல்விக் கழகங்கள்

தவத்திரு குன்றக்குடி அடிகளார் 1955-ஆம் ஆண்டில் தமிழ்நாடு அருள்நெறித் திருப்பணி மன்றத்தைத் தோற்றுவித்தார். 'மக்கட் தொண்டே மகேசன் தொண்டு' 'என் கடன் பணி செய்து

கிடப்பதுவே' எனும் குறிக்கோள்களைத் தம் மேற் போட்டுக் கொண்ட திருவண்ணாமலை ஆதினத்தின் கருத்துகளை நாட்டில் பரப்பவும், மக்கட்குப் பணி செய்யவும் உருவாக்கப்பட்ட அமைப்புதான் அருள் நெறித் திருப்பணி மன்றம். இஃதொரு சமய-சமுதாய எழுச்சி இயக்கமாகும்.

சமுதாய முன்னேற்றத்திற்கு இளஞ்சிறார்களின் கல்வி சீரிய முறையில் இருக்க வேண்டும் என்று கருதினார். குருமகா சன்னிதானம். இவர் தம் தலைமையின் கீழ் அருள்நெறித் திருப்பணி மன்றத்தின் கிளைகளைத் திருநெல்வேலி மாவட்டம், முகவை மாவட்டம், பெரியார் மாவட்டம் உட்பட 19 மாவட்டங்களில் கல்விக் கழகங்கள் ஏற்படுத்தப் பெற்றன.

பெரியார் மாவட்டத்தில், அருள்நெறித் திருப்பணி மன்றத்தின் சார்பில் புண்ணிய இல்லம், தொடக்கப் பள்ளி, ஆசிரியர் பயிற்சிப் பள்ளி, உயர்நிலை - மேல்நிலைப் பள்ளிக் கூடங்கள், மழலையர் பள்ளி முதலிய கல்விக் கழகங்கள் தவத்திரு குன்றக்குடி அடிகளார் தலைமையில் தொடங்கப் பெற்றன. நிர்வாகத்தில் சிக்கல் எழுந்த போது, தவத்திரு குன்றக்குடி அடிகளார் பெரியவர் முத்துசாமி முதலியாரை அழைத்தார்; செயலாளர் பொறுப்பையும் பொருளாளர் பொறுப்பையும் ஈந்தார்; அருள்நெறித் திருப்பணி மன்ற பயிற்சிப் பள்ளிக்குத் தாளாளர் பொறுப்பையும் கொடுத்தார்.

அருள்நெறித் திருப்பணி மன்றச் சார்புடைய கல்விக் கழகங்கள் திறம்பட நடைபெற, தம் கருத்திற்கு

இசைந்த நேர்மையுடன் இலங்கும் கயிலைமணி அ. முனுசாமி முதலியாரைத் தாளாளராக நியமனம் செய்ய வேண்டும் என்ற தம் அவாவைத் தவத்திரு குன்றகுடி அடிகளாரிடம் தெரிவித்தார். அடிகளார், பெரியவர் முத்துசாமி முதலியாரின் கருத்தை ஏற்றார். கண்கள் ஒரு பொருளை நோக்குதல் போல், பெரியவர் முத்துசாமி முதலியாரும், கயிலைமணி அ. முனுசாமி முதலியாரும் தொடக்க - உயர்நிலை -- மேல்நிலைப் பள்ளிக் கூடங்களின் நிர்வாகத்தைத் திறம்பட நடத்தி வருகின்றனர். அருள்நெறித் திருப்பணி மன்றத்தில் இருவரின் கல்வித் தொண்டை

> "அரசின் கருத்துரைக்கிணங்க 1973-74
> கல்வியாண்டில் ஆசிரியர் பயிற்சிப் பள்ளி
> உயர்நிலைப் பள்ளியாக மாற்றப் பெற்றது.
> இவ்வுயர்நிலைப் பள்ளி உருவாக
> திரு.ஆர்.ஏ.என். முத்துசாமி முதலியார்
> அவர்களும், திரு.எம். அழகப்பன் அவர்களும்
> திரு. ஏ. முனுசாமி அவர்களும் எடுத்துக்
> கொண்ட முயற்சிகள் அனைவரது
> பாராட்டுக்கும் உரியன"

என்று பாராட்டுவார் தவத்திரு குன்றக்குடி அடிகளார்:

கவுந்தப்பாடி சுதேசி வர்த்தகர்கள் ஜவுளி சங்கம் ஏற்படுத்திய கல்விக் கூடங்களும், அருள்நெறித் திருப்பணி மன்றத்தின் கல்விக்கூடங்களும் பெரியவர் முத்துசாமி முதலியார்க்குக் கல்வித் தொண்டின் தேவையை உணர்த்தின. சமுதாயம் மாற்றமடைய வேண்டுமெனில், மக்கள் கல்வி பெற வேண்டும் என்று கருதினார். இந்தக் கல்வி பட்டறைகளில் கிடைத்த அனுபவ அறிவின் விளைவாகச் செங்குந்தர் இன மக்களை

ஒன்று சேர்த்தார். ஈரோடு நகரில் ஓர் ஆண்கள் கலைக் கல்லூரியைத் தொடங்கத் தேவையான முயற்சியை எடுத்துக் கொண்டார்.

**முதலியார் கல்வி நிறுவனத்தில் முத்துசாமி முதலியார்**

இந்திய நாட்டின் விடுதலைக்காகத் தம் வாழ் நாளை ஈந்த காந்தியடிகளின் வாழ்க்கை வரலாறு வேறு என்றும், இந்தியச்சுதந்திரப் போராட்ட வரலாறு வேறு என்றும் பிரித்துக் காண்பது இயலாது.

ஆப்பிரிக்க நாட்டு நெல்சன் மண்டேலா வேறு என்றும், கறுப்பர் இன மக்களின் விடுதலை வரலாறு வேறு என்றும் தனியே இனங் காண்பது அரிது.

"என்னென்று சொல்வேன்!
என்னென்று சொல்வேன்!
தமிழால், பாரதி தகுதிபெற்றதும்
தமிழ், பாரதியால் தகுதிபெற்றதும்"

என்று பாவேந்தர் பாரதிதாசன், தமிழ் வேறு என்றும் பாரதி வேறு என்றும் பிரித்துப் பார்ப்பது இயலாது என்றார்.

இவர்களைப் போலவே, அருள்நெறிப் புரவலர் முத்துசாமி முதலியாரின் கல்வித் தொண்டு வேறு என்றும், முதலியார் கல்வி நிறுவனம் வேறு என்றும் பகுத்துப் பார்த்தல் முடியாது. இரண்டும், ஒன்றோடு ஒன்று பின்னிப் பிணைந்ததாகும். முதலியார் கல்வி நிறுவனத்தால் புகழ் பெற்றார்; பெருமை பெற்றார்; பெரியார் முத்துசாமி முதலியாரின் அயரா உழைப்பு, நேர்மை, வாய்மை, கடமை, கண்ணியம், கட்டுப்பாடு

ஆகிய இவற்றால் முதலியார் கல்வி நிறுவனமும் பெருமையடைந்தது; கல்வித் தொண்டில் உயர்ந்து விளங்கியது.

## முதலியார் சமூகத்தின் முதற் கூட்டம்

முதலியார் சமூகத்தின் ஆன்றோர்கள், சான்றோர்கள் ஈரோடு மாநகரில் செங்குந்தர் இனத்திற்காக ஒரு கல்லூரி தொடங்க வேண்டுமென்று விரும்பினர். 11—9—1971-ஆம் நாளில் ஈரோட்டில் ஒன்று கூடினர். இந்தக் கூட்டத்திற்குக் கல்வியாளர் எஸ். மீனாட்சி சுந்தர முதலியார் தலைமை ஏற்றார். கூட்டத்தில் பெரியவர் ஆர். ஏ. என். முத்துசாமி முதலியார், பி. பி. சதாசிவம் முதலியார், எஸ். கே. இராமசாமி முதலியார், எம். பி. நாச்சிமுத்து முதலியார், முன்னாள் பாராளு மன்ற உறுப்பினர் பி. ஏ. சாமிநாதன், காந்தியத் தொண்டர் எஸ். ஆர். சுப்பிரமணியன், பி. பால சுப்பிரமணியன், எம். எஸ். சென்னியப்ப முதலியார், டி. ஆர். சாமிநாத முதலியார் போன்றோர் கலந்து கொண்டனர்.

முதலியார் சமூகக் கூட்டத்தில் பின்வரும் தீர்மானங்கள் பற்றி கலந்துரையாடினர்; ஒருமனதாக நிறைவேற்றினர்.

"ஈரோட்டில் முதலியார்கள் சமூகத்தின் சார்பாக முதலியார் கல்வி நிறுவனம் என்ற பெயரில் ஒரு நிறுவனத்தை ஏற்படுத்தலாம் என்றும், அதைச் சொசைட்டி ரெஜிஸ்டர் ஆக்ட்படி, பதிவு செய்யலாமென ஏகமனதாகத் தீர்மானிக்கப் பட்டது.

இந்த நிறுவனத்திற்குத் திருவாளர் ஆர். ஏ. என். முத்துசாமி முதலியார் அவர்கள், ஓ. ஏ. இராமசாமி முதலியார் அவர்கள் ஆகிய இருவரையும் கன்வீனர்களாக ஏற்படுத்தலா மெனவும், மேற்படி கன்வீனர்கள் நமது நிறுவனத்திற்கு ரூ. 10,000/-மும் அதற்கு மேற்பட்டும் நன்கொடை கொடுக்கும் அன்பர்களையும் உள்ளடக்கி ஓர் கமிட்டி அமைத்து, நமது நிறுவனத்தைப் பதிவு செய்வதற்கு அதிகாரம் அளிக்கலாமென ஏகமனதாகத் தீர்மானிக்கப்பட்டது.

நமது நிறுவனத்தைப் பதிவு செய்வதற்குத் தேவையான சட்டத் திட்டங்களை உருவாக்கி, நமது நிறுவனத்தை ரெஜிஸ்டர் செய்ய கன்வீனர்களுக்கு அதிகாரம் கொடுக்கலாமென ஏகமனதாகத் தீர்மானிக்கப்பட்டது.''

**ஏன் தேவை ஆண்கள் கல்லூரி?**

ஈரோட்டையும் இதனைச் சுற்றியுள்ள சித்தோடு, பள்ளிபாளையம், கவுந்தப்பாடி, பவானி, குமார பாளையம், கோபிச் செட்டிபாளையம், சத்தியமங்கலம், பெருந்துறை, காஞ்சிக் கோவில், மேட்டுப்பாளையம், பெருந்தலையூர், பூந்துறை, காங்கேயம், வெள்ளக் கோவில் போன்ற ஊர்களில் செங்குந்த இன நெசவாளர்கள் மிகுதியாக வாழுகின்றனர். பொருளாதாரத் திலும் வாழ்க்கைத் தரத்திலும் மிகவும் பின் தங்கிய வர்கள். மிகவும் பிற்பட்ட நெசவாளர்களின் வாழ்வில்,

கல்வி எனும் ஒளிவிளக்கை ஏற்றவிழைந்தனர்; தங்கள் இனத்திற்கென்று கலைக் கல்லூரி ஒன்றை உருவாக்க வேண்டும் என்று விரும்பினர் முதலியார் பெருமக்கள்.

"கல்லார் நெஞ்சில் நில்லார் ஈசன்
எனில் எல்லாரும் கல்வி கற்க
நாம் வழி செய்ய வேண்டாமா?
பிற்பட்டவர்களுக்கும் வசதிக்
குறைவானவர்களுக்கும் கல்வி
வழங்க வேண்டாமா?"

என்று பெரியவர் முத்துசாமி முதலியார் வினவினார்; கல்வியின் தேவையை எடுத்துக் காட்டினார். முதலியார் கூட்டத்தில் கலந்து கொள்ள இயலாத ஆர்வமுள்ள வழக்கறிஞர் எம் பழனிசாமி போன்றோர் கல்லூரியின் தேவையை வலியுறுத்திக் கடிதங்கள் எழுதினர்.

## முதலியார் சமூகக் கூட்டத்தில் விவாதங்களும் விமர்சனங்களும்

11—9—1971 ஆம் நாளில் ஈரோடு நகரில் கலை மகள் கல்விக் கழகம் கண்ட எஸ். மீனாட்சி சுந்தர முதலியார் தலைமையில் முதலியார் சமூகக் கூட்டம் நடைபெற்றது. ஆண்கள் கல்லூரியின் தேவையைப் பற்றியும், முதலியார் கல்வி நிறுவனத்தின் குறிக்கோள் பற்றியும், கல்லூரிக்குப் பெயர் சூட்டுதல் பற்றியும் விவாதங்களும் விமர்சனங்களும் நடைபெற்றன. கூட்டத்தின் விவாதங்களும் விமர்சனங்களும் இங்கு முழுமையாக எடுத்துக்காட்டுவதன் மூலம் முதலியார் பெருமக்களின் ஆர்வத்தையும், பெரியவர் முத்துசாமி முதலியாரின் பெரும்பங்கினையும், கல்லூரி தொடங்கிய வரலாற்றினையும் இதன் மூலம் அறியலாம்.

"நம் சமூகத்தைச் சேர்ந்தவர்களுக்காகத் தனிப்பட்ட காலேஜ் துவங்குவது மிக்க அவசியமாக இருக்கிறது. நம் குழந்தைகளைக் காலேஜில் சேர்ப்பதற்கு மிகவும் கஷ்டப்படுகிறோம். அந்தக் கஷ்டங்கள் நீங்குவதற்காகத் தனிப்பட்ட காலேஜ் தேவையாக இருக்கிறது. காலேஜ் ஆரம்பித்தால் 2,3 ஆண்டுகளுக்குக் கஷ்டமாக இருக்கும். எல்லோரும் ஒத்துழைத்து இதை நடத்திச் செல்ல அன்புடன் கேட்டுக் கொள்கிறேன்''.

என்றார் ஈரோடு கலைக் கல்லூரியின் முன்னாள் தாளாளர் பி.பி. சதாசிவம்.

''ஒரு காரியத்தைத் தொடங்குவதற்கு முன்பு நன்கு ஆலோசித்து தொடங்க வோண்டும். ஒரு நிறுவனத்தை ஆரம்பித்து அதன் மூலம் பலவிதமான கல்வி சம்பந்தமான ஸ்தாபனங்கைள ஆரம்பிக்கலாம். அதற்குத் தேவையான நிதி நிலைமைகளைப் பற்றி யோசித்து, அதற்கு நாம் என்ன செய்ய வேண்டும்? அதற்கு எப்படிப் பொருள் சேர்க்க இயலும்? என்பதை யோசிக்க விரும்புகிறேன்''.

என்று எஸ். மீனாட்சி சுந்தர முதலியார், கல்லூரித் தொடங்கப் பெருநிதி வேண்டும் என எடுத்துரைத்தார்,

''ஆரம்பத்தில் நமக்குத் தேவையான பணத்தைச் சேகரித்து, அதற்குப்பிறகு காலேஜ் முதலியவை ஆரம்பிக்கலாமெனக் கருதுகிறேன்''

என்று எடுத்துக் கூறினார் சென்னிமலை எஸ். கே. இராமசாமி முதலியார்.

"இந்தத் தொடக்கக் காரியம் மிகவும் நல்லதுதான்
இதனை ஆரம்பிப்பதற்கு முன்பாக நாம் மிகவும்
சிந்திக்க வேண்டியதிருக்கிறது. ஏற்கனவே,
ஈரோட்டில் மூன்று கல்லூரிகள் இருப்பதினால்
மேற்கொண்டு ஈரோட்டில் ஒரு காலேஜ்
ஆரம்பிக்க வேண்டியது அவசியம்தானா?
என்பதை யோசிக்க கோருகிறேன். தற்சமயம்
வேலையில்லாத திண்டாட்டம் அதிகமாக
இருப்பதினால் Arts College ஆரம்பிப்பதை
விட தொழிற்கல்லூரி ஆரம்பிப்பது
நல்லது என்று கருதுகிறேன்".

என்று தாமரைத்திரு. எம். பி. நாச்சிமுத்து முதலியார் தொழிற் கல்லூரியைத் தொடங்க வேண்டும் என்றார்.

"ஈரோட்டில் ஒரு கல்லூரி ஆரம்பிக்க
வேண்டுமென்று ஏற்கனவே சொல்லியிருக்
கிறேன். நமது சமூகத்தைச் சேர்ந்தவர்கள்
அதிகமாக இருப்பதினால் நமது சமூகத்தின்
சார்பில் ஒரு கல்லூரி ஆரம்பிக்க வேண்டு
மென்று ஏற்கனவே வலியுறுத்திச் சொல்லி
யிருக்கிறேன். மற்ற சமூகத்தவர்கள்
ஊக்கமுடன் வேலை செய்து பல கல்லூரிகளை
ஆரம்பித்து நடத்தி வருகிறார்கள். நம்ம
மாவட்டத்தில் ஏராளமானவர்கள் இருப்பதினால்
பணம் வசூலிப்பது கஷ்டமாக இருக்காதென்று
கருதுகிறேன். இதை முன்னின்று நடத்து
கின்றவர் யார் என்பதுதான் இதுவரை

நமக்கிருந்த கஷ்டமெல்லாம். மற்ற காலேஜ்களில் நம்ம குழந்தைகளைச் சேர்ப்பதில் உள்ள கஷ்டங்கள் எல்லாம் நமக்கு நன்கு தெரிந்தது தான். ஏதோ ஆரம்பித்தோம் பிறகு சரியாக நடக்கவில்லையென்று நிலைமை ஏற்படாமல் முயற்சியுடன் காரியங்கள் செய்துவர வேண்டும். சர்க்காரால் பல கல்லூரிகளை ஆரம்பித்து நடத்துவது சற்று சிரம சாத்தியமானதாக இருப்பதினால்தான், தனிப்பட்டவர்கள் கல்லூரி களை ஆரம்பித்து நடத்துவது மிகவும் நல்லது. வேலை இல்லா திண்டாட்டம் காரணமாக Arts Collegeக்குப் பதிலாகத் தொழிற் கல்லூரிகள் ஆரம்பிப்பதால் நிலைமை திருந்தாது. ஆகையினால் கலைக் கல்லூரி ஆரம்பிப்பதுதான் நல்லது. ஏற்கனவே 'செங்குந்தர் ஹைஸ்கூல்' என்ற பெயரில் இருப்பதைப் போலன்றி, ஒரு பொதுப் பெயரில் ஆரம்பிப்பது நல்லது.

'ஈரோடு கலைக் கல்லூரி' என்று ஆரம்பிப்பது நல்லது. வேளாளர் பெண்கள் கல்லூரி என்று ஆரம்பிக்க ஏற்பாடுகள் நடந்து கொண்டு வருவதினால், உடனடியாக நீங்கள் இந்த ஆண்டு இதே வேலையாக இருந்து இந்தக் காரியத்தில் வெற்றியடைய கோருகிறேன். இதற்காக என்னுடைய ஆதரவைக் கொடுத்து வர எப்பொழுதும் தயாராக இருக்கிறேன்."

என்று முன்னாள் பாராளுமன்ற உறுப்பினர் பி. ஏ. சாமிநாதன், கலைக் கல்லூரியின் தேவைகளையும், அந்தக் கல்லூரியின் பெயரானது பொதுப்பெயரில் அமைய வேண்டும் என்று வலியுறுத்தினார்.

"பல சமூகத்தினர்கள் தங்கள் ஜாதியின் பெயரால் கல்லூரிகள் ஆரம்பித்திருக்கிறார்கள். ஆகையால் முதலியார் கல்லூரி என்று ஆரம்பிக்க வேண்டுமென்று சொன்னார்கள் அவ்விதம் ஜாதியின் பெயரால் செய்வதை நான் ஆதரிக்க விரும்பவில்லை. தொழிற் கல்லூரி ஆரம்பிப்பதை விட Arts College ஆரம்பிக்கலாமெனக் கருதுகிறேன்.

என்றார் பாவேந்தர் பாரதிதாசனுடன் நெருங்கிப் பழகியவரும், காந்தியவாதியும், சாதியை வெறுப்பவரு மான எஸ். ஆர். சுப்பிரமணியம். மேலும், தொடங் கப்படும் கலைக் கல்லூரிக்குக் கல்வியின் வளர்ச்சிக்காக உழைத்த, கல்வியாளர் டாக்டர் சர். ஏ. இராமசாமி முதலியார் டாக்டர் சர்.ஏ. இலட்சுமணசாமி முதலியார் ஆகிய இருவரின் பெயர்களில் ஒன்றினைச் சூட்டலாம் என்றும் கருத்துரைத்தார் எஸ். ஆர். பாலசுப்பிர மணியம்.

"இவ்வளவு நாட்களாக நமது சமூகத்தினர் களுக்கு ஏற்படாத அக்கரை இந்த ஆண்டு நம்மிடையே ஏற்பட்டு, ஈரோட்டில் ஒரு கல்லூரி அமைக்கலாமென முடிவெடுத்துள்ளது பற்றி மிக்க மகிழ்ச்சியுறுகிறேன். முதலியார்கள் இடையே உயர்வு தாழ்வுகளை நீக்கி, பொது நோக்கத்துடன் நாம் எல்லோரும் முதலியார் இனம் என்ற உணர்வுடன் இந்தக் காரியத்தைச் செய்வது மிகவும் நல்லது. 'செங்குந்தர் கல்லூரி' என்ற பெயர் இல்லாமல் பொதுப்பெயர் வைப்பது நல்லது என்று பெரியோர்கள் கூறியதைக் கவனித்தேன். திரு. பி.ஏ, சாமிநாதன்

அவர்கள் சொல்லியது போல 'ஈரோடு கலைக் கல்லூரி' என்ற பெயரில் ஆரம்பிப்பது நல்லது என்று கருதுகிறேன்.

வேளாளர் பெண்கள் கலைக் கல்லூரி ஆரம்பிக்க இருக்கிறார்கள். அவர்களுக்கு வசதிகள் மிகவும் அதிகம். ஆகையினால் நாம் நல்ல முறையில் சீக்கிரமாக இந்தக் கல்லூரியை நிச்சயமாக ஆரம்பிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.''

என்று எஸ்.கே. பாலுசாமி, தம் உரையில் குறிப்பிட்டார்.

''இதுவரையில் பல தடவைகள் முயற்சி எடுத்தும் நம் சமூகத்தின் சார்பில் கல்லூரி ஆரம்பிக்க இயலவில்லை. ஆகையினால், இந்த ஆண்டு நம் வியாபார சமூகத்தினர்கள் முழு முயற்சி எடுத்துக் கொண்டு இந்தக் கல்லூரியை ஆரம்பிக்க ஆவன செய்யுமாறு கேட்டுக் கொள்கிறேன்''.

என்று எம்.எஸ்.எம். சென்னியப்பன், தம் கருத்தை நவின்றார்.

''இந்தக் கல்லூரியை எப்படியும் கட்டியே ஆக வேண்டுமென்று கங்கணம் கட்டிக்கொள்ள வேண்டும். மற்றவர்கள் சமூகத்தில், ஒற்றுமை, கட்டுப்பாடு இருப்பதினால் அவர்கள் காரியங்களை வெற்றிகரமாக நடத்தி வருகிறார்கள். அதே போல நம்ம சமூகத்தினரும் ஒற்றுமையாக இருந்தால் காரியங்களை நன்கு நடத்த முடியும் என்று கருதுகிறேன். நம்முடைய

சமூகத்தினர்கள் நல்ல திறந்த மனத்துடன் பொருள் உதவி செய்யவேண்டும். நல்லவர்களாகப் பார்த்து இந்தக் கமிட்டியில் போட்டு, நல்லபடியாக நடத்துவதற்கு உடனடியாக ஏற்பாடுகள் செய்ய வேண்டுமென விரும்புகிறேன்''.

என்று பெருந்துறை டி.ஆர் சுவாமிநாத முதலியார் எடுத்துரைத்தார்.

''ஏற்கனவே அதிகமாகக் கல்லூரிகள் இருப்பதினால் ஈரோட்டில் மேற்கொண்டு கல்லூரி தேவைதானா என்று நினைப்பது கூடாது. மேற்கொண்டு ஒரு கல்லூரி தேவைதான். பையன்கள் கல்லூரிவரை படித்தால்தான் ஆங்கில அறிவு ஏற்படும். ஆகையினால், கல்லூரி அவசியம். நம் சமூகத்தின் பெருமதிப்பிற்குரிய திரு. ஏ.எல். முதலியார் கல்லூரி என்று ஆரம்பிக்கலாமா? என்பதை யோசிக்க வேண்டுகிறேன்''.

என்றார் ஓ.எஸ். நாச்சிமுத்து முதலியார்.

மேலும், வி.ஆர்.ஏ. பாலகிருஷ்ண முதலியார், சி.பி. கந்தசாமி முதலியார் போன்ற பெரியவர்களும், கல்லூரியின் தேவை குறித்தும், எந்தப் பெயரில் தொடங்க வேண்டும் என்றும் தங்களுடைய கருத்துகளை வெளிப்படுத்தினர்.

## முதலியார் கல்வி நிறுவனத்தின் முதற் கூட்டம்

07—10—1971-ஆம் நாளிட்ட கடிதப்படி, முதலியார் கல்வி நிறுவனம் தொடங்குவதற்கு ரூ. 10,000/-

கொடுப்பதாக வாக்குறுதி நல்கிய கொடையாளர்களின் முதற்கூட்டம் 10—10—71-ஆம் நாளில் 121, ஈஸ்வரன் கோயில் வீதியிலுள்ள பெரியவர் முத்துசாமி முதலியாரின் கடையில் நடத்தப் பெற்றது. மேலும், 'முதலியார் கல்வி நிறுவனம்' என்ற அமைப்பை 1860-ஆம் வருட சொசைட்டி சட்டம் 21-ன்படி பதிவு செய்ய முடிவு செய்யப்பட்டது. முதல் நிர்வாகக் குழுவை நியமனம் செய்ய தீர்மானிக்கப் பெற்றது.

### முதலியார் கல்வி நிறுவனத்தின் குறிக்கோள்

'முதலியார் கல்வி நிறுவனம்' ஏன் தொடங்கப் பெறுகிறது? எதற்காகத் தோற்றுவிக்கப்படுகிறது? முதலியார் கல்வி நிறுவனத்தின் நோக்கம் என்ன? என்பதைப் பற்றி முதலியார் சமூகக் கூட்டத்தில் தெளிவாக விவாதித்து உள்ளனர். நோக்கங்களைப் பின்வருமாறு முன்னாள் தாளாளர் பி.பி. சதாசிவம் முதற்கூட்டக் குறிப்பேட்டில் குறிப்பிடுகின்றார்:

"The aim of the trust is to
Start Colleges, High Schools,
Technical Institutions, Hostels
for the advancement of Education."

### முதலியார் கல்வி நிறுவனத்தின் முதல் தலைவர்

ஈரோட்டில் முதலியார் சமூகத்தினர் சார்பில் ஓர் ஆண்கள் கல்லூரி தொடங்குவதற்காக 11–9–1971-ஆம் நாளில் டி.ஏ.சி ஜவுளி குடோனில் கூட்டம் நடை பெற்றது. கல்வியாளர் எஸ். மீனாட்சி சுந்தர முதலியார் தலைமையேற்றார். இந்தக் கூட்டத்தில் 'முதலியார் கல்வி நிறுவனம்' என்று தொடங்கப் பெற்ற

கல்வி நிறுவனத்திற்குப் பெரியவர் முத்துசாமி முதலியாரும்,பெரியவர் ஏ. இராமசாமி முதலியாரையும் அமைப்பாளர்களாக நியமித்தனர். பின்பு, பதிவு செய்யப் பெற்ற முதலியார் கல்வி நிறுவனத்தின் முதல் தலைவர் பொறுப்பில் பெரியவர் முத்துசாமி முதலியார் அமர்த்தப் பெற்றார். 1971-ஆம் ஆண்டில் நிறுவனத் தலைவராகப் பொறுப்பேற்ற இவர், இன்றுவரை தலைவராக விளங்குகின்றார். நிறுவனத்தின் வளர்ச் சியைத் தம் உயிராகக் கருதி, அயராது பாடுபட்டு வருகிறார். முதலியார் கல்வி நிறுவனத்தின் பெருமை யையும், ஈரோடு கலைக் கல்லூரியின் வளர்ச்சியையும் தமிழகம் அறியும் வண்ணம் செய்துள்ளார் பெரியவர் முத்துசாமி முதலியார்.

**நிறுவனத்தின் நன்கொடையாளர்களே**
**வேரும் விழுதும்**

11—9—1971-ஆம் நாளில் நடைபெற்ற முதலியார் சமூகக் கூட்டத்தில் கல்லூரித் தொடங்குவதற்கு வேண்டிய நிதியை எவ்வாறு சேர்ப்பது என்று ஆலோசித்தனர். ஒவ்வொருவரும் ரூ. 10,000/- குறை வில்லாமல் நன்கொடை கொடுக்க முன்வர வேண்டும்; அவ்வாறு நன்கொடை கொடுப்பவர்கள் வாழ்நாள் முழுவதும் செயற்குழு உறுப்பினர்களாக இருக்கலாம் என்றும், குறைவாகக் கொடுப்பவர்கள் பொதுக்குழு உறுப்பினர்களாக இருக்கலாம் என்றும் தொடக்கக் காலத்தில் தீர்மானிக்கப்பட்டது. பின்பு, 280 பொதுக் குழு உறுப்பினர்களில் ரூ. 1,000/-, ரூ. 2,500/- ரூ. 5,000/- கொடுத்தவர்களும்கூட செயற்குழு உறுப்பினர்களாக இருக்கும் வகையில் பின்னர் நடந்த நிறுவனக் கூட்டத்தில்

தீர்மானம் கொண்டு வரப்பட்டது. மேலும், மற்றொரு நிறுவனக் கூட்டத்தில் ரூ. 10,000/- என்பதை ரூ. 25,000/- ஆக உயர்த்தி, தீர்மானம் நிறைவேற்றப் பட்டது இதனால், நிறுவனத்திற்குப் பெருநிதி சேர்க்கப்பட்டது. நிறுவன வளர்ச்சிக்குப் பெருநிதி கொடுத்து, வேரும் விழுதுமாக விளங்குகின்றனர் உறுப்பினர் பெருமக்கள்.

பெரியவர் முத்துசாமி முதலியார், நிறுவன உறுப்பினர்களின் பேராதரவுடன் ஏறக்குறைய 11 லட்சம் ரூபாய் நிறுவனத்திற்கு நிதியாகத் திரட்டினார்.

### கல்லூரிக்குப் பெயர்த் தேர்வு

முதலியார் சமூகத்தின் முதற்கூட்டத்தில் முதலியார் இனச் சான்றோர்கள் பலர் கல்லூரியின் தேவையை எடுத்துக் கூறியதுடன், அந்தக் கல்லூரி எவ்வாறு செயல்படவேண்டும் என்றும், எந்தப் பெயரில் கல்லூரி இயங்கினால் சமூக ஒற்றுமை நிலைபெறும் என்றும், ஒளிவு மறைவின்றி, தயக்கமின்றி, தங்களுடைய கருத்துக்களை வெளிப்படுத்தி இருந்தனர். மேலும், சாதியின் பெயரால், கல்லூரியின் பெயர் இருத்தல் கூடாது என்பதில் தெளிவாக இருந்துள்ளனர். சமூகத்திலுள்ள பலர் பங்கு கொள்ளும் ஓர் அமைப்பில், தனி நபரின் பெயர் இருப்பின், காழ்ப்புணர்வு ஏற்படும் என்று கருதி இருக்கின்றனர். கூட்டத்தில், துலாக்கோல் போன்று சமன் நிலையில் இருந்து, அனைவரும் சிந்தனை செய்தனர். முடிவில் 'ஈரோடு கலைக் கல்லூரி' என்று பெயர் வைப்பது என்று முழு மனத்துடன் தீர்மானம் செய்தனர்.

### கல்லூரிக்கு வைப்பு நிதி

தொடங்கப் பெறும் புதிய கலைக் கல்லூரிக்குச் சென்னைப் பல்கலைக் கழகத்தில் வைப்பு நிதி செலுத்த வேண்டும். நிறுவனத்தின் சார்பில் 24—11—71-ஆம் நாளின் விழாவில், முதலியார் கல்வி நிறுவனத்தின் தலைவர் பெரியவர் முத்துசாமி முதலியார் சென்னைப் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தர் தாமரைத்திரு நெ. து. சுந்தரவடிவேலு அவர்களிடம், வைப்பு நிதியின் ஒரு பகுதியாக ரூபாய் ஒரு இலட்சத்திற்குரிய காசோலையை வழங்கினார்.

### ஈரோடு கலைக் கல்லூரிக்கு நிலம் வாங்குதல்

முதலியார் கல்வி நிறுவனத்தின் தலைமைப் பொறுப்பு ஏற்றவுடன் பெரியவர் முத்துசாமி முதலியார், கலைக் கல்லூரிக்குத் தேவையான நிலத்தைத் தேர்வு செய்ய முனைந்தார். பல இடங்களுக்குச் சென்றார்; நிலங்களைப் பார்த்தார். முதலியார் கல்வி நிறுவனப் பெருமக்களுடன் இரங்கம் பாளையத்தில், சென்னிமலை சாலை அருகிலுள்ள நிலமே கல்லூரிக்குத் தகுதியான இடம் எனக் கண்டறிந்தார். 12—02—1972-ஆம் நாளில் நிலத்திற்குரிய பத்திரம் ஈரோடு சார் பதிவாளர் அலுவலகத்தில் பதிவு செய்தார். ஏறக்குறைய நாற்பது ஏக்கர் நிலத்தினைக் கல்லூரிக்குச் சேர்த்துள்ளார் பெரியவர் முத்துசாமி முதலியார்.

### கால்கோள் விழா

முதலியார் கல்வி நிறுவனத்திற்காக இரங்கம் பாளையம் கிராமத்தில் வாங்கப்பட்ட நிலத்தில் 24—11—1971-ஆம் நாளில் பெரும் நிதி வழங்கிய

எலத்தூர் செட்டிப்பாளையம் சி. பி. கந்தசாமி முதலியார் தலைமையில், சென்னைப் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தரான தாமரைத் திரு. நெ. து. சுந்தரவடிவேலு, ஈரோடு கலைக் கல்லூரிக்குரிய கட்டடத்திற்கு அடிக்கல் நாடினார்.

**குறுகிய காலத்தில் கல்லூரிக் கட்டிடம்**

கல்லூரிக்கு அடிக்கல் நாட்டப் பெற்றவுடன் பெரியவர் முத்துசாமி முதலியார் மிகவும் சுறு சுறுப்புடன் விரைந்து செயல்பட்டார். நிறுவனப் பெருமக்கள் அயராது உழைத்தனர். இவர்களின் இடையறா பெரு முயற்சியினால் 24—11—1971-ஆம் நாளில் தொடங்கப் பெற்ற கல்லூரிக் கட்டடம் 12–09—1972-ஆம் நாளில் மிக விரைவாக முடிக்கப் பெற்றது. இவ்வளவு குறுகிய கால அளவில் கட்டடம் கட்டி முடிப்பதற்கு நிறுவனத் தலைவர் பெரியவர் முத்துசாமி முதலியாரும், இவர்தம் தலைமையின் கீழ் பணியாற்றிய நிறுவன உறுப்பினர்களுமே காரணம் எனக் கூறல் மிகப் பொருந்தும்.

**ஈரோடு கலைக் கல்லூரியின் தொடக்கமும் இலச்சினையும்**

முதலியார் கல்வி நிறுவனத்தினரால் தோற்றுவிக்கப் பெற்ற ஈரோடு கலைக் கல்லூரி 12—07—1972 ஆம் ஆண்டு செயல்பட தொடங்கியது. கல்லூரியின் குறிக் கோள்களை நிறுவனக் கூட்டத்தில் தீர்மானித்தனர். கல்லூரிக்கென்று இலச்சினை உருவாக்கப் பெற்றது. 'கல்லூரி இலச்சினை' பற்றி பெரியவர் முத்துசாமி முதலியார், ஈரோடு கலைக்கல்லூரி தோற்றமும் வளர்ச்சியும்' என்ற கட்டுரையில் குறிப்பிடுகிறார்.

“அறிவு, பண்பு, ஆன்மீகம் என்பவை,
கல்லூரியின் இலச்சினை எடுத்துச்

சொல்லும் உயர்ந்த குறிக்கோள்களாகும்.
கல்வியின் நோக்கம் இளைஞர்களின் மூளை,
மனம், ஆன்மா ஆகிய மூன்றையும் வளர்த்தல்-
சீராய் வளர்த்தல் ஆகும். இதுவே
கல்லூரியின் குறிக்கோளாக அமைந்து
இருப்பது எண்ணி மகிழ்தற்குரியது.
மூளையின் வளர்ச்சியை
அறிவு காட்டும்
மனத்தின் விரிவைப்
பண்பு பேசும்
ஆன்மாவின் உயர்வை
ஆன்மீகம் உணர்த்தும்!"

### முதலியார் கல்வி நிறுவனத்தின் இரத்த அணுக்கள்

முதலியார் கல்வி நிறுவனத்தின் உயிர் பெரியவர் முத்துசாமி முதலியார். நிறுவனத்தின் உடலில் ஓடும் இரத்த அணுக்கள் நிறுவன உறுப்பினர்கள். இந்த நிறுவனம் சிறந்த முறையில், தொய்வின்றி, பீடுநடை போடுவதற்கும், உயர் கல்வி, ஒழுக்கம் ஆகியவற்றைக் கொடுப்பதற்கும் நிறுவனத்தின் தலைவர் முத்துசாமி முதலியாரும், நிறுவனப் பெருமக்களும் காரணமாக விளங்குகின்றனர்.

வள்ளல் ராணா க. வெ. இலட்சுமணன், செயலர்-தாளாளராகவும், கயிலைமணி அ. முனுசாமி முதலியார் பொருளாளராகவும், பிரபாத் ஜே. கே. நாராயணன், பி. கே. நஞ்சப்ப முதலியார், டி. ஆர். சுவாமிநாத முதலியார், சி. கே. இராமநாதன், கே. கே. பாலுசாமி, டாக்டர். பி. பரந்தாமன், கே. எம். தண்டபாணி ஆகியோர் துணைத் தலைவர்களாகவும், எஸ். வையாபுரி

முதலியார், மயிலோன் ஏ. ஆறுமுக முதலியார் ஆகியோர் இணைச் செயலாளர்களாகவும் பொறுப்புகள் ஏற்று, செயல்பட்டு வருகின்றனர். முதலியார் கல்வி நிறுவனத் தலைவர் பெரியவர் முத்துசாமி முதலியார்க்கும், பிற்பட்ட சமுதாயமான செங்குந்தர் இனத்திற்கும் உறுதுணையாக இருந்து வருகின்றனர்.

## நிதி திரட்டுவதில் வல்லவர்

கல்வி நிறுவனங்களுக்கும் பொது அமைப்புக்களுக்கும் நிதி திரட்டுவதில் வல்லவர்; திறமையானவர்; அனைவரும் பாராட்டும் வகையில் நிதி திரட்டித் தருவார். முதலியார் கல்வி நிறுவனம் தோற்றுவித்த நாளில், நிதி மிக அதிகமாகத் தேவைப்பட்டது. நிறுவனப் பெருமக்களின் உதவியுடன் பல்வேறு சூழ்நிலைகளில், அனைவரும் பாராட்டும் வகையில் நிதியைச் சேர்த்துத் தந்தார்; நிதி திரட்டுவதில் தாம் அடைந்த அனுபவத்தைப் பின்வருமாறு குறிப்பிடுகின்றார் பெரியவர் முத்துசாமி முதலியார்:

> "திருச்சியிலுள்ள அலங்கார் ஓட்டலுக்குச் சென்றோம்; தொலைபேசியில் தொடர்பு கொண்டோம். அவர் (ஏ.வி.ஆர்.எம். சங்கரநாராயணன்) வந்தார்; நீங்கள் தான் ஆர்.ஏ.என். முத்துசாமி என்பவரா? என்றார். ஆம் என்றேன்; அவரை நான் இதுவரை பார்த்தது கிடையாது; பேசியது கிடையாது; பழகியது கிடையாது; ஏற்கனவே தொலை பேசியில் தொடர்பு கொண்டது கிடையாது.
>
> ஆனால், அவர் கல்லூரியைப் பற்றிக் கேட்டார்; நிறுவனத்தின் செயல்பாட்டைக் கேட்டார்;

முதலியார் கல்வி நிறுவனத்தில் நீங்கள் உறுப்பினராகச் சேரவேண்டும் என்றேன்.

பதில் எதுவும் அவர் கூறவில்லை. உள்ளே சென்றார்; செக் புத்தகத்துடன் வந்தார்; நன்கொடைப் பிரிவுகளை எடுத்துக் கூறினேன்; என்னிடம் ரூபாய் ஐயாயிரம் கொடுத்தார். ரூபாய் ஐயாயிரம் தருவதால் தங்களுக்குப் பயனில்லை என்றேன். ரூபாய் பத்தாயிரம் கொடுத்தால் முழு அதிகாரம் உடைய குழுவில் எப்பொழுதும் உறுப்பினராகத் தாங்கள் இருக்கலாம் என்று கூறிய உடன் தருகிறேன் என்றார். சொல்லிய வண்ணமே, அவர் இரண்டு திங்கள் கழித்து, ரூபாய் ஐயாயிரத்திற்குரிய செக் கொடுத்தார்.

மேலும், நிறுவனத்தில் கருத்து வேற்றுமை ஏற்பட்டுள்ளது கூட்டத்திற்கு வருமாறு அழைத்தேன். தாங்கள் எடுக்கும் முடிவிற்கு 'என்னுடைய ஆதரவு உண்டு' என்றார். அதுமட்டும் அன்று; முதலியார் கல்வி நிறுவன உறுப்பினர்க்குரிய நன்கொடைத் தொகை ரூபாய் பத்தாயிரத்திலிருந்து இருபத்தைந்தா யிரமாக உயர்த்தப்பட்டுள்ளது என்று தெரிவித்தேன். உடன் மறுமொழி ஏதும் கூறாது, ரூபாய் பதினைந்தாயிரத்திற்கு உரிய செக் கொடுத்தார்.

முன்பின் பார்த்திராத ஒரு நபரிடம் ரூபாய் வாங்குவது எளிய செயலன்று; அன்று அவ்வாறு வாங்கினேன். கல்வி நிறுவனம் –

கல்லூரி வளர்ச்சிப் பெறவேண்டும்; நம்மின மக்களின் வாழ்வில் கல்வி ஒளியை ஏற்ற வேண்டும்; அறியாமை எனும் இருள் அகற்ற வேண்டும் என்ற நோக்கத்தின் அடிப்படையில் தான் என்னுடைய முயற்சி இருந்தது''.

**பெருநிதி திரட்டிய பெரியவர் முத்துசாமிக்குப் பாராட்டு**

ஈரோடு கலைக் கல்லூரியின் தொடக்க நாளில் தமிழக அரசிடமிருந்து 80% மட்டுமே உதவித் தொகையாகக் கிடைக்கப் பெற்றது. மீதித் தொகையை முதலியார் கல்வி நிறுவனமே ஏற்க வேண்டியிருந்தது. கல்லூரியின் விரிவாக்கத்திற்கும் ஆசிரியர் – அலுவலர் களின் ஊதியத்திற்கும் பெரும் நிதி தேவைப்பட்டது. எனவே, கலை நிகழ்ச்சிகள் நடத்தி, கல்லூரிக்குத் தேவையான நிதி வளத்தைப் பெருக்குவது என்று பெரியவர் முத்துசாமி முதலியாரின் தலைமையில் முதலியார் கல்வி நிறுவனத்தின் கூட்டத்தில் தீர்மானிக்கப் பட்டது. நிறுவனத் தலைவரின் அயரா உழைப்பினால் ஈரோட்டில் கலை நிகழ்ச்சிகள் நடத்தப் பெற்றன. பெருநிதி சேர்க்கப் பெற்றது.

பெரு நிதி சேர்த்த பெரியவர் முத்துசாமி முதலியார்க்குப் பாராட்டு விழா எடுக்கப் பெற்றது. திருச்செங்கோடு எம். பி. ஆர். அர்த்தனாரி முதலியார் பொன்னாடைப் போர்த்திச் சிறப்புச் செய்தார்; பாராட்டி மகிழ்ந்தார். சேலம் எஸ். பி. சம்பந்தம், மணங்கமழும் மலர்களைக் கொண்டு தயாரித்த மலர்க் கிரீடத்தைப் பெரியவர்க்கு அணிவித்து அகமகிழ்ந்தார், அவையில் இருந்த சான்றோர்கள் கையொலி எழுப்பி, பல்லாண்டு வாழ்க என நெஞ்சாரப் போற்றினர்.

நிதி திரட்டுவதில் இவர்க்குள்ள திறமையைத் தவத்திரு குன்றக்குடி அடிகளார் புகழ்வர்:

''செல்வம் ஈட்டுவதில் அவருக்கு இணை அவரே!
அதுபோலவே ஈட்டிய செல்வத்தைப்
பயன்படுத்துவதிலும் தேர்ச்சிப் பெற்றவர்!
கணக்கில் கண்டிப்பானவர்''.

**நான்கொடைக்கு வரிவிலக்கு**

ஈரோடு கலைக் கல்லூரிக்கு வேண்டிய தொகையை நன்கொடையாகத் திரட்டினார் பெரியவர் முத்துசாமி முதலியார். நன்கொடையாக வாரி வழங்கிய ஈகை உள்ளங் கொண்ட பெருமக்களுக்கு உதவும் வகையில் முதலியார் கல்வி நிறுவனத் தலைவர் பெரியார் முத்துசாமி, 'வருமான வரிவிலக்கு' வேண்டி சென்னை வருமான வரி ஆணையர்க்கு 29—10—1971 - ஆம் நாளிட்ட கடிதத்தை எழுதினார். பெரு முயற்சியால் வருமான வரி விலக்கு ஆணையைப் பெற்றார்.

**முதலியார் கல்வி நிறுவனத்தின் மீது வழக்கு**

முதலியார் கல்வி நிறுவனம் நடத்தும் 'ஈரோடு கலைக் கல்லூரிக்கு நிதி வளம் நிறைய தேவைப் பட்டது. நிதி வளத்தைப் பெருக்கிக் கொள்ளும் வகையில் சேமிப்பு நிதி சீட்டு நடத்துவது என்று முடிவு செய்யப்பெற்றது. 'ஈரோடு முதலியார் கல்வி நிறுவனச் சேமிப்பு நிதி' என்னும் பெயரில் 'ஏ' 'பி' பிரிவுகள் (குரூப்புகள்) வரிசையில் நிதி சேமிப்பு சீட்டு தொடங்கப் பெற்றது. திங்கள் தோறும் ரூபாய் நூறு என்று 50 திங்களுக்குச் செலுத்துவோர்க்கு 50 திங்கள் முடிந்த பின் ரூ. 5,000/– திருப்பி வழங்கப்படும் என்று கூறப் பட்டு இருந்தது.

முதலியார் கல்வி நிறுவனத்தின் உறுப்பினர் களிடையே ஏற்பட்ட கருத்து வேற்றுமையால் சில உறுப்பினர்கள் 7 சீட்டுக்குப் பின் சீட்டுத் தொகையைச் செலுத்தவில்லை. 50 திங்கள் நிறைவு பெற்றவுடன், முழுமையாகச் சீட்டுத் தொகையைக் கட்டிய அனைவர்க்கும் ரூ. 5,000/-வழங்கப் பெற்றது. ஆனால், ஏழு திங்கள் மட்டும் சீட்டுத் தொகையைக் கட்டிய உறுப்பினர்களுக்கு நிதி சேமிப்பு சட்டத்திற்குட்பட்டுப் பணம் திருப்பித் தரவில்லை.

இதனால், கருத்து வேற்றுமை அடைந்த உறுப்பினர்களில் சிலர், வழக்கு மன்றம் சென்றனர். முதலியார் கல்வி நிறுவனப் பொறுப்பாளர்களான 'ஆர். ஏ. என். முத்துசாமி முதலியார், சி. கே. இராம நாதன், ஏ. முனுசாமி முதலியார்' ஆகியோர் மீது கிரிமினல் வழக்கு தொடுத்தனர்;

பெரியவர் முத்துசாமி முதலியார் ஒரு திருமண விழாவில் இருந்த போது 'தினத் தந்தி' நாளிதழில் 'ஆர். ஏ. என். முத்துசாமி முதலியார், சி. கே. இராம நாதன், ஏ. முனுசாமி ஆகிய மூவரும் கைது' என்ற செய்தியைக் கண்ணுற்றார்.

வழக்கு மன்ற நிகழ்வுகளைப் பின்வருமாறு கூறுகின்றார் பெரியவர் முத்துசாமி முதலியார்:

''எங்களைக் கைது செய்வது பற்றி
வழக்கறிஞரிடம் பேசினோம். நிதிமோசடி
என்று வழக்குத் தொடுத்து இருப்பதால்,
தடையுத்தரவு வழக்குமன்றத்தில் வாங்கும்
வரை நீங்கள் மூவரும் தலைமறைவாக இருந்து
தான் ஆகவேண்டும்' என்றார் வழக்கறிஞர்.

என்ன செய்வது என்று யோசித்தேன். நான் எந்த விளைவுகளுக்கும் தயாராக இருந்தேன். ஆனால், முனுசாமி முதலியார் – சாமியார்; ஆன்மீக வாதி; சி. கே. இராமநாதன் – பிள்ளைக் குட்டிக்காரர். எனக்கு மனத்துன்ப மாக இருந்தது. ஆனால் இருவரும், இந்த வழக்கிலிருந்து விடுபட நான் எடுக்கும் நடவடிக்கைகளுக்குத் துணையாக இருப்பதாகக் கூறினார்கள்.

மூவரும் சென்னையிலிருந்து திருப்பதிக்குச் சென்றோம். தங்கும் விடுதி ஒன்றில் மூவரும் தங்கினோம்; ஒவ்வொருவரும் ஒவ்வொரு அறையில் இருந்தோம்; ஐந்து நாட்கள் திருப்பதியில் தங்கி இருந்தோம். பின்பு வழக்கறிஞரிடமிருந்து 'தடையுத்தரவு' ஆணை வாங்கிவிட்டதாகத் தகவல் வந்தது. பின்பு, சென்னை சென்றோம். தடையுத்திரவு ஆணைப்படி, ஈரோட்டுக் காவல் நிலையத்தில் மூவரும் தினந்தோறும் கையெழுத்துப் போட்டு வந்தோம்''.

வழக்கு மன்றத்தில் நிதியரசர், 'பிணைத் தொகை கட்ட வேண்டும்' அப்பொழுதுதான் ஜாமீனில் விடப் படும் என்றார். தயக்கம் சிறிதுமின்றி, பெரியார் முத்துசாமி முதலியாரும், கல்லூரித் தாளாளர் பெரியவர் பி. பி. சதாசிவ முதலியாரும் தங்களுடைய சொத்துக்களைப் பிணைத்தொகையாகக் காட்டினர். இந்தத் துணிச்சலான செயல் அனைவராலும் பாராட்டப் பெற்றன.

''ஈரோடு கலைக்கல்லூரி மிகவும் செம்மையான முறையில் நடைபெற்று வந்த நேரத்தில் சோதனையான காலமும் வந்தது. அந்தச் சோதனை காலத்தில் கல்வியின் ஒளிவிளக்கு நமது தலைவர் அவர்களும் அப்போது கல்லூரி தாளாளராகப் பணியாற்றிய திரு.பி.பி.சதாசிவம் அவர்களும் தங்களுடைய சொந்தச் சொத்துக்கள் அனைத்தையும் நீதிமன்றத்தில் அடமானம் வைத்து ஈரோடு கலைக்கல்லூரி யினை மீட்டார்கள். இப்படிக் கல்விக்காகத் தனது சொந்தச் சொத்துக்கள் அனைத்தும் போனால் கூட கவலையில்லை; கல்விதான் முக்கியம் என்ற தியாக உள்ளம் படைத்தத் தியாகச் செம்மல் தலைவர் ஆர். ஏ. என். முத்துசாமி முதலியார்''

என்று, நிறுவனச் செயலர் எஸ். வையாபுரி முதலியார், சோதனைக் காலத்தில் பெரியவர் முத்துசாமி முதலியார் ஆற்றிய அரும்பெரும் கல்வித் தொண்டினை எடுத்துரைப்பர்.

**சமாதானப் பேச்சு**

வழக்கு மன்றத்தில் வழக்கு இருந்த போது, சமாதானப் பேச்சு எழுந்தது. சமாதானப் பேச்சுப் பேசுவதற்கு வழக்குத் தொடுத்தவர்களின் சார்பில் பத்துப் பேர்கள் பெரியவர் முத்துசாமி முதலியாரிடம் வந்தனர். உறவு நிலையுடையவராக இருப்பதாலும், சொந்தக்காரர்களாக இருப்பதாலும், இந்த வழக்கில் சமாதானமாகப் போகலாம் என்றனர்; கோர்ட்டு, கைது என்ற நிலையெல்லாம் வேண்டாம் என்றனர்.

சமாதானம் பேச வந்தவர்களிடம் பெரியவர் முத்துசாமி முதலியார் பின்வருமாறு எடுத்துரைத்தார்:

"நான் சமாதானம் பண்ணுவதற்கு வரமாட்டேன்; சமாதானம் பண்ணவில்லை என்றால் என்ன செய்வாய்? இதைப் பற்றி எனக்குக் கவலையில்லை! என்ன அரஸ்ட் பண்ணிட்டு போனாலும் போகட்டும். இவ்வளவு செலவு செய்து என்னை அரஸ்ட் செய்வதற்கு முன்பு, இப்பொழுதே வரச் சொல்!, எந்த இடத்தில் அரஸ்ட் பண்ணி உள்ளே விடுவார்களோ, அந்த இடத்தைச் சாவி போட்டுத் திறக்கச் சொல்! நான் உள்ளே போகிறேன்!

நீங்கள் ஒன்றும் ஆர்டர் போடவேண்டாம்! நான் உள்ளே இருந்து கொள்கிறேன். உள்ளே வைத்து ஒரு போட்டோ எடுக்கச் சொல்! எடுத்த போட்டோவை வீட்டில் மாட்டிக் கொள்ளுங்கள். ஆசையாக இருந்தால், நான் ஜெயிலில் இருக்கிறேன். சமாதானம் பண்ண வேண்டாம்.

வந்தவர்கள் சத்தம் இல்லாமல் எழுந்து போய் விட்டார்கள். வழக்கு முறைப்படி வழக்கு மன்றத்தில் நடத்தப்பட்டது. வழக்கில் நாங்கள் வென்றோம். குற்றமற்றவர்கள் என்று நாங்கள் வழக்கு மன்றத்தில் நிரூபிக்கப்பட்டோம். வழக்கு தள்ளுபடி செய்யப் பெற்றது.

முதலியார் கல்வி நிறுவனம் நடத்திய சீட்டில் தப்பு எதுவும் இல்லை. சீட்டு நடத்தியதில் 15 இலட்சம் ரூபாய் வசூல் ஆனது. அதில் ஒரு

சீட்டு நடத்தும் போது 7 மாதம் மட்டுமே
சீட்டுத் தொகை கட்டிய யாருக்கும்
வட்டி கொடுக்காதே என்று கூறி விட்டேன்.
எல்லாம் போக 15 லட்சம் ரூபாய் சீட்டு
நடத்தியதில் மிச்சம்; 15 லட்சம் ரூபாய் சீட்டு
நடத்தி வசூல் செய்து கொடுத்திருக்கிறேன்".

வழக்கு மன்றத்தில் முதல் சான்றினராக விசாரிக்கப்பட்ட முதலியார் கல்வி நிறுவன உறுப்பினர் சக்தி எம். பாலசுப்பிரமணியம், வழக்கின் தன்மையைப் பற்றியும், பெரியவர் முத்துசாமி முதலியாரின் ஆற்றலைப் பின்வருமாறு தெரிவிப்பர்:

"நான் கோர்ட்டில் ஆணித்தரமாகச்
சான்றுரைத்தேன். இந்த வழக்கில் நான்
பிரதான சாட்சியாகக் கருதப்பட்டு
விசாரித்தார்கள். முதலியார் கல்வி நிறுவனத்
தலைவர் திரு. ஆர்.ஏ.என். முத்துசாமி,
செயலாளர் திரு. சி.கே. இராமநாதன்,
பொருளாளர் திரு. ஏ. முனுசாமி முதலியார்
ஆகிய மூவர்க்கும் கோர்ட்டில் நியாயம்
கிடைத்தது; நீதி கிடைத்தது; வெற்றி வாகை
சூடினார்கள்; தலைவரின் கல்விப் பணியில்
ஏற்பட்ட பெரிய பழி சுமத்தலும் நீக்கப்பட்டது.
தலை நிமிர்ந்து இந்தக் கல்விப் பணியில் ஈடுபட
மறுவாய்ப்பு கிடைத்தது. இவருடைய கல்விப்
பணியில் உறுதுணையாக இருப்பதில்
பெருமகிழ்ச்சியும் பெருமையும் அடைகிறேன்."

**கலை நிகழ்ச்சிகள்**

சிறப்போடு கல்வி நிறுவனம் நடத்த வேண்டுமெனில், பொது மக்களின் ஆதரவும், நிதியும்

முதலியார் கல்வி நிறுவனத்திற்குத் தேவை என்பதை உணர்ந்தார் பெரியவர் முத்துசாமி. கலை நிகழ்ச்சிகள் மூலம் நிறுவனத்தின் நிதி நிலையை உயர்த்த எண்ணினார்; திரைப்படக் கலைஞர்களைக் கொண்டு மாவட்டச் செசன்ஸ் நீதிபதி ஜி. வேலாயுதம் அவர்களின் தலைமையில் கலை நிகழ்ச்சியை நடத்தினார் பெரியவர் முத்துசாமி முதலியார். கலை நிகழ்ச்சியின் மூலம் அந்நாளில் கிடைத்த மூன்றரை இலட்சம் ரூபாய் தொகையை ஈரோடு கலைக் கல்லூரியின் வளர்ச்சிக்குப் பயன்படுத்தினார்.

**கல்வெட்டுகளில் புரவலர்கள்**

ஈரோடு கலைக் கல்லூரியின் வளர்ச்சிக்குப் பெரும் நிதி வழங்கிய புரவலர்களின் பெருந்தன்மையைப் பாராட்டுவது என்று முதலியார் கல்வி நிறுவனக் கூட்டத்தில் தீர்மானம் கொண்டு வந்து நிறைவேற்றினார். மேலும், ரூபாய் ஆயிரமும், அதற்கு மேலும் பணம் வழங்கிய புரவலர்களின் பெயர்களைக் கல்வெட்டுகளிலும், ரூபாய் இருபத்தைந்தாயிரம் வழங்கிய புரவலர்களின் திருவுருவப் படங்களை வகுப்பறைகளிலும் திறந்து வைப்பது என்றும் தீர்மானம் நிறைவேற்றி, அதன்படி கல்வெட்டுகளும், திருவுருவப் படங்களும் 27—5—1989-ஆம் நாளில் நடைபெற்ற விழாவில் பெரியவர் முத்துசாமி முதலியார் திறந்து வைத்தார். தம் உள்ளத்தில் தேக்கிய ஆசையை நிறைவேற்றிக் கொண்டார். நிதி வழங்கிய புரவலர்கள் பாராட்டப் பட்டனர்; சிறப்பு செய்யப்பட்டனர்.

**ஈரோடு கலைக் கல்லூரியில் முதலாம் பட்டமளிப்பு விழா**

20—09—1975-ஆம் நாளில் சென்னைப் பல்கலைக் கழகம் பட்டமளிப்பு விழா நடத்தியது. சென்னைப்

பல்கலைக் கழகத்தின் கீழ் இயங்கிய ஈரோடு கலைக் கல்லூரி, தம் மாணவர்களுக்குத் தனியே பட்டமளிப்பு விழா எடுத்து, பட்டங்கள் வழங்கியது. இப்பட்ட மளிப்பு விழாவில் அருள்நெறிப் புரவலர் முத்துசாமி முதலியார் தலைமை ஏற்க, அந்நாளில் சென்னைப் பல்கலைக் கழகப் பதிவாளராக இருந்த கல்வியாளர் சி. கே. குமாரசாமி விழாப் பேருரையை நிகழ்த்தினார். பெரியவர் முத்துசாமியின் பண்புகளை எடுத்துரைக்கும் பேருரையாக அது விளங்கியது.

"இந்த விழாவில் கலந்து கொள்வதில் ஒரு கடமை இருக்கிறது என்பதனை இன்று தலைமை தாங்கும் திரு. ஆர். ஏ. என். முத்துசாமி முதலியார் அவர்கள் சில நாட்களுக்குமுன் குறிப்பிட்டு, நான் அவசியம் கலந்து கொண்டு தான் ஆகவேண்டும் என்று ஆணையிட்டார்கள். இதில் என்ன கடமை இருக்க முடியும் என்று நீங்கள் யோசிக்கலாம். பல்கலைக் கழகத்தின் பதிவாளர் என்ற கடமை ஏற்கனவே ஆற்றிவிட்ட எனக்கு என்ன கடமை எஞ்சி நிற்கிறது? தலைவர் அவர்கள் சொன்னார்கள். தம்பி! நீங்கள் சிதறிக்கிடந்த இந்தச் சமுதாயத்தை ஒன்று சேர்த்தீர்கள். எங்களிடையே மண்டிக்கிடந்த மன வேறுபாடுகளை உங்களுடைய தளரா முயற்சியால், தன்னலமற்றபோக்கால், அன்பு முகத்தால், இன்சொல்லால் களைந்தீர்கள். நீறுபூத்த நெருப்பாக எங்கள் நெஞ்சத்தில் இருந்த கல்வித்தொண்டு வேட்கையைக் கொழுந்துவிட்டு எரியச் செய்தீர்கள்.

இந்தக் கல்லூரி தொடங்க வித்திட்டீர்கள்.
நிதி மிகுந்தோர் வாரி வழங்கினார்கள்.
நிதி குறைந்தோரும் சளைக்கவில்லை. முடிந்த
அளவு நிதி, நிறைந்த அளவு உழைப்பு,
முயற்சி ஆகியவற்றை நல்கினார்கள்.
இவ்வளவு பின்னணியில் இந்தக் கல்லூரியை
உருவாக்கித் தந்து பட்டதாரிகளை
வெளிக் கொண்டு வந்திருக்கும் உங்களுக்கு
இந்த விழாவில் கலந்து கொள்ள உரிமையும்
கடமையும் உண்டு. நீங்கள் தான் நடத்தித்தர
வேண்டும்'' என்று அடித்துப் பேசிவிட்டார்.
மறுக்க முடியவில்லை. அதன் விளைவு இன்று
உங்கள் முன்னே நிற்கிறேன்.

படிக்காத, பட்டம் பெறாத மேதை
திரு. ஆர். ஏ. என். எம். அவர்கள், பல
உண்மைகளை உங்களுக்கு இதன் மூலம் தெளிய
வைத்துவிட்டார்''.

## சி. கே. குமாரசாமிக்குப் பொன்விழாப் பாராட்டு

சென்னைப் பல்கலைக் கழகப்பதிவாளராக விளங்கிய சி. கே. குமாரசாமி அவர்களுக்கு 50-ஆம் ஆண்டு நிறைவு ஒட்டி முதலியார் கல்வி நிறுவனம், ஈரோடு வேளாளர் மகளிர் கல்வி நிறுவனம் போன்ற ஆறு கல்வி நிறுவனங்களின் சார்பில் பொன் விழா 29—5—1977-ஆம் நாளில் ஈரோடு கலைக் கல்லூரியில் நடத்தப் பெற்றது. முதலியார் கல்வி நிறுவனத்தின் தலைவராகிய அருள்நெறிப் புரவலர் முத்துசாமி பொன் விழாக் குழுவின் தலைவராக இருந்து, சிறப்பாக நடத்திக் கொடுத்தார்.

### சென்னைப் பல்கலைக் கழகத்தில் அறக்கட்டளை

முன்னாள் பதிவாளர் சி. கே. குமாரசாமியின் பொன் விழாவின் அடையாளமாக - பொன்விழா நினைவாக இவர்தம் பெயரில் சென்னைப் பல்கலைக் கழகத்தில் அறக்கட்டளை நிறுவினார். பத்தாயிரம் ரூபாயை சென்னைப் பல்கலைக் கழக நிதி அலுவலர் திரு. பசுபதி அவர்களிடம், ஈரோடு முதலியார் கல்வி நிறுவனத் தலைவர் பெரியவர் முத்துசாமி முதலியார் வழங்கினார்.

### மனந்திறந்த பாராட்டு

சென்னைப் பல்கலைக் கழக முன்னாள் பதிவாளர் சி. கே. கே. அவர்களைத் தமிழகத்தில் அறியாதவர்கள் யாரும் இலர். கல்வியாளர்கள், பேராசிரியர்கள், மாணவர்கள் ஆகியோர் இவர்தம் உதவி பெற்று உயர்ந்தவர்கள் உண்டு. தம்மால் முடிந்த உதவியை, உயர்வு தாழ்வு நோக்காது உதவியவர் பதிவாளர் சி. கே. கே. இவர்தம் பெருமையைப் போற்றும் முறையில் பொன்விழாவில், பெரியவர் முத்துசாமி முதலியார் மனந்திறந்து பாராட்டினார்:

"எளிய குடும்பத்தில் பிறந்தாலும் முயற்சி
திருவினையாக்கும் என்னும் மூலமந்திரத்தின்
வழி நின்று படிப்படியாய் வாழ்வில்
ஏற்றம் கண்டவர் இவர்.

கால் நூற்றாண்டுக் காலம் துணைவேந்தரா
யிருந்த மதிப்பிற்குரிய டாக்டர்
ஏ. இலட்சுமணசாமி முதலியார் அவர்கள் பதவி

விலகிச் செல்லும்போது நம்முடைய பதிவாளர் அவர்களைப் பார்த்து "இந்தச் சிறிய பல்கலைக் கழகத்தின் பெரிய பொறுப்புகள் என்னும் குழந்தையைத் தங்களிடத்தில் ஒப்படைக்கிறேன்'' என்று மகிழ்ந்து கூறினார்கள்.

ஆம்! வசிஷ்டர் வாயால் பிரம்ம ரிஷி பட்டம் பெற்றவர் இவர். இவருடைய

எண்ணம், கடல் போன்று பரந்தது!
உள்ளம், வான்போன்று உயர்ந்தது!
செயல், பளிங்கு போன்று தூய்மையானது!

வினைத் திட்பமும், பெரியோர்பால் பெருமதிப்பும் கொண்டுள்ள இவருடைய மலரினும் மெல்லிய நல்லிதயத்தில் கருக்கொண்டு உருப் பெற்றதே ஈரோடு கலைக் கல்லூரி.

செம்மனச் செம்மல் சி. கே. கே. அவர்கள் உடல் வளமும் உள்ள நிறைவும் பெற்று வாழ்வாங்கு வாழந்து, உயர்வுகள் பல பெற்றுச் சிறக்க முன்னியது முடிக்கும் திருமுருகன் திருவருளை நினைந்து வாழ்த்துகிறேன்.''

## ஈரோடு தொழில் நுட்பப் பயிற்சிக் கல்லூரி

1971-ஆம் ஆண்டில் நடைபெற்ற முதலியார் முதல் சமூகக் கூட்டத்தில் தொழிற் கல்லூரித் தொடங்க வேண்டும் என்று சிலர் தம் கருத்தை வெளிப் படுத்தியிருந்தனர். பிற்பட்ட இனமாகிய செங்குந்தர்

களின் வளர்ச்சிக்குக் கலைக்கல்லூரி மட்டும் போதாது என்று முதலியார் கல்வி நிறுவனத்தினர் கருதினார். பெரியவர் முத்துசாமி முதலியார், தொழிற் கல்லூரியின் தேவையை வலியுறுத்தினார். 1982–ஆம் ஆண்டில் தொழிற் பயிற்சிக் கல்லூரியைச் செங்குந்தர்கள் அதிகமாக வாழ்கின்ற பகுதியாகிய கவுந்தப்பாடியில் 51 ஏக்கர் நிலத்தில் தொடங்கினார். தொழிற் பயிற்சிக் கல்லூரியின் பெயரை – ''ஈரோடு கலைக் கல்லூரிக்கு'' எவ்வாறு சாதிப் பெயரின்றி அமைக்கப் பெற்றதோ, அதனைப் போன்றே 'ஈரோடு தொழில் நுட்பப் பயிற்சிக் கல்லூரி' என்று அழைக்கப் பெற்றது. இந்தத் தொழில் நுட்பப் பயிற்சிக் கல்லூரிக்கு உலக வங்கியில் ஏறக்குறைய 93 இலட்சம் ரூபாயை நிதியாகப் பெற்றுத் தந்தது இவரின் சாதனையாகும்.

**கல்லூரியின் முதல் முதல்வர்**

1972–ஆம் ஆண்டில் தொடங்கப் பெற்ற ஈரோடு கலைக் கல்லூரிக்குச் சிறந்த முதல்வரைத் தேடினர். சென்னைப் பல்கலைக் கழக முன்னாள் பதிவாளர் சி.கே. குமாரசாமி, தம்முடன் அண்ணாமலை பல்கலைக் கழகத்தில் உடன் பயின்ற பேராசிரியர் க. இராமதாசு அவர்களைப் பரிந்துரை செய்தார். பொருளாதாரத் துறையில் வல்லுநர் இவர். பூ. ச. கோ அறிவியல் கலைக் கல்லூரியில் பேராசிரியராகப் பணிபுரிந்தவர். தஞ்சை மாவட்டத்தைச் சார்ந்தவர். ஆனால், கொங்கு நாட்டைப் பெருமைப்படுத்தியவர். கல்லூரியின் வளர்ச்சியில் தம்மை முழுமையாக இணைத்துக் கொண்டவர். இடர்ப்பாடு வந்த காலத்தில் எஃகு உள்ளத்தால் வென்றவர்; முதலியார் கல்வி நிறுவனத் திற்கு உறுதுணையாக விளங்கியவர்.

பத்தாண்டு காலம் கல்லூரியின் சிறந்த முதல்வராகப் பணிபுரிந்த பேராசிரியர் க. இராமதாசு, 31—07—1982-ஆம் நாளில் பணியிலிருந்து ஒய்வு பெற்றார். பணியிலிருந்த நாளில், முதலியார் கல்வி நிறுவனத்தின் தலைவர் பெரியவர் முத்துசாமி முதலியாரின் நம்பிக்கைக்குரியவராகத் திகழ்ந்தார். இருவரும் இணைந்து, ஈரோடு கலைக் கல்லூரிக்குப் புகழ் சேர்த்தனர். இவர்தம் பணியைப் பற்றி முதலியார் கல்வி நிறுவனத் தலைவர் முத்துசாமி முதலியார் பின்வருமாறு பாராட்டுரை வழங்குவர்:

''கல்லூரி தொடங்கியபோது, யாரைக் கல்லூரி முதல்வராகத் தேர்ந்தெடுப்பது என்ற கேள்வி எழுந்தது; கலந்துரையாடல் செய்தோம்; பி. எஸ். ஜி. கல்லூரியில் பொருளாதாரப் பேராசிரியராகப் பணிபுரிந்து வந்த திருவாளர் க. இராமதாசு அவர்களைக் கல்லூரியின் முதல்வராக வரவழைக்க என்ன செய்ய வேண்டுமோ, அதனைச் செய்தேன். நிர்வாகக் கூட்டத்தில் முடிவு எடுக்கச் செய்தேன். நிர்வாகம் மனநிறைவு கொண்டது. பேராசிரியரும் எங்களின் முடிவினை ஏற்றுக் கொண்டார்.

பேராசிரியர் நல்லமுறையில் வந்தார். எங்களுடன் சிறந்த முறையில் ஒத்துழைப்பு நல்கினார். கல்லூரியில் ஏற்பட்ட தகராறுகளை ஒழுங்குபடுத்தி, கல்லூரி செம்மையாக நடைபெற பெரும் காரணமாக இருந்தார். ஆறு ஆசிரியர்கள் இவரின் கட்டளையை ஏற்றனர், பன்னிரண்டு ஆசிரியர்கள் கருத்து முரண்பட்டு

கல்லூரியை விட்டுச் சென்றுவிட்டனர். அத்தனைக்கும் தகவல் சரியாகக்கொடுத்து, எங்களுடன் இருந்து, ஒழுங்கு பண்ணினார். போலீஸ் பந்தோபஸ்து போட்டு வைத்தார். எந்தவிதமான ஆபத்தும் இல்லாதபடிக்கும் பார்த்துக் கொண்டார். இப்படியெல்லாம் இருந்து முழுமையாக ஒத்துழைப்பு நல்கினார்.

பணியில் இருந்து ஓய்வு பெற்றாலும், இன்னும் ஒத்துழைப்பு தருகிறார் பேராசிரியர். இன்னும் நம்முடைய கல்லூரிக்கு என்ன சகாயம் வேண்டுமோ செய்கிறார்; போய்க் கேட்டால், இதைச் செய்யுங்கள், அதைச் செய்யுங்கள் என்று ஆலோசனை சொல்லிக் கொடுக்கிறார்.

நான் மனப்பூர்வமாக அவரை நம்பினேன்; அவரும் எங்களை நம்பி இருந்தார். கல்லூரிக்கு வரும் முன்பே வசதியாக வாழ்ந்தவர்; கோவையில் இருந்த போதே வீடுகட்டி இருந்தவர்; தம்முடைய நான்கு பெண்களையும் சிறப்பாகப் படிக்க வைத்து, திருமணம் செய்து வைத்தவர். எங்களால் இயன்ற உதவிகளைச் செய்தோம்.

கல்லூரியில் யார் தப்பு செய்தாலும், 'இந்த மாதிரி தப்பு பண்ணுகிறார், கொஞ்சம் ஒழுங்கு பண்ணுங்க' என்று நிர்வாகத்திடம் சொல்வாரே தவிர, ஆசிரியரிடமோ, அலுவலரிடமோ கடுமையாகப் பேசமாட்டார், ஒழுங்கு பண்ணுங்க என்றுதான் சொல்வார். வேறு எதுவும் சொல்லமாட்டார். குறையே

சொல்ல மாட்டார். பத்து வருடங்கள்
நிர்வாகத்திடமும், என்னிடமும் பழகியதில்
எந்தத் தப்பும் இல்லை. எல்லாம் ஒழுங்காக
நடத்தி, எங்கட்கு ஆதரவு செய்துவிட்டு
போனாரேதவிர, எந்தத் தப்பும் சொல்வதற்
கில்லை. பத்து வருடங்கள் கல்லூரியில்
பணிபுரிந்து, ஓய்வு பெறும்போது, மேலும்
ஒரு வருடம் பணியில் இருக்க வேண்டினோம்.
பணியில் தொடர மறுத்தார். பத்து
ஆண்டுகள் கல்லூரியில் பணிபுரிந்ததே
போதும் என்று கூறிவிட்டார்.

''நம் கல்லூரியில் வேறு பணி செய்வதற்குக்
கூப்பிட்டுப் பார்த்தேன். எந்த வேலையும்
வேண்டாம் என்று கூறி விட்டார். அந்த மாதிரி
ஒரு மனிதரை நாம் எங்கும் பார்க்க இயலாது.
பணத்துக்கு ஆசைப்படும் மனிதர் அவர்
அல்லர்; சாதாரணமானவரல்லர்.
நான் எப்படி சாதிபேதம் இல்லை
என்கிறேனோ, அதுபோல பேராசிரியர்
இராமதாசும் சாதிபேதம் பார்ப்பதில்லை.
சீர்திருத்தக் கருத்தினை என்றும் ஆதரிப்புவர்''.

முதலியார் கல்வி நிறுவனத்தின் தலைவர் முத்துசாமி முதலியாரும், நிர்வாகப் பொறுப்பாளர்களும், பேரா சிரியர் க. இராமதாசும் இணைந்து, ஒத்த கருத்துக் களுடையவர்களாக இருந்த காரணத்தால்தான், ஈரோடு கலைக் கல்லூரிக்குப் பேரும் புகழும் நிலை பெற்றன. நிர்வாகமும், கல்லூரி முதல்வரும் எவ்வாறு இருக்க வேண்டும் என்பதற்கு முன்னாள் முதல்வருக்குப்

பெரியவர் முத்துசாமி முதலியார் தந்த பாராட்டுக் களே சான்று பகரும்.

**பெரியவர் முத்துசாமி முதலியார் தலைமையில் நூல் வெளியீடு**

"ஈரோடு கலைக் கல்லூரியில் நூலகராக விளங்கும் டாக்டர் மா. அண்ணாதுரை அவர்கள். பாவேந்தரிடம் பற்றும், உறவும் பூண்ட தமிழ்ப்பற்று மிக்க இளவல். பாவேந்தர் அருமை பெருமைகளைப் படிப்போர் தெளிவுறுமாறு மிகவும் ஆழ்ந்த ஆய்வு நோக்கில் இதனை இயற்றியுள்ள தகுதியினைக் காண்போர் பாராட்டத் தவறார்" என்று பேராசிரியர் க. அன்பழகனார் அவர்கள் பாராட்டினார். இத்தகைய சிறப்பிற்குரியவர் நூலகர் டாக்டர் மா. அண்ணாதுரை. இவர் எழுதிய 'பாரதிதாசன் இதழ்ப்பணிகள்' எனும் பி. எச். டி. ஆய்வு நூல் ஈரோடு கலைக் கல்லூரிக் கலையரங்களில் 2—1—1991-ஆம் நாளில் வெளியிடப் பெற்றது. நிறுவனத் தலைவர் பெரியவர் முத்துசாமி முதலியார் தலைமை ஏற்று, நூலாசிரியரின் பெரும் முயற்சியைப் பெரிதும் ப்ராராட்டினார்.

தஞ்சை, தமிழ்ப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் சி. பாலசுப்பிரமணியன், 'பாரதிதாசன் இதழ்ப் பணிகள்' எனும் நூலின் முதற்படியை வெளியிட்டார். ஈரோடு கலைக் கல்லூரியின் செயலாளர் - தாளாளர், வள்ளல் ராணா கா. வெ. இலட்சுமணன் முதற்படியைப் பெற்றார்; வாழ்த்தினார். பாவேந்தார் பாரதிதா சனாரின் புதல்வர் கவிஞர் மன்னர்மன்னன், கவிஞர் முருகுசுந்தரம், ஆய்வு நெறியாளர் டாக்டர். குருவிக் கரம்பை ஏ. சண்முகம், புதுவைப் பல்கலைக் கழக

இணைத்தமிழ்ப் பேராசிரியர் டாக்டர் நா. ஆறுமுகம் ஈரோடு கலைக் கல்லூரி. தமிழ்த்துறைத் தலைவர் டாக்டர் மே. பாலமுருகன், இந்நூலாசிரியரின் துணை வியார் திருமதி விருத்தாம்பிகை அண்ணாதுரை ஆகியோர் நூலின் சிறப்புத் தன்மைகளை எடுத்துக் காட்டினர்; வாழ்த்துரை வழங்கினர். நூலாசிரியர் டாக்டர். மா. அண்ணாதுரை ஏற்புரையில், டாக்டர் பட்ட ஆய்விற்கு உதவிய நிறுவனத் தலைவர் முத்துசாமி முதலியார், தாளாளர் க. வெ. இலட்சுமணன், நிறுவனப்பொறுப்பாளர்கள் ஆகியோர் களின் அருள் உள்ளத்தையும், நல்செயலினையும் போற்றினார்.

**இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றக் கருத் தரங்கில் முத்துசாமி முதலியார்**

இந்தியப் பல்கலைக் கழகங்களில் பணியாற்றும் தமிழறிஞர்கள் 9—1—1968-ஆம் நாளில் 'இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம்' என்ற அமைப்பைத் தொடங்கினர். இவ்வமைப்பு ஆண்டு தோறும் இந்திய நாட்டிலுள்ள ஏதேனும் ஒரு பல்கலைக் கழகத்தில் தமிழ் ஆராய்ச்சி நிகழ்த்தும். இந்த மன்றக் கருத்தரங்குகளின் மூலமாகத் தமிழ் ஆராய்ச்சியில், வளர்ச்சியில் ஆர்வம் கொண்ட இந்தியப் பல்கலைக் கழகங்களில், பல்கலைக் கழகங்களோடு இணைந்த கல்லூரிகளில், ஏனைய நிறுவனங்களில் பணிபுரியும் தமிழாசிரியர்களை ஒன்றுபடுத்தித் தமிழாராய்ச்சி யினை வளர்த்தல் இதன் குறிக்கோள்களில் ஒன்றாகும்.

இந்தக் குறிக்கோள்கள் வெற்றியடைய முதலியார் கல்வி நிறுவனம் தம்மால் இயன்ற உதவியை நல்கியது.

இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றத்தின் 18-ஆம் கருத்தரங்கினை ஈரோடு கலைக் கல்லூரியில் 13—6—86, 14—6—86 ஆகிய நாள்களில் முன்னின்று நடத்திய பெருமை முதலியார் கல்வி நிறுவனத்திற்கும், அதன் தலைவர் பெரியவர் முத்துசாமி முதலியார்க்கும் தாளாளர் க. வெ. இலட்சுமணனுக்கும் உரியதாகும். கருத்தரங்கில் கலந்துகொண்ட அனைத்துத் தமிழறிஞர் களையும், கருத்தரங்கு பேரறிவாளர்களையும் இன்முகத் துடன் முதலியார் கல்வி நிறுவனப் பெருமக்கள் வரவேற்றனர். அவர்கள் தங்குவதற்கு வேண்டிய உணவு-உறைவிடம் தரப்பட்டு, சிறந்த முறையில் விருந்தோம்பல் செய்தது முதலியார் கல்வி நிறுவனம்.

தமிழக அரசின் அமைச்சர் பெருமக்களும், தமிழறிஞர்களும், கல்வியாளர்களும், ஈரோடு கலைக் கல்லூரியில் நடந்த மன்றக் கருத்தரங்கில், மாநாட்டில் கலந்துகொண்டு சிறப்புச் செய்தனர்.

கருத்தரங்கில் ஆய்வுக்கோவை வெளியிடப்பட்டது. அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் பேராசிரியர் சை. வே. சிட்டிபாபு, ஆய்வுக் கோவையின் முதற்படியை வெளியிட்டார். முதலியார் கல்வி நிறுவனத்தின் தலைவர் பெரியவர் முத்துசாமி முதற் படியைப் பெற்றுக்கொண்டு, தமிழ்மொழியின் ஏற்றத் தினையும், தமிழ் வளர ஆக்கப்பூர்வமான கருத்து களையும் எடுத்து இயம்பினார்.

ஈரோடு கலைக் கல்லூரியில் நடைபெற்ற இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றக் கருத்தரங்கில் கலந்து கொண்ட பேரறிஞர்களுக்குப் பெரியவர் முத்து சாமி முதலியார், வள்ளல் ராணா.க.வெ. இலட்சுமணன்,

வள்ளல் கே. கே. பாலுசாமி ஆகிய மூன்று புரவலர் களும் இணைந்து 'வண்ணத் தோல்பை' பரிசாக அளித்து, வந்திருந்த பேரறிஞர்களைப் பெருமைப் படுத்தினார்.

## கல்வி நிறுவனங்களில் ஒழுக்கத்தை அதிகம் வலியுறுத்தியவர்

பெரியவர் முத்துசாமி முதலியார் ஒழுக்கத்தை உயிராகக் கருதியவர்; ஒழுக்கம் நிறைந்த பெரியவர் களுடன் நட்பு கொண்டு இருந்தவர். எனவே, இயல்பாகவே இவரிடம் ஒழுக்கம் மேம்பட்டு இருந்தது. எனவேதான், தாம் தலைமைப் பொறுப்பு ஏற்ற கல்வி நிறுவனங்களில் ஒழுக்கத்தை வலியுறுத்தினார்; வளர்த்தார்; ஒழுக்கத்தைப் பிறரிடம் எதிர்பார்த்தார். ஆண்களும் பெண்களும் சேர்ந்து, கல்லூரியில் படித்தால் ஒழுக்கம் கெட்டு விடும் என்று அஞ்சினார். இதன் காரணமாகவே ஈரோடு கலைக் கல்லூரியை, ஆண்கள் கல்லூரியாகவே இன்று வரை நடத்தி வருகின்றார். ஒழுக்கத்தின் மீது இவர்க்குள்ள உறுதியான பண்பைப் பின்வருமாறு குறிப்பிடுவர் பேராசிரியர் க. இராமதாசு:

> ''ஒழுக்கத்தைத்தான் அதிகமாக வலியுறுத்தினார் திரு. முத்துசாமி முதலியார். ஈரோடு கலைக் கல்லூரியில் ஆண்களும் பெண்களும் சேர்ந்து படிப்பதை அவர் விரும்பவில்லை. ஆண்-பெண் இருபாலர்க்கும் சேர்ந்து கல்வி தரவேண்டும் என்று வலியுறுத்திக் கூறியும், அவர் ஒரே பிடிவாதமாக இருந்து விட்டார். அதற்கு என்ன காரணமென்றால், இந்தக் கல்லூரியில், ஒரே வயதில் உள்ள மாணவ, மாணவியர்

ஒழுக்கம் தவறி நடந்து விடுவார்களோ என்ற பயம்தான். ஆகவே, ஒழுக்கத்தைத் தான் அதிகமாக வலியுறுத்தினார். ஒழுக்கத்தைத் தலையாய பண்பாகக் கருதினார்''.

**கல்வி நிறுவனங்களில் ஒழுகலாறுகள்**

எழுத்தறிவிக்கும் ஆசிரியர்களைத் தெய்வமாகக் கருத வேண்டும் என்பர் பெரியவர் முத்துசாமி முதலியார். அவ்வாறே, கல்வி நிறுவனங்களில் பணிபுரியும் அனைவரையும் தெய்வமாகக் கருதினார். கல்லாமை எனும் இருளை–அறியாமை எனும் இருட்கடலை நீக்கி அறிவு புகட்டும் அனைவரும் தெய்வத்திற்குச் சமமானவர்கள் என்று எண்ணினார்.

தாய், தந்தை, ஆசிரியர் ஆகிய இம்மூவரும் தெய்வம் என்று பாவேந்தர் பாரதிதாசன் தம் திருக்குறளுரையில் குறிப்பிடுவார். ஒருவருடைய வாழ்வில் தாய், தந்தை ஆகிய இருவர்க்கும் அடுத்த நிலையில் இருப்பவர் ஆசிரியர். இந்தப் புகழுக்குரிய ஆசிரியர், கற்றுத்தரும் மாணவர்களுக்கு எடுத்துக் காட்டாக விளங்க வேண்டும் என்பதில் உறுதியாக இருப்பவர் பெரியவர் முத்துசாமி முதலியார். இவர், கல்வி நிறுவனங்களில் பணிபுரிவோர்களுக்கு எடுத்துக் காட்டாக இருப்பவர் என்பதில் ஐயமில்லை. வாழ்வில் தாம் கடைபிடித்து ஒழுகும் ஒழுகலாறுகளைப் பிறரும் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று விரும்புகின்றவர். இவர் பின்பற்றிய ஒழுகலாறுகள் இவை:

நான் கடவுள் நம்பிக்கை கொண்டு, ஆன்மீகத் துறையில் ஈடுபடுவேன்.

நான் எந்த உயிரினங்களுக்கும் மனதறிந்து தீங்கோ, அழிவோ புரியமாட்டேன்.

நான் எவரையும் வன்முறையில் தாக்கமாட்டேன்; பிறரைத் தாக்கும் கொள்கைக்கு உடன்படவும் மாட்டேன்.

நான் வன்முறைக் கிளர்ச்சியில், அழிவை ஏற்படுத்தும் தீய செயல்களில் பங்கு கொள்ள மாட்டேன்.

நான் மனிதகுல ஒருமைப்பாட்டிலும் ஒற்றுமையிலும் நம்பிக்கை கொண்டு இருப்பேன்.

அ) சாதி, இனம் முதலியவைகளின் அடிப்படையில் எவரையும் தீண்டத் தகாதவராகவோ, உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்றோ கருத மாட்டேன்.

ஆ) நான் செல்வம், செல்வாக்கு ஆகியவைகளின் அடிப்படையில் எவரையும் மேலானவர் - கீழானவர் என்று கருத மாட்டேன்.

நான் எல்லாச் சமயங்களிடத்திலும் சம்பிரதாயங்களிடத்திலும் சகிப்புத் தன்மையும் சமநோக்கமும் கொண்டிருப்பேன்.

நான் தொழிலிலும், நடத்தையிலும் உண்மையைக் கடைப்பிடித்து வருவேன்.

நான் திருட்டுத்தனமாகப் பிறர் பொருளைக் கைக் கொள்ள மாட்டேன்.

நான் இல்லறப் பண்புகளுக்கு ஏற்ப, மகிழ்ச்சியுடன் வாழ்ந்துகொண்டே புலனடக்கத்தை வாழ்க்கை நெறியாகக் கடைபிடிப்பேன்.

நான் வாக்குரிமை (வோட்டு) வழங்க பணம் வாங்கவோ, கொடுக்கவோ மாட்டேன்.

நான் சமூக மேம்பாட்டுக்கு ஊறு விளைவிக்கும் தீய வழக்கங்களை மேற்கொள்ளவோ, ஆதரிக்கவோ மாட்டேன்.

நான் போதை தரும் பொருட்களைப் பயன்படுத்த மாட்டேன்; புகை பிடிக்க மாட்டேன்.

**உலகில் உயர்ந்தோர்**

உலகில் உயர்ந்தோர் மூவர் ஆவார். விருந்து உபசரிப்போர் கொடுத்ததைப் பெற்று மகிழும் விருந்தினர்; அரிய உயிர்களைக் கொல்லப் புகுவானை இடையில் சென்று தடுத்து, நீக்கி வாழ்பவர்; தம் மனவுறுதியால் நல்லொழுக்கம் உடையவராக வாழும் ஆசிரியர். இம்மூவரும் உலகில் உயர்ந்தவராக மதித்துப் போற்றப்படுவர். இதனை,

''ஒல்வது அறியும் விருந்தினும் ஆருயிரைக்
கொல்வது இடை நீக்கி வாழ்வானும் – வல்லிதின்
சீலம் இனிது உடைய ஆசானும் இம்மூவர்
ஞாலம் எனப்படு வார்''

என்று நல்லாதனாரின் திரிகடுகத்தின் வழி அறியலாம்.

உலகில் உயர்ந்தோரான ஆசிரியர்கள் ஒழுக்க முடையவராக விளங்க வேண்டும் என்பதில் பெரியவர் முத்துசாமி முதலியார் பெரிதும் விரும்பினார்.

**ஆசிரியர்கள் கடைப்பிடிக்க வேண்டிய ஒழுக்க நெறிகள்**

''குலனரு டெய்வங் கொள்கை மேன்மை
கலைபயி றெளிவு கட்டுரை வன்மை
நிலமலை நிறைகோன் மலர்நிகர் மாட்சியும்

உலகிய லறிவோ டுயர்குண மினையவும்
அமைபவ னூலுரை யாசிரி யன்னே''

என்று நன்னூல் சிறந்த ஆசிரியர்களுக்குரிய இலக்கணத்தை வகுத்துக் கூறும். இங்ஙனமே பெரியவர் முத்துசாமி முதலியார், ஆசிரியர்கள் தம் வாழ்க்கையில் கடைப்பிடித்து ஒழுக வேண்டிய ஒழுக்க நெறிகளைத் தொகுத்துத் தருகிறார்:

நான் நேரம் தவறாமையைக் கடைபிடிப்பேன்.

நான் ஆசிரியப் பணியைத் தெய்வமாக மதிப்பேன்.

நான் மாணவர்களின் அறிவு வளர்ச்சியுடன், அவர்களின் நன்னடத்தை வளர்ச்சியடைவதிலும் கவனம் செலுத்துவேன்.

நான் சட்டத் திட்டங்களுக்கு எதிரான முறையில் மாணவர்களைத் தேர்வுகளில் தேர்ச்சிப் பெற உதவியாக இருக்க மாட்டேன்.

நான் அரசியல் கட்சிகளில் முக்கிய பங்கு எடுத்துக் கொள்ள மாட்டேன்; மாணவர்களையும் அரசியல் பங்கெடுக்கத் தூண்ட மாட்டேன்.

நான் போதை தரும் பொருள்களைப் பயன்படுத்த மாட்டேன்.

நான் கல்வியைப் பரப்பும் பொருட்டு ஒவ்வொரு வாரமும் ஒரு மணி நேரம் கட்டணமின்றி சேவை செய்வேன்.

**கல்வி நிறுவனத்தில் அலுவலர் பின்பற்ற வேண்டிய ஒழுக்கநெறிகள்**

ஆசிரியர்கள் ஒழுக்கத்தைப் பின்பற்றினால் மட்டும் போதாது. கல்வி நிறுவனங்களில் பணிபுரியும் அலுவலர்

களும் ஒழுக்க நெறியில் நின்று பணி செய்ய வேண்டும். அப்பொழுதுதான், கல்வி நிறுவனங்கள் வளர்ச்சி பெறும் என்று கருதினார் பெரியவர் முத்துசாமி முதலியார். அலுவலர்கள் கடைபிடிக்க வேண்டிய ஒழுக்க நெறிகளைப் பின்வருமாறு இயம்புகின்றார்:

நான் நேரம் தவறாமையைக் கடைபிடிப்பேன்.

நான் என்னுடைய செயலில் உண்மையாக இருப்பேன்.

நான் இல்லாமையை உண்டாக்கும் இடையூறுகளுக்கும், நாச வேலைகளுக்கும் இடம் கொடுக்க மாட்டேன்.

நான் கள்ளுண்ண மாட்டேன்; தவிர மயக்கத்தைத் தரும் பொருட்களைப் பயன்படுத்த மாட்டேன்.

நான் சூதாட மாட்டேன்.

நான் குழந்தைத் திருமணம், முதியோர் திருமணம் ஆகிய தீய வழக்கங்களுக்கு இடமளிக்க மாட்டேன்.

**மாணவர்கள் பின்பற்ற வேண்டிய ஒழுக்க நெறிகள்**

மாணவர்கள் அன்னத்தை-பசுவை-கற்பூரத்தைப் போன்றவர்கள். இவர்கள் சிறந்த மாணவர்களாக இருக்க வேண்டும். இல்லையாயின் மாணவர்கள் கிள்ளை, பொள்ளற் குடம், ஆடு, எருமை, பன்னாடை - போன்றவைகளாகக் கருதப்படுவார்கள். நன்னூல் ஆசிரியரும்,

"களிமடி மானி காமி கள்வன்
பிணிய னேழை பிணக்கன் சினத்தன்
துயில்வோன் மந்தன் தொன்னூற் கஞ்சித்
தடுமா றுளத்தன் தறுகணன் பாவி
படிறனின் னோர்க்குப் பகரார் நூலே"

என்று ஒழுக்கமற்ற மாணவர்களுக்கு ஆசிரியர் பாடம் பகரார் என்பதை எடுத்துக் கூறுவார். பெரியவர் முத்துசாமி முதலியாரும் ஒழுக்கமற்ற மாணவர்கள் திருந்தி, சிறந்த மாணவர்களாக விளங்க வேண்டும் என்பதற்காகப் பின்வரும் குறிப்புரையைத் தருவர்:

"நான் காலை 5-00 மணிக்குப் படுக்கையை விட்டு எழுந்து படிப்பேன்.

நான் ஆன்மீகத் துறையில் பற்றுள்ளவனாக இருப்பேன்.

நான் நேரம் தவறாமையைக் கடைபிடிப்பேன்.

நான் தேர்வுகளில் தவறான முறையில் தேர்ச்சி பெற முற்பட மாட்டேன்.

அழிவை விளைவிக்கும் வன்முறைக் கிளர்ச்சிகளில் பங்குகொள்ள மாட்டேன்; அடிதடிச் சண்டைகளில் சேரமாட்டேன்.

கீழ்த்தரமான ஆபாச சொற்களைப் பயன்படுத்த மாட்டேன்; ஆபாசமான புத்தகங்களைப் படிக்க மாட்டேன்.

நான் போதை தரும் பொருள்களைப் பயன்படுத்த மாட்டேன்; புகை பிடிக்க மாட்டேன்.

வாக்குரிமை (வோட்டு) வழங்கப் பணம் வாங்கவோ கொடுக்கவோ மாட்டேன்; வேறு ஆசை வார்த்தைகளாலும் நான் வாக்குரிமை கொடுக்கவும் வாங்கவும் மாட்டேன்.

நான், என் சொல், செயல்களில் நேர்மையையும், உண்மையையும் உறுதியாகக் கடைபிடித்து வருவேன்.

நான் தாய், தந்தையரிடமும், பெரியோர்களிடமும், ஆசிரியர்களிடமும் பணிவுடன் நடந்து கொள்வேன்."

## ஏணி – தோணி – ஆசிரியர்

பேச்சு வழக்கில் ஏணி – தோணி என்பார்கள். ஏணி, தோணி ஆகிய இரண்டு பொருட்களும் வாழ்க்கையில் பயனுள்ளவை. ஒரு மனிதன் ஏணியைப் பயன்படுத்தி உயரமான இடத்திற்கு ஏறுவான். ஏணி அந்த மனிதனுடன் செல்வதில்லை; தோணி ஆற்றைக் கடந்து செல்பவர்களைக் கரை சேர்க்கும்; ஆற்றங் கரையில் இருபுறங்களிலுள்ள ஊர்களையும், அவ்வூர் மக்களையும் இணைக்கின்ற பாலமாக விளங்கும் தோணி. ஆனால், மனிதனை ஏற்றிச் சென்ற தோணி கரை சேர்வதில்லை. நீர் நிலையிலேயே நிற்கும். கல்லாத இளம் பிஞ்சு உள்ளங்களுக்கு–இளைஞர்களுக்கு அறிவைத் தரும் ஆசான் ஏணியைப் போன்றவர்; தோணியைப் போன்றவர்; எனவே, அறிவைத் தரும் ஆசான் நன்னலங்கருதக் கூடாது. ஏணியைப் போன்று, தோணியைப் போன்று, பிறர்க்காகப் பயன்படல் வேண்டும் என்று பெரியவர் முத்துசாமி முதலியார் தம் சொற்பொழிவுகளில் ஆசிரியர்களின் உயர்வான பண்புகளைக் குறிப்பிடுவர்.

## ஆசிரியர்களின் ஊதியத்தை வழங்குவதில் முன்னுரிமை

"படிப்பிலார் நிறைந்த குடித்தனம், நரம்பின்
துடிப்பிலார் நிறைந்த சுடுகா டெங்க!
அறிவே கல்வியாம்; அறிவிலாக் குடும்பம்
நெறிகா ணாது நின்ற படிவிழும்!
... ....

... ...
கல்வி இல்லான் கண்இலான் என்க;
இடிக்குரற் சிங்கநேர் இறையே எனினும்
படிப்பிலாக் காலை நொடிப்பிலே வீழ்வான்
கல்லான் வலியிலான்; கண்ணிலான்; அவன்பால்
எல்லா நோயும் எப்போதுமுண்டு''

என்ற உண்மையை உணர்ந்த உயர்ந்தோர் ஆசிரியர்கள். இவர்கள் தம் கடமைகளைச் செவ்வனவே செய்யும் போது, அவர்களுக்குரிய ஊதியத்தைத் தடையின்றி வழங்க வேண்டும் என்பதில் முனைப்புடையவர் பெரியவர் முத்துசாமி முதலியார். ஈரோடு கலைக் கல்லூரி – ஈரோடு தொழில் நுட்பப் பயிற்சிக்கல்லூரி – அருள்நெறித் திருப்பணி மன்றப் பள்ளிகள் ஆகியவை அரசின் உதவித் தொகை பெற்ற காலத்தும், பெறாத காலத்தும், ஆசிரியர்களின் நலன்களில் அக்கறை கொண்டு, அறப்பணியாற்றும் ஆசிரியர்களின் ஊதியத்தைத் தங்கு தடையின்றி வழங்கிய பெருமைக் குரியவர் இவர். ஏனெனில், 'வாத்தியார் கூலியை வைத்திருக்க வேண்டாம்' என்ற உலக நீதியை அறிந்தவர் பெரியவர்.

### மலேசியா மண்ணில் முத்துசாமி

மலேசியா நாட்டில் கோலாலம்பூர் நகரில் உலகத் தமிழ்ச் சங்கத்தின் ஆறாவது மாநாடு நடைபெற்றது. தமிழின் – தமிழரின் வளர்ச்சியைப் பற்றி ஆராயவும், கல்வி வளர்ச்சியைப் பற்றி ஆராயவும் கூடிய அறிஞர் பெருமக்களில் ஒருவராகப் பெரியவர் முத்துசாமி முதலியாரும் கலந்து கொண்டார். மாநாட்டு அறிஞர் பெருமக்களிடம் கல்வி பற்றியும், சமயத்தைப் பற்றியும் கலந்துரையாடினார்.

### சிங்கை மண்ணில் முத்துசாமி

கோலாம்பூரில் உலகத் தமிழ் மாநாட்டில் கலந்து கொண்ட பெரியவர் முத்துசாமி, பின்பு சிங்கப்பூர் சென்றார். சிங்கப்பூரின் அழகும், வனப்பும் இவரைக் கொள்ளை கொண்டது. சிங்கையில், திரும்பும் இடமெல்லாம் தமிழைக் கண்டார். தமிழ் மொழி, தமிழ்நாட்டின் ஆட்சி மொழியாக - பாட மொழியாக இருக்க வேண்டும் என்பதில் பேரவாக் கொண்ட இவர், சிங்கப்பூரில் தமிழ் மேன்மை நிலையடைந்தும், ஆட்சி மொழியாகவும் இருப்பதைக் கண்டு களிப்படைந்தார். தமிழ்நாட்டில், எல்லா நிலையிலும் தமிழ்ப் பயிற்சி மொழியாக இல்லையே என்று வருந்தினார்.

### அயல்நாட்டு மண்ணில் காந்தீயக் கொள்கை

மலேசியாவில் நடைபெற்ற உலகத் தமிழ் மாநாட்டில் கலந்து கொள்ளச் சென்ற பெரியவர் முத்துசாமி முதலியார், எளிமையான ஆடையே உடுத்திச் சென்றார். ஆடம்பரமின்றி, கைத்தறி ஆடையே அணிந்து சென்ற காந்தீயவாதியாவார். அயல் மண்ணில் கூட, புலால் உணவு உட்கொள்ளாது, காந்தீய நெறிகளையே கடைபிடித்து, தமிழகம் திரும்பிய பெரியவர் இவர்.

### தமிழகம் திரும்பிய முத்துசாமி முதலியார்க்குப் பாராட்டு

ஆறாவது உலகத் தமிழ் மாநாட்டில் கலந்து கொண்டு பெரியவர் முத்துசாமி முதலியார் தமிழகம் திரும்பினார். தமிழகம் திரும்பிய இந்தத் தமிழ் முதியவர்க்குத் தமிழ்ச் சான்றாளர்கள் பாராட்டுகள் தெரிவித்தனர். பல அமைப்புகள் பாராட்டுகள் செய்தன; சிறப்புகள் செய்தன. முதலியார் கல்வி

நிறுவனம் - ஈரோடு கலைக் கல்லூரி - ஈரோடு தொழில் நுட்பப் பயிற்சிக் கல்லூரி போன்ற கல்விச் சாலைகள் பல கண்ட இந்தப் பெரியவர் முத்துசாமி முதலியார்க்கு 25—11—1987–ஆம் நாளில் ஈரோடு கலைக் கல்லூரியின் சார்பில்பாராட்டு விழா நடத்தப் பட்டது. அனைத்து ஆசிரியர்களுக்கும் அலுவலர் களுக்கும் அயல்நாடு சென்று வந்ததன் நினைவாக எழுதுகோல்கள் (Fountain Pens) வழங்கினார்; அயல் நாட்டில் தாம் பெற்ற அனுபவ உணர்வுகளைப் பகிர்ந்து கொண்டார். பெரியவர்க்கு வாழ்த்துப்பா வழங்கப்பெற்றது.

''முதலியார் கல்வி நிறுவனம் கண்டு
முதன்மையாய் வளர்த்த நிறுவனச்
சக்கரவர்த்தியே வருக!
கல்வி நிலையங்கள் ஆலயங்கள் என்று
கருத்துடன் வளர்த்து வரும்கல்வித் தந்தையே
வருக!
நம் கல்லூரி தன்னாட்சிப்பெற தளராது
பாடுபட்ட
தன்னிகரில்லாத் தலைவரே வருக!
எங்கும் தன் குலம் விளங்க ஏற்றமுற
செங்குந்தர் குலம்காக்கும் சேனாபதியே வருக!
சமுதாய மாற்றங்கள் சரியாக விளங்குமெனில்
தனியனாய்த் தாங்கும் சீர்திருத்தவாதியே வருக!
சிவநெறியாம் அன்பு நெறியில் ஆழமாய்க்
காலூன்றி
அருள்நெறியில் நிற்கும் ஆன்மீகச் செம்மலே
வருக!

தமிழ்நிலப் பரப்பில் தனியிடம் பெற்ற
தரணிக் காவலரே! கீழைநாடுகள் சென்று
தமிழ் மாநாட்டில் கலந்து, வரும் சான்றோரே
வருக!
வாழ்த்துகின்றோம் மனமாற!
வரவேற்கின்றோம் உளமாற!

**'கல்வித் தந்தை' எனப் போற்றுதல்**

கரையிலாக் கல்வியை அதிகம் கற்காதவர்; இருப்பினும், கல்வித் தொண்டில் தம்மை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டவர் பெரியவர் முத்துசாமி முதலியார். கல்வியின் வளர்ச்சியே-முதலியார் கல்வி நிறுவனத்தின் வளர்ச்சியே இவர்தம் வளர்ச்சியாக இருந்தது. இவர்தம் அயராத கல்வித் தொண்டைக் கண்ட கல்வியாளர்களும், நிறுவனத்தார்களும், பேராசிரியர்களும், மாணவர்களும் அன்பொழுக – பாசமொழுகக் 'கல்வித்தந்தை' என்று அழைத்தனர். 'கல்வித் தந்தை' என்று போற்றினர்.

**கல்விச் சக்கரவர்த்தி' என்ற பட்டம் வழங்கல்**

அருள்நெறிப் புரவலர் முத்துசாமி முதலியாரின் நிர்வாகத் திறனையும், கல்விப்பணியினையும் பாராட்டும் வகையில், முதலியார் கல்வி நிறுவனப் பெருமக்கள் 20—10—1991-ஆம் நாளில் ராணா திருமண மண்டபத்தில் பாராட்டு விழா நடத்தினர்.

''தமிழுக்கு அமுது என்று பெயர்;
கல்விப் பணிக்கு முத்துசாமி என்று பெயர்;
பாலர் பள்ளி முதல் பட்டப் படிப்புக்
கல்லூரி வரை தன்னை முழுமையாக ஈடுபடுத்தி,

அறியாமைப் பிணியை அகற்றி,
கல்விப் பணி ஆற்றி, செழுமையாகச்
சீரோடும் சிறப்போடும் பெரியார்
மாவட்டத்தில் பொதுப்பணி நிறுவனங்களைப்
பெருமையோடு நடத்தி வருபவர்
திரு. ஆர். ஏ. என். முத்துசாமி முதலியார்''

என்று மனந்திறந்த பாராட்டு வழங்கினர் முதலியார் கல்வி நிறுவனப் பெருமக்கள். கல்விப் பணியைப் பாராட்டி, 'கல்விச் சக்கரவர்த்தி' என்ற சிறப்புப் பட்டம் வழங்கி, மகிழ்ந்தனர்.

**'தங்கப் பதக்கம்' தந்த தங்கம்**

ஆசிரியர்களின் சேவையை – மாணவர்களின் திறமையைப் பாராட்ட வேண்டும் என்று விரும்பினார் பெரியவர் முத்துசாமி முதலியார். 16—12—1993--ஆம் நாளில், இவரின் சீரிய தலைமையில் ஆசிரியர்களின் சேவையைப் போற்றும் வகையில் பாராட்டு விழாவும், மாணவர்களுக்குத் தங்கப் பதக்கம் வழங்கும் விழாவும் நடைபெற்றன. ஆசிரியர்களுக்குக் கைக்கடிகாரங்கள் பரிசாக வழங்கப்பெற்றன. தேர்வில் ஆறு பருவங் களிலும் முதல் முயற்சியில் வெற்றி பெற்ற மாணவர் களுக்குத் தங்கப் பதக்கங்களைத் தவத்திரு டாக்டர் குன்றக்குடி அடிகளார் வழங்கினார். பாரதியார் பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் கொ. ம. மாரிமுத்து மாணவர்களுக்கு நற்சான்றிதழ்களை வழங்கி, பாராட்டி, சிறப்புரையாற்றினார். நிறுவனப் பெருமக்கள், பெரியவர் முத்துசாமிமுதலியாரையும், ஆசிரியர்களையும், மாணவர்களையும் பாராட்டிப் பேசினர்.

தவத்திரு குன்றக்குடி அடிகளார் 'தங்கப் பதக்கம்' தந்த பெரியவர் முத்துசாமி முதலியாரைப் புகழ்ந்து, சொற்பொழிவு நிகழ்த்தினார்:

"ஆறு பருவங்களிலும் தொடர்ந்து தேர்வு பெற்ற மாணவர்களுக்குத் தங்கப் பதக்கம் வழங்குகிறார்கள். இது ஆர். ஏ. என். எம் கல்வித்தந்தை அவர்களுடைய விருப்பம். ஒன்றைச் சொல்ல ஆசைப்படுகிறேன். அவர் தங்கப் பதக்கம் கொடுக்கிறார் என்றால், எனக்குத் தெரிந்து உலகத்தில் யாரும் யாருக்கும் சும்மா பாராட்டுக்கள் நடத்துகின்ற பழக்கம் கிடையாது. பரிசும் சும்மா தரமாட்டார்கள். ஏதோ ஒன்றை அவர்கள் எதிர்ப் பார்க்கிறார்கள். அந்த எதிர்ப்பார்ப்புக்கு இது ஒரு முன்பணம். எனவே, கல்வித் தந்தை ஆர். ஏ. என். எம். என்ன எதிர் பார்க்கிறார். பல்கலைக் கழகத்தில் ஆட்சிக்குழுவிற்கே பேராசிரியர் ஒருவர் சென்றதே பெரியதாக மனநிறைவு கொள்கிறார். பி. எஸ். ஜி. கல்லூரியில் ஒரு ஆசிரியர் பணிக்குச் சேர்ந்ததே பெரிய பேறாகக் கருதுகிறார். இங்கே அறிவியல் துறையில் படிக்கும் மாணவர்கள் மேலும், மேலும் ஆய்வு செய்து, இந்தக் கல்லூரியில் படித்த ஒருவர் நோபல் பரிசு, அறிவியல் துறையில் விஞ்ஞானத் துறையில் பெற்றார் என்று சொன்னால் அது இந்த நிறுவனத்திற்கு மிகப் பெருமையாக இருக்க முடியும்."

மேலும், பாரதியார் பல்கலைக் கழகத் துணைவேந்தரும், சிறந்த கல்வியாளருமான டாக்டர் கொ. ம. மாரிமுத்து, பெரியவர் முத்துசாமி முதலியாரின் கல்வித் தொண்டினை மதிப்பீடு செய்து, தந்த செப்புப் பட்டயம் இது.

> ''அடிகளார் அவர்கள் அழகாக எடுத்துச் சொன்னார்கள்! முத்துசாமி முதலியார் அவர்கள் எதையோ எதிர்பார்த்துதான் உங்களுக்குப் (மாணவர்களுக்குப்) பரிசு வழங்குவதாக! அது உண்மைதான்! உங்களிடமிருந்து என்ன எதிர்பார்க்கின்றார்? நீங்கள் நாளைக்குச் சம்பாதிப்பதிலே பாதியைக் கொடுக்க வேண்டும் என்று அவர்கள் கேட்கவில்லை! உங்களுடைய பட்டப் படிப்புப் பெருமைகளிலே பாதியைக் கொடு என்று அவர்கள் கேட்கவில்லை! அவர்கள் விரும்புவது எல்லாம் நீங்கள் இந்தப் பரிசுக் குரியவராகி, மேன்மேலும் வளரவேண்டும் என்ற ஆசை – பேராசையினால் உங்களைக் கேட்கின்றார். அதற்காக அவர்கட்கு (Thanks) நன்றி!
>
> இன்று, இந்தக் கல்லூரிக்கு முதல் மாணவராக வருகின்றீர்கள். அடுத்தப்படியாக, ஆராய்ச்சி நிலையத்திலே நீங்கள் முதலாவதாக வரவேண்டும். அதற்குப்பின் குன்றக்குடி அடிகளார் அவர்கள் விரும்புவது போல, நோபல் பரிசு வாங்கும் விஞ்ஞானிகளாக வளரவேண்டும் என்ற பேராவலால்தான்

முத்துசாமி முதலியார் கூறுகின்றார்!
அவர்கள் இந்த அருமையான காரியத்தை,
இந்தக் கல்விக்காக முதலியார் அவர்கள்
செய்து வருவது எனக்கு நன்றாகவே தெரியும்.
நான் இரண்டொரு மாதங்களிலே
துணைவேந்தர் பதவியில் இருந்து நீங்கப்
போகின்றேன். அந்த நிலையில், நான்
கூறுவதெல்லாம் உண்மையாகவே இருக்கும்.
ஏனென்றால் அதற்குமுன் நான் ஏதாவது
கூறினால், திரு. முதலியார் அவர்களிடமிருந்து
ஏதோ வாங்குவதற்காக நான் செய்யும்
முகஸ்துதி என்று நினைத்து விடுவார்கள்.

இப்போது அந்த நிலையில் இல்லை. நானும்
வெளியே போகின்றேன். அவரும் என்னிடம்
எதுவும் உதவி நாடியதில்லை. ஆகவே,
உண்மைகளை இந்த நிலையில் பரிமாறிக்
கொள்வதில் தவறில்லை. ஆகவே,
நான் இங்கு வந்ததற்குப் பின், பார்த்த பல
கல்லூரிகளில் உறுதியாகச் சொல்ல
முடியும். முதலியார் அவர்களுடைய
involvement இந்த மாணவர்களுக்காக
என்னென்ன செய்யவேண்டும் என்று
எப்பொழுதும் நினைக்கின்ற நிலையானது-நான்
உண்மையாகச் சொல்கிறேன்! மற்றவர்களிடம்
காணமுடிவதே இல்லை! இது அவர்களிடம்
உண்டு! இந்த ஒரு நிலைக்காகத்தான்
அவர்கள் எப்போது என்னைக் கூப்பிட்டாலும்
உடனே 'அய்யா! நான் வருகிறேன்'
என்று கூறிவிடுகிறேன். ஏன் என்றால்,

அவர்கள் செய்கின்ற நற்பணிகளிலே
பங்குகொண்டு, நாமும் பெருமை பட்டுக்
கொள்ளலாம் என்ற ஒரு ஆசை.''

**எதிலும் முதன்மையைக் காண்பவர்**

கல்வித் தொண்டு என்றாலும், ஆன்மிகத் தொண்டு என்றாலும், சமூகத் தொண்டு என்றாலும், தம்மை முழுமையாக ஈடுபடுத்திக் கொள்வார் பெரியவர் முத்துசாமி முதலியார். அவைகளில் முதன்மையாக விளங்கவேண்டும் என்பதே இவர் தம் நோக்கமாகும். தம் நோக்கம்–குறிக்கோள் வெற்றி பெற முனைப்புடன் இருப்பது இவரின் இயல்பாகும். இவர் தம் கல்வித் தொண்டு பற்றி ஈரோடு கலைக் கல்லூரியின் ஆண்டு மலரில் பின்வருமாறு பாராட்டப்படுகிறது:

'முதன்மைதான்!
எதிலும் முதன்மைதான்!
எங்கள் நிறுவனத்
தலைவர்க்கு வேண்டும்!
கல்வியில் அறிவில்
பேச்சினில் செயலில்
ஆற்றிலில் தோற்றத்தில்
முதன்மைதான் வேண்டும்! எங்கள்
முத்தான தலைவர்க்குக்
கல்விப் பணியே
வாழ்க்கையாய்க் கொண்டிருக்கும்
தலைவர்க்கு நன்றி'

**முத்துசாமி ஒரு சகாப்தம்**

''திருவாளர் ஆர். ஏ. என். முத்துசாமி முதலியார் ஒரு சகாப்தம்'' என்று தவத்திரு குன்றக்குடி அடிகளார்

குறிப்பிடுவார். ஆம்! பெரியவர் முத்துசாமிமுதலியாரின் கல்விப்பணி ஒரு சகாப்தம் தான். சிதறிக் கிடந்த செங்குந்தர்களை ஒன்று திரட்டினார். 'முதலியார் கல்வி நிறுவனம்' எனும் கல்வி நிறுவனத்தைப் பிற்பட்டோர்களின் உயர்கல்விக்காக ஏற்படுத்தினார். ஈரோடு கலைக் கல்லூரியை உருவாக்கினார். பின்பு தன்னாட்சிக் கல்லூரியாக மாற்றி அமைத்தார். ஈரோடு தொழில் நுட்பப் பயிற்சிக் கல்லூரி, காமாட்சியம்மன் தொழிற் பயிற்சி நிலையம் ஆகிய தொழிற் கல்விக் கழகங்களை உருவாக்கினார். பெரியார் மாவட்டத்திலே இன்று கல்வியில், தலைசிறந்த கல்வி நிறுவனமாகத் திகழ்கின்றது. இந்தப் பெருமைக்கு அடிப்படையாக இருப்பது பெரியவரின் அயராத உழைப்பு! பெரு முயற்சி! உண்மை! தான் கற்காத கல்வியைச் சமுதாயம் பெற வேண்டும் என்ற இவருடைய பரிணாம வளர்ச்சியே இவர்தம் கல்விப் பணியாகும்.

தவத்திரு குன்றக்குடி அடிகளார் பெரியவர் முத்துசாமி முதலியாரின் கல்விப் பணியைப் பின் வருமாறு பாராட்டுவது, இவர்தம் கல்வித் தொண்டிற்குக் கிடைத்த மணி முடியாகும்.

"முதலியார் அளர்கள் கல்விப் பணியில் ஆழம் பட்டு நின்றும் நடந்தும் வந்துள்ளமையை வரலாறு கூறும்! வாழ்த்தும்!"

சமய நெறியைப் பின்பற்றுவார்; இவருக்குச் செய்யும் கருமமே தெய்வம்''.

என்று அருள்நெறிப் புரவலர் முத்துசாமி முதலியாரின் சமய நெறியைப் பாராட்டுவர்; போற்றுவர் தவத்திரு குன்றக்குடி அடிகளார்.

**ஆன்மீகத்தென்றல்**

அருள்நெறிப்புரவலர் முத்துசாமி ஓர் அறிவார்ந்த ஆன்மீகச் சிந்தனையாளர்; சன்மார்க்க நெறியாளர்; அறிவு பூர்வமான ஆன்மீகமே வேண்டும். எதற்கு? மனிதனை மனிதனாக்க என்பர். அறிவையும் ஆன்மாவையும் பக்குவப்படுத்துவதே – இணைப்பதுவே சமயம் என்பர். நெறி தவறா வாழ்க்கை – அதுவும் நேர்மை தவறா வாழ்க்கை வேண்டும்; அதுவே ஆன்மீகத்தின் அடிப்படை என்பர். இதன்படி வாழ்ந்து வருபவரே இறைவனின் திருவருளைப் பெறுவர் என்பர்.

**நடமாடுங்கோயில்**

''உயிர்கள் அனைத்தும் கடவுளின் படைப்பு. அனைத்து உயிரும் ஈசனின் குடியிருப்பு. மாசில்லா மனமே ஈசன் கோயில். உயிர்களை நேசி! உனக்குண்டு இறைவன் ஆசி! உயிர்களை வழிபடு! அதுவே கடவுள் வழிபாடு! உயிர்களுக்குத் தொண்டு செய்! அதுவே கடவுள் தொண்டு! சடங்குகளும் சம்பிரதாயங்களும் நம்மைக் கடவுளிடம் இட்டுச் செல்லாது'' என்பர் அருள்நெறிப் புரவலர் முத்துசாமி முதலியார். ஆலயங்களும் மடங்களும் தொன்று தொட்டு ஆன்மீகத்தை வளர்த்து வருவன. ஆலயங்கள் அருள்

நெறி பரப்பி வருவன. அவை இரண்டு விதம். ஒன்று படமாடுங் கோயில்; மற்றது நடமாடுங் கோயில். பெரியவர் முத்துசாமி முதலியார் படமாடுங் கோயில் தொண்டிலும், நடமாடுங்கோயில் தொண்டிலும் ஆரம்ப நாளிலிருந்தே ஈடுபாடு கொண்டு இருந்தவர். மனிதனே நடமாடுங் கோயில் என்றார். அவனுக் காற்றும் தொண்டே ஆலயத் தொண்டு என்று கருதினார்.

## இறைப்பற்று

இறைவனிடம் மனம் ஒன்றுபடவேண்டும்; இறைவனை நினைந்து உள்ளம் உருக வேண்டும்; உள்ளமும் உணர்வும் ஒன்றுபட வேண்டும். ஒன்றுபட்ட மனமே இறைவனைக் காணும். ஒன்றுபட்ட மனத்தைப் பெற்றவர் பெரியவர் முத்துசாமி முதலியார். இறைவனை உள்ளம் உருக வழிபடுபவர். காலையில் எழுந்திருப்பர்; புறந்தூய்மை செய்த பின்பு, அகத் தூய்மையுடன் இறைவனை வழிபடுவர். இறைவனை வழிபட்ட பின்புதான், மற்ற அனைத்து அலுவல்களைக் கவனிப்பர். நண்பகல் உணவுக்குமுன் இறைவனை வழிபடுவர். இரவில் துயில் கொள்ளச் செல்லுமுன் இறைவனை வழிபடுவர். மேலும், 'இறைவனை வணங்குவதால், எல்லாத் துன்பங்களும் அகலும்; மனம் அமைதி பெறும்; மனத்தில் நம்பிக்கை வளரும்' என்ற இறை நம்பிக்கை பெரியவர் முத்துசாமி முதலியாரிடம் மிகுதியாக இருக்கக் காணலாம். இவர்தம் இறைப் பற்றினை — இறையருளைப் பேராசிரியர் எடுத்துக் காட்டுவர்.

> "முத்துசாமி முதலியார் அவர்களுக்கு ஆன்மீகப் பற்று நிறைய உண்டு. அவர் தத்துவ

நூல்கள் அதிகமாகப் பயின்றில்லாவிட்டாலும் கூட, 'எல்லோரும் ஒழுக்க சீலராக விளங்க வேண்டும்; எல்லோருக்கும் பிறர்க்கு உதவுகின்ற மனப்பான்மை வேண்டும்; எல்லாரும் இறைவனது குழந்தைகள். அவர்களுக்குள் சாதி, பேதம், ஏழை, பணக்காரன் என்ற வேறுபாடு கிடையாது என்பர். எல்லாவற்றிலும் இறைவனைக் கண்டார். அதுதான் ஆன்மீகத்தின் சாரம். அதை அவர் உணர்ந் திருந்தார். எந்தப் பணியைச் செய்வது என்றாலும், இறை வழிபாடு செய்வர்; இறையருளை வேண்டுவர்: பிறகுதான் பணியை ஆரம்பிப்பார். யான் பலமுறை அவருடன் சென்னைக்குச் சென்றிருக்கிறேன். வழக்குச் சம்பந்தமாகச் சென்றிருக்கிறேன். அப்போதெல்லாம், அவர் காலையில் எழுந் திருப்பர்; குளிர்ந்த நீரில் குளிப்பர். முதல் வேலையாக விநாயகர் கோயிலுக்கும் குமரக் கோட்டத்திற்கும் சென்று இறை வழிபாடு செய்வர். பின்புதான் மற்ற வேலையைத் தொடங்குவர். அந்த அளவிற்கு அதிக இறைப் பற்று உடையவர் முத்துசாமி முதலியார்''.

## மலர் வழிபாடு

உலகப் பொருள் மீது பற்றும் பாசமும் கொண்டது மனம். 'பற்றற்ற மனமே இறைவன் திருவடியை அடையும்; வீடுபேறும் பெறும்' என்ற சித்தாந்த நெறியை நன்குணர்ந்து, தம் வாழ்வில் கடைப்பிடித்து வருபவர் பெரியவர் முத்துசாமி முதலியார். மேலும்,

இறைவனுக்குச் செய்யும் வழிபாடுகளில் சிறந்தது மலர் வழிபாடு என்பர்; மண்ணாசை, பொன்னாசை பெண்ணாசை ஆகியவற்றின் மீது செல்லும் மனத்தைக் கட்டுப்படுத்த வேண்டும்; மனத்தைப் பக்குவப்படுத்த வேண்டும்; இறைவன் மீது நிலைப்படுத்த வேண்டும்; இதற்கு மலர் வழிபாடு சிறந்தது என்பர் பெரியவர் முத்துசாமி முதலியார்.

'மனம் பாழ்ப் படுக்கும் மலர்பூசனை செய்து
வாழ்வார்'

என்றார் சம்பந்தர்.

'புண்ணியம் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு' என்றது திருமந்திரம். இதனைப் பெரியவர் முத்துசாமி முதலியார் என்றும் தம் மனத்தில் இருத்தியவர்; இவர் தினந்தோறும் இறைவனின் திருமேனியைத் திருமஞ்சன மாட்டி, மலரிட்டு, அருச்சனையுடன் வழியாடு செய்வர்; இன்றும் செய்து வருபவர்.

## வடநாட்டில் ஆன்மீகப் பயணம்

ஆன்மீகத்தில் பழுத்த பழம் பெரியவர் முத்துசாமி முதலியார்; இவர், வட நாட்டில் உள்ள அரித்துவாரம், ரிசிகேசம், கேதாரிநாத், பத்திரிநாத் ஆகிய ஆன்மீகத் திருத்தலங்களுக்குச் சென்றார். இறைவனைக் கண்டு தரிசித்தார். கங்கையும் யமுனையும் தோன்றும் கங்கோத்திரி, யமுனோத்திரி ஆகிய திருத்தலங்களுக்குச் சென்று வழிபட்டார். ரிசிகேசம் சென்ற போது, சிவானந்த ஆசிரமத்தில் தங்கினார். அங்குச் சுவாமி யுடன் கலந்துரையாடல் செய்தார்; சுவாமியின் ஆசி யையும் அருளையும் ஒருங்கே பெற்றார்.

இவர்தம் எண்பதாம் ஆண்டு நிறைவின் பொருட்டு, இரண்டாம் முறையாகத் தம் குடும்பத்தாருடன் ரிஷிகேசம், கயா போன்ற வடநாட்டு ஆன்மீகத் திருத் தலங்களுக்கு 1993–ஆம் ஆண்டு செப்டம்பர் திங்களில் சென்று திரும்பினார்.

**காமாட்சியம்மனுக்குத் திருக்கோயில் கண்ட பேரருளாளர்**

திருக்கச்சிப்பதியாம் காஞ்சி மாநகரில், எழுந்தருளி யிருக்கும் அம்மை அருள்தரும் காமாட்சியம்மன். தமிழிலக்கியம் காமாட்சியம்மனைப் பெருமையாகப் பாடுகின்றன.

"தனந்தரும் கல்வி தரும்
ஒருநாளுந் தளர்வறியா
மனந்தரும் தெய்வ வடிவுந்தரும்
நெஞ்சில் வஞ்சமில்லா
இனத்தரும் நல்லன எல்லாந்தரும்
அன்பர் என்பவர்க்கே
கனந்தரும் பூங்குழலாள்
அபிராமி கடைக்கண்களே"

என்று அபிராமி பட்டர் அம்மனின் அருமை – பெருமையை எடுத்துக் கூறுவர். அருள்மிக்க காஞ்சி காமாட்சியம்மனுக்கு ஆலயம் கட்ட விரும்பினார். பெரும் பொருட் செலவில், கவுந்தப்பாடி நகரில் திருக் கோயில் கட்டினார். திருமுருகக் கிருபானந்த வாரியார், தவத்திரு குன்றக்குடி அடிகளார் போன்ற சமய ஆன்றோர்களை அழைத்துத் திருக்குடமுழுக்குச் செய்தார் முத்துசாமி முதலியார். அருள்மிகு காமாட்சி யம்மனுக்கு மூன்றுகால வழிபாடுகள் முறையாகச் செய்திட தேவையான நிதியைச் சேர்த்தார். இன்றும்,

கோயில் நிர்வாகத்தினைத் திறம்பட நடத்தி வருகின்றார்.

## அருள்நெறித் திருப்பணி மன்றம்

தமிழுக்கும், சமயத்திற்கும் சமுதாயத்திற்கும் ஒப்பிலாப் பணியாற்றி வருபவர் தவத்திரு குன்றக்குடி அடிகளார். இவரின் சீரிய தலைமையில் ஈரோட்டில் அருள்நெறித் திருப்பணி மன்றம் செயல் பட்டு வருகின்றது. மறைந்த எஸ். மீனாட்சி சுந்தர முதலியார் இம்மன்றம் ஈரோட்டில் தொடங்கக் காரணமாக இருந்தார்.

மறைந்த வி. எம். கைலாசக் கவுண்டர், என். எம். ஆர். இராமசாமி, மு. அழகப்பன் ஆகியோர் துணைத் தலைவர்களாக-மறைந்த சி. கே. கந்தசாமி முதலியார் மதிய உணவுக்குழுத் தலைவராக – கயிலைமணி அ. முனுசாமி, எம். கணபதி முதலியார், எம். சண்முகசுந்தரம், வி. பழனியப்ப செட்டியார், பெரியவர் ஆர். ஏ. என். முத்துசாமி ஆகியோர் தாளாளர்களாக-தவத்திரு சாந்தலிங்க அடிகளார், தவத்திரு சுந்தர சாமிகள், கே. சி. கந்தசாமி முதலியார், புஷ்பா கருப்பண்ண முதலியார், எஸ். ஆறுமுகம் செட்டியார், பி.கே. நஞ்சப்ப முதலியார், பி. அங்கமுத்து முதலியார், சி.கே. இராமநாதன், கே. ஏ. முத்துசாமி, ஏ.பி. வெங்கடாசலம், எஸ். வையாபுரி முதலியார், ஏ. பெருமாள் முதலியார், பி. பொன்னுசாமி, சி. எம். பாலுசாமி, கே. எம். தண்டபாணி, கே. என். முருகேசன் ஆகியோர் நிர்வாகக் குழு உறுப்பினர்களாக அருள் நெறித் திருப்பணி மன்றப் பொறுப்புகளில் தங்களை இணைத்துக் கொண்டனர். பெரியவர் முத்துசாமி

முதலியார் கயிலைமணி அ. முனுசாமி முதலியார் ஆகிய இருவரும் முறையே செயலர், பொருளாளர் தாளாளர் பொறுப்புக்களில் ஏறக்குறைய 25 ஆண்டு களாகத் தொடர்ந்து பணியாற்றி வருகின்றனர். இவர் களின் அயரா உழைப்பின் மூலமே அருள்நெறித் திருப்பணி மன்றம் வளர்ந்துள்ளது; இதன் கல்வித் தொண்டும் வளர்ச்சிப் பெற்றிருக்கிறது.

நாட்டுப் பற்று, தெய்வப்பற்று, சமய அறிவு, பொதுப்பணியில் ஆர்வம், நல்ல மனப்பான்மை, நல்ல பழக்க வழக்கங்கள் ஆகிய நற்பண்புகள் உடைய கல்வியினை மாணவர்களுக்கு அளிப்பது இந்த மன்றத்தின் குறிக்கோளாகும். இக்குறிக்கோளினை அடைவதற்குப் பெரிதும் துணை இருப்பவர் பெரியவர் முத்துசாமி முதலியார். இவரின் பங்கு அளவிடற்கரிதாகும்.

**அருள்நெறித் திருக்கூட்டம்**

ஈரோடு அருள்நெறித் திருக்கூட்டத்தில் முத்துசாமி முதலியாரும் திருக்கூட்டத்து அன்பர். இத்திருக்கூட்டம் நடத்தும் ஆலயத் திருப்பணியின் அறுபத்து மூவர் விழா, சமய நோன்பு நோற்றல், சமயச் சொற்பெருக்கு, தமிழ் வழிபாட்டுமுறை, வார வழிபாடு, தெய்வச் சிந்தனை, தமிழ்த் திருமண முறை, சித்தாந்த வகுப்பு, திருக்கோயில்களைத் தரிசிக்கும் திருப்பயணங்கள் போன்ற எண்ணருந் திட்டங்களில் தம்மை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டு, செயல் படும் செயல் ,வீரர் பெரியவர் முத்துசாமி முதலியார்.

**அருள்நெறியை அகத்தில் பெற்றவர்**

அன்பும் அருளும் உடையவனே மனிதன்; அவனே தெய்வமாகப் போற்றப் படுவான். உலக உயிர்க்கு இரக்கங்காட்டும் பண்புடையவரே தெய்வமாக எண்ணப்படுவர் என்று வடலூர் வள்ளலார் எடுத்துரைப்பர்:

"எத்துணையும் பேதமுறாது எவ்வுயிரும்
தம் உயிர்போல் எண்ணி உள்ளே
ஒத்துரிமை உடையவராய் உவக்கின்றார்
யாவர் அவர் உளந்தான் சுத்த
சித்துருவாய் எம்பெருமான் நடம்புரியும்
இடம் என நான் தேர்ந்தேன் அந்த
வித்தகர்தம் அடிக்கு ஏவல்புரிந்திட என்
சிந்தைமிக விழைந்த தாலோ"

என்பதற்கு இலக்கணமாய் வாழ்ந்து வருகின்ற ஈரோட்டு முத்துசாமி முதலியார் அருளுள்ளம் கொண்டவர்; அருள்நெறியில் அமைந்த உள்ளம் உடையவர்; அருள்நெறி பெற்ற இவரின் உள்ளத்தில் இறைவன் இருக்கிறான்.

**நினைந்து நினைந்து போற்றத்தக்கது**

"ஈரோடு நகரம் நமக்குப் பிறந்தகம் போன்றது. அருள்நெறித் திருக்கூட்டத் திருப்பணிகளில் ஈரோடு நகரமே முன்னணியில் நின்றுகொண்டு இருக்கிறது. 1955-இல் அருள்நெறித் திருப்பணி மன்றம் பதிவு செய்யப் பெற்றவுடனேயே ஈரோடு நகரத்தில் நமது அன்பர்கள், நண்பர்கள் திருப்பணியைத் தொடங்கினர். அது பயிற்சிப் பள்ளியாகத் தொடங்கி,

இன்று முதுநிலை, உயர்நிலை –
மேல்நிலைப் பள்ளியாக வளர்ந்து
வந்திருக்கிறது. வளர்ந்து நம் பள்ளிக்கு
மட்டுமின்றி அருள்நெறித் திருப்பணி மன்றமே
கொண்டாடுகிறது. வாழ்த்துக்கள்''.

என்று குன்றக்குடி அடிகளார் பள்ளியின் வளர்ச்சியைப் பற்றிக் குறிப்பிடுகின்றார். அதன் பொறுப்பாளர்களை வாழ்த்துகின்றார். பொறுப்பாளர்களில் ஒருவரான – பள்ளியின் செயலாளரும், பொருளாளருமான – ஈரோடு பெரியவர் முத்துசாமி முதலியார்க்கும் இம் மன்றத்தின் வளர்ச்சியில் பெரும் பங்குண்டு. அடிகளின் வாழ்த்துக்கு உரியவரானார்.

ஈரோடு அருள்நெறித் திருப்பணி மன்றம் தொடங்கிய நாளிலிருந்து தொடர்ந்து சமூக சேவை, சமய சேவை, கல்வித் தொண்டு முதலியன ஆற்றி வரும் அமைப்பு ஆகும். இம்மன்றம் 25 ஆண்டுகள் நிறைவு பெற்றதைக் குறிக்கும் வகையில் 18—02—1982-ஆம் நாளில் ஈரோட்டில் வெள்ளி விழா கொண்டாடப்பட்டது. இவ்வினிய விழாவில் 15 ஆண்டுகள் மன்றத்தின் செயலாளராக–பொருளாளராகச் சிறப்பாக, நேர்மையாகப் பணியாற்றிய பெரியவர் முத்துசாமி முதலியாரைப் பாராட்டினார்; சிறப்புச் செய்தார் தவத்திரு குன்றக்குடி அடிகளார்.

''இன்று ஈரோடு அருள்நெறித் திருப்பணி
மன்றத்தின் செயலாளராக – உயிர்ப்புள்ள
இயக்குநராக நாள்தோறும் மன்றத்தைப்
பேணிவரும் செயலாளர், இனிய அன்பிற்குரிய
ஆர். ஏ. என். முத்துசாமி அவர்களின் பணி
நினைந்து நினைந்து பாராட்டுதலுக்குரியது''.

## சிலை அமைப்புத் திருப்பணிக் குழுவில் முத்துசாமி முதலியார்

குன்றக்குடியில் அருள்மிகு சண்முகநாதப் பெருமான் திருவருள் துணை கொண்ட தவத்திரு குன்றக்குடி அடிகளாரின் சிலை அமைப்புத் திருப்பணித் தொடக்கம் செய்ய எண்ணினர் சான்றோர்கள் சிலை திருப்பணிக் குழுவினர். தொடக்க விழாவிற்கு ஈரோட்டு முத்துசாமி முதலியாரை அழைத்தனர். 20—03—93-ஆம் நாளில் நடைபெற்ற தவத்திரு குன்றக்குடி அடிகளாரின் சிலை அமைப்புத் திருப்பணியில் தொடக்க நிகழ்ச்சியில் கலந்து கொண்டு, போற்றியுரை வழங்கினார் முத்துசாமி முதலியார்.

## 'அருள்நெறிப் புரவலர்' எனும் சிறப்புப் பட்டம்

> "அவருடைய (ஆர். ஏ. என். முத்துசாமி முதலியார்) அரிய பணியில் அருள் நெறித் திருப்பணி மன்றக் கல்வி வளாகம் கால் கொண்டது; வளர்ந்து வருகிறது".

என்று குன்றக்குடி அடிகளாரிடம் சிறப்புப் பாராட்டுக் குரியவர் பெரியவர் முத்துசாமி முதலியார்.

அருள்நெறித் திருப்பணி மன்றத்தில் ஆற்றிய அருந்தொண்டினை மனந்திறந்து பாராட்டியதோடு இல்லாமல் பெரியவர் முத்துசாமி முதலியாரையும் இவர்தம் துணைவியாரையும் குன்றக்குடிக்கு அழைத்தார்; பெருவிழா எடுத்தார்; பேராற்றலுடைய பேராளர் என்று முத்துசாமி முதலியாரைப் போற்றினார்; தங்கப்பதக்கம் வழங்கிப் பாராட்டினார்;

இருவர்க்கும் பொன்னாடை போர்த்தினார்; எண்பதாண்டுகள் நிறைவுற்ற முதிய இளைஞருக்கு, 'அருள்நெறிப் புரவலர்' எனும் சிறப்புப் பட்டத்தை 03—09—1993-ஆம் பிறந்த நாளில் அளித்தார்; பெருமைப் படுத்தினார் தவத்திரு குன்றக்குடி அடிகளார்.

# பொது நலமும் இன நலமும்

ஒருவரது வாழ்க்கை முழுமையாக இருக்க வேண்டுமெனில் நீளம், அகலம், உயரம் என்ற மூன்று அளவுகள் கொண்ட அமைப்புடன் அஃது இருக்க வேண்டும்.

ஒருவர் தம்முடைய நலனுக்குப் பாடுபட்டு உழைப்பது வாழ்க்கையின் நீளமாகும். பிறருடைய நலன் கருதி உழைப்பது வாழ்க்கையின் அகலமாகும். இறைவனை எய்த முயலுவது வாழ்க்கையின் உயர மாகும். முக்கோணம் போன்றது வாழ்க்கை. ஒரு கோணத்தில் தனி மனிதன் இருக்கிறான். எதிர் கோணத்தில் மற்ற மனிதர்கள் இருக்கின்றனர். உச்சியிலுள்ள கோணத்தில் இறைவன் உறைகிறான். மூன்று கோணங்களும் சரியாக இல்லையேல் முக்கோணம் இல்லை. தந்நலம், பிறர் நலம், இறைப் பணி என்ற மூன்று கூறுகளும் இல்லை எனில் முழுமையான வாழ்க்கை இல்லை. தன்னலம் காத்து பிறர் நலம் பேணி இறைப்பணி செய்தலே ஏற்றமான வாழ்வாகும்.

பெரியவர் முத்துசாமி முதலியார், தந்நலம் காத்தவர்; பிறர் நலம் பேணி வருபவர். தந்நலமும்

பிறர் நலமும் ஒன்றாக எண்ணுபவர். பிறருக்கு உதவி செய்வதும் அவர்களது துன்பத்தைத் துடைப்பதும் இவர்தம் வாழ்வின் குறிக்கோளாகும்.

**கவுந்தப்பாடி சுதேசி ஜவுளி வர்த்தகர் சங்கம்**

பெரியார் மாவட்டத்தில் கவுந்தப்பாடி சிறப்புடைய நகர். இந்நகரிலும், இதன் சுற்றுப்புறத்திலும் நெசவாளர்கள் அதிகமாக வாழ்கின்றனர். இங்கு ஏழ்மையிலுள்ள நெசவாளர்களே அதிகம். துயர் மிகுந்த நெசவாளர்களுக்குதவ பல பெரியார்கள் முன்வந்து சேவை செய்தனர். இவர்களில் குறிப்பிடத் தகுந்தவர் அருள்நெறிப்புரவலர் முத்துசாமி முதலியார்.

ஏழை நெசவாளர்களின் வாழ்வில் முதன்முதலில் ஒற்றுமை எனும் ஒளிவிளக்கை ஏற்றினார். நெசவாளர்களுக்கும், நூல் – துணி வணிகர்களுக்கும் உதவும் பொருட்டு சங்கம் ஏற்படுத்த முனைந்தார் முத்துசாமி முதலியார். 1953–ஆம் ஆண்டில் செங்குந்தர் இன மக்களின் ஆதரவுடன் 'கவுந்தப்பாடி சுதேசி ஜவுளி வர்த்தகர் சங்கம்' எனும் சங்க அமைப்பினை ஏற்படுத்தினார். சங்கத்தின் முதல் தலைவராகப் பெரியவர் முத்துசாமி முதலியார் நியமனம் பெற்றார். முதல் தலைவராகப் பொறுப்பேற்ற பெரியவர் இன்று வரை இந்தச் சங்கத்தின் தலைமைப் பொறுப்பில் இருந்து வருகிறார். வர்த்தகர் சங்கமே இவர்தம் கல்வித் தொண்டின் தொடக்கமாகும். ஈரோட்டில் கல்லூரி ஏற்படவேண்டும் என்று வர்த்தகர் சங்கத்தில் நிறைவேற்றப்பட்ட தீர்மானம் பெரியவர் முத்துசாமி முதலியாரின் கல்வித் தொண்டிற்கு அடித்தளமாக விளங்கியது. கவுந்தப்பாடியில் தோன்றிய பி..பி

சதாசிவம், பி. குப்புசாமி, கே. எம். தண்டபாணி போன்றோர் வர்த்தகச் சங்கத் தலைவர்க்கு மிகவும் உறுதுணையாக விளங்கி வருகின்றார்.

### வர்த்தக சங்கத்தில் முத்துசாமி முதலியாரின் பணிகள்

அருள்நெறிப் புரவலர் முத்துசாமி முதலியார் 'கவுந்தப்பாடி சுதேசி ஜவுளி வர்த்தகர் சங்கத்தின்' தலைமைப் பொறுப்பை ஏற்ற நாளிலிருந்து சீரும் சிறப்பு மாகச் சங்கத்தை வழிநடத்தி வருகிறார். சங்கத்தின் முன்னேற்றம் 'நெசவாளர்களின் முன்னேற்றம்' எனக் கருதி, உழைத்தார்; இன்றும் உழைத்து வருகின்றார். தேவையான ஆக்கப்பணிகள் தொடர்ந்து செய்து வருகின்றார்.

### வர்த்தகர் சங்கத்திற்குத் தனிக் கட்டடம்

நெசவாளர்களுக்கும், துணி வர்த்தகர்களுக்கும் நிரந்தரமாகத் துயர் துடைக்க, சங்கத்திற்கென்று தனியாக இடமும், கட்டடமும் இருத்தல் வேண்டும் என்று விரும்பினார் பெரியவர் முத்துசாமி முதலியார். இதன் விளைவாக, வர்த்தகர் சங்கத்திற்கென்று, தனி கட்டடம் கட்டுவதற்கு வேண்டிய நிதியினைச் சேர்த்தார்; கட்டடம் கட்டினார். வர்த்தகர் சங்கக் கட்டடத்தை அந்நாளில் தமிழக முதல்வராக இருந்த மாண்புமிகு எம். பக்தவச்சலம் அவர்களைக் கொண்டு திறந்து வைத்தார்.

### போக்குவரத்து வசதிகள்

கவுந்தப்பாடி ஈரோட்டிலிருந்து இருபத்தைந்து கிலோ மீட்டர் தொலைவில் இருக்கும் நகரமாகும். ஈரோடு நகர்க்கு வியாபாரத் தொடர்பாக வந்து

செல்வது மிகவும் கடினமான காரியமாக இருந்தது. குறிப்பிட்ட பேருந்துகளே அந்நாளில் கவுந்தப்பாடிக்கும் ஈரோட்டிற்கும் இடையே சென்று வந்தன. அவையும் தனியார் பேருந்துகளேயாகும்.

வர்த்தக சங்க உறுப்பினர்கள் சங்கத் தலைவர் பெரியவர் முத்துசாமி முதலியாரிடம் முறையிட்டனர். வர்த்தகச் சங்கத்தின் சார்பில் தலைமைப் பொறுப்பு ஏற்றிருந்த இவர், தக்கநடவடிக்கைகள் எடுத்தார். ஈரோடு சி.எஸ்.டி. பேருந்து உரிமையாளரிடம் கலந்து பேசினார். பேருந்து கவுந்தப்பாடி நகரில் நிற்காமல் செல்வதைப் பற்றியும் எடுத்துரைத்தார். மேலும், வாரத்தில் செவ்வாய்க்கிழமை, வியாழக்கிழமை ஆகிய இரு நாள்களிலும் சுதேசி ஜவுளி வர்த்தகர் சங்க உறுப்பினர்களை மட்டும் பேருந்தில் ஏற்றிச் செல்ல வேண்டும் என்ற கோரிக்கையையும் பேருந்து உரிமையாளரிடம் முன் வைத்தார். இதற்குரிய முறையான ஆணையும் பெற்றார்; பெரியவரின் பெரிய முயற்சியைப் பெரிதும் பாராட்டி மகிழ்ந்தனர் கவுந்தப்பாடி சுதேசி வர்த்தகர் ஜவுளி சங்க உறுப்பினர்கள்.

## மருத்துவச் சேவை

கவுந்தப்பாடி நகர் மக்கள் தொகை நிறைந்தது. ஏழை-எளியவர்களுக்கு மருத்துவச் சேவை செய்வதற்கு ஏற்றதொரு மருத்துவமனை இல்லை. அரசும் மருத்துவ மனையை அமைக்கவில்லை. தனியார் மருத்துவ மனையும் சிறப்பாக இல்லை. கவுந்தப்பாடி மக்கள் பயன்பெறும் வகையில், வர்த்தகர் சங்கத் தலைவர் பெரியவர் முத்துசாமி முதலியார் தேவையான திட்டம் உருவாக்கினார்.

மருத்துவமனைக்குரிய இடம் கொடுக்கப்பட்டால் அரசு மருத்துவமனையைக் கட்டித் தருவதற்கு வாய்ப்புள்ளது என்பதை அறிந்தார் முத்துசாமி முதலியார். கவுந்தப்பாடி நகரில் பணிபுரிந்த மணியக்காரர் போன்றவர்களின் ஆதரவுடன் 'மங்கம்மா சத்திரத்தைக்' காலி செய்தனர். சத்திரத்திலுள்ள பொருட்கள் எல்லாம் விற்கப்பட்டன. விற்ற பொருட்களின் தொகையை மருத்துவமனை கட்டுவதற்குப் பயன்படுத்த வர்த்தகர் சங்கம் முன் வந்தது.

பத்து வர்த்தகர் சங்க உறுப்பினர்கள் ரூ. 700/- வீதம் கொடுத்தனர். இவர்கள் கொடுத்த தொகை போதாது என்று உணர்ந்தனர். பின்பு, ரூபாய் ஐயாயிரம் என்று சேகரித்த இருபத்தைந்தாயிரம் கொண்டு மருத்துவமனை புதியதாக உருவாக்கப் பெற்றது. பெரியவர் முத்துசாமி முதலியாரின் பெரு முயற்சியில் கவுந்தப்பாடி நகர் மருத்துவமனை வசதி பெற்றது. மக்களின் நோய்ப்பிணி அகல பாடுபட்ட வர்த்தகர் சங்கத்தையும், இச்சங்கத்தின் தலைவரையும் மனமாரப் பாராட்டினர் பொதுமக்கள்.

### பாதுகாக்கப் பெற்ற குடிநீர்

வறட்சியுற்ற காலத்தில் கவுந்தப்பாடி மக்கள் குடி தண்ணீர்க்குத் தவிக்கும் நிலையைக் கண்டார் பெரியவர் முத்துசாமி முதலியார். பொது மக்களின் குடி தண்ணீர் பிரச்சனையைப் போக்குவதற்கு வர்த்தகர் சங்கத்தின் செயலாளர் கே. எம். தண்டபாணி அவர்களுடன் ஆலோசனை மேற்கொண்டார். ஆழ்கிணறு அமைக்க வேண்டும்என்றும், மேல்நிலை தொட்டி கட்டவேண்டும் என்றும் முடிவு செய்தார். பெரியவர் முத்துசாமி

முதலியாரின் அரும் முயற்சியால் ஆழ்துளை கிணறு தோண்டப்பட்டது. மேல்நிலைத் தொட்டியும் கட்டப் பெற்றது. அந்நாளில் தமிழகச் சமூக நலத்துறை அமைச்சராகப் பதவியில் இருந்த திருமதி சுப்புலட்சுமி ஜெகதீசன் அவர்கள் மேல்நிலைத் தொட்டியைத் திறந்து வைத்தார். பொதுமக்களுக்குப் பாதுகாக்கப் பட்ட குடிநீரை வர்த்தகச் சங்கத்தினர் வழங்கினர். பெரியவர் முத்துசாமி முதலியாரும் துணைத் தலைவர் பி. குப்புசாமி முதலியாரும் குடிநீர் மேல்நிலைத் தொட்டியைக் கட்டுவதற்குப் பெருந்தொகை வாரி வழங்கினர்.

### கைத்தறி நிதிக்குழு

நெசவாளர்கள் நூல்விலை ஏற்றத்தால் பாதிக்கப் பட்டனர்; நெசவுத் தொழிலுக்குத் தேவையான நூல் கிடைக்கப் பெறவில்லை; நெசவுத் தொழிலாளர் களுக்குரிய கூலி நியாயமாகக் கிடைக்கவில்லை. எனவே, நெசவாளர்களின் வாழ்வில் வளஞ்சேர்க்கத் தமிழக அரசு 'கைத்தறி நிதியுதவிக் குழு' (Handloom Finance Corporation) ஒன்று அமைத்தது. இந்தக் குழுவில் மூன்றாண்டுகளுக்குத் தொடர்ந்து நிதிக்குழு உறுப் பினராக இருந்தார்; நெசவாளர்களின் துயரினைத் துடைத்தார் அருள்நெறிப்புரவலர் முத்துசாமி முதலியார்.

### நெசவுத்துறையில் மாற்றம் தேவை

நெசவாளர்களின் துயர் துடைக்க வேண்டும் என்பதில் பெரியவர் முத்துசாமி முதலியார் தம் கவனத்தைச் செலுத்தியுள்ளார். நெசவாளர்களுக்கும்- துணிவணிகர்களுக்கும் துணையாக விளங்கினார்,

நெசவாளர்களின் வாழ்வில் மாற்றம் வேண்டுமெனில் கைத்தறிக்குப் பதிலாக, விசைத்தறித் தொழில் முறையை ஏற்றுக் கொள்ள வேண்டும். அப்பொழுது தான், நெசவாளர்களின் வறுமை நிலையை மாற்ற முடியும் என்று உறுதியாக நம்பினார். அதன்படியே செய்ய முனைந்தார். நெசவாளர்களுக்குப் பெரியவர் முத்துசாமி முதலியார் எவ்வாறு ஆதரவாக இருந்தார் என்பதை ராணா க. வெ. இலட்சுமணன் பின்வருமாறு நினைவு கூறுகின்றார்.

> ''நெசவாளியாக இருந்த ஆர். ஏ. என். முத்துசாமி முதலியார் நெசவுத் தொழிலில் இருந்த இடர்ப்பாடுகளை நன்கு அறிந்தவர்; ஒவ்வொரு நாளும் நெசவாளிகள் படும் துயரினை நேரில் கண்டார். அவர்களின் வாழ்வில் மாற்றம் வேண்டும் என்று விரும்பினார். தமிழக அரசு ஏற்படுத்திய கைத்தறி நிதிக்குழுவில் இயக்குநராக இருந்த இவர், நெசவாளர்களுக்காக அரும்பணியாற்றினார்.
>
> இந்தியப் பேரரசு நெசவாளர்களின் வாழ்வில் மலர்ச்சியைக் கொண்டுவர 20,000 விசைத்தறி உரிமம் வழங்க முன் வந்தது. தமிழகத்திற்கு 10,000 விசைத்தறிகள் உரிமமும், மகராட்டிரத்திற்கு 10,000 விசைத்தறிகள் உரிமமும் வழங்க முன் வந்தது.
>
> நெசவாளர்களின் நேசர் எம். பி. நாச்சிமுத்து, விசைத்தறித் தொழில் வளர்ச்சிப் பெற்றால் கைத்தறித் தொழில் அழிந்து விடும் என்று கருதினார். ஆர். ஏ. என். முத்துசாமி போன்றோர்கள் கைத்தறித் தொழிலை

விசைத்தறித் தொழிலாக மாற்ற வேண்டும் என்று வலியுறுத்தினர்; பயனில்லை. இதனால், தமிழகத்திற்கு ஒதுக்கிய விசைத்தறி உரிமங்கள் பயன்படாமலே போயின. ஆர். ஏ. என். முத்துசாமி முதலியாரின் கனவு நனவாக உருப் பெற்றிருந்தால், இன்று, நெசவாளர்களின் வாழ்வில் வளஞ் சேர்ந்து இருக்கும்''.

**இனநலம்**

''இந்திரன் அயன்மால்தேவர் யாவர்க்கும்
முதன்மையாக
வந்தபான் மையினால் குலமழுப் படை
அந்தணர்க்கு
முந்திய நாமம் தானும் முதலியார் ஆகையால்
செங்
குந்தர் சந்ததிக்கு மப்பேர் முதலியா ரென்ப
தாகும்''

என்று ஒட்டக்கூத்தரும்,

''கையில் அவனருள் உண்டு கண்டாய்!
கந்தன் படைச்செங் குந்தர்களாய்த்
துயர் ஒழித்தெழுவோ மினிமேல்
பயமிலை குலம் உய்யும்! உய்யும்! உய்யும்!''

என்று பாவேந்தர் பாரதிதாசனும் செங்குந்தர்களின் மாண்பினை - உயர்வினை - பெருமையை எடுத்துக் கூறுவார்கள்.

**பெரியார் மாவட்டச் செங்குந்த மகாசன சங்கத் தோற்றம்**

முன்னோர்களின் பெருமைகளை என்றும் காத்திட உருவானதே தென்னிந்தியச் செங்குந்தர் மகாசன சங்கம். வள்ளல் சபாபதிமுதலியார் எம்.பி. நாச்சிமுத்து செங்குந்தர் போன்றவர்களால் செங்குந்தப் பயிர்கள் செழித்து, வளர்க்கப்பட்டன.

செந்தமிழ் நாட்டின் சீரினமான செங்குந்தப் பேரினத்தின் முன்னேற்றம் கருதித் தென்னிந்தியச் செங்குந்தர் மகாசன சங்கத்தின் நல்லாசியோடு தாமரைத்திரு எம். பி. நாச்சிமுத்து செங்குந்தர் முன்னிலையில் 15--4—84–ஆம் நாளில் ஈரோட்டில், 'பெரியார் மாவட்டச் செங்குந்தர் மகாசன சங்கம்' எனும் அமைப்பைத் தோற்றுவித்தார் பெரியவர் முத்துசாமி முதலியார்.

**துணைச் சங்க அமைப்பு**

செங்குந்தர் குலமக்களின் மேன்மையை-வளர்ச்சியைக் கருதி, செங்குந்தர் சங்கத்தின் நோக்கம்-குறிக்கோள் வெற்றிபெற, பெரியார் மாவட்டத்தில் உள்ள ஒவ்வொரு ஊருக்கும் பலமுறை மாவட்ட சங்கத் தலைவர் பெரியவர் முத்துசாமி முதலியார், பி.கே. நஞ்சப்ப முதலியார், செயலாளர்கள் எம். எஸ். பழனியப்ப முதலியார், டாக்டர் நா. ஆறுமுகம், டாக்டர் மா. அண்ணாதுரை ஆகியோர் நேரில் சென்று செங்குந்தர் குல மக்களிடையே உணர்வினை, ஒற்றுமையை ஏற்படுத்தினர். ஏழு வட்டச் சங்கங்களையும், பத்து ஒன்றியச் சங்கங்களையும், இரண்டு நகர்ச் சங்கங்களையும், நூற்று முப்பத்தைந்து

கிளைச் சங்கங்களையும் தொடங்கி வைத்தனர். இம்முயற்சி, பெரியார் மாவட்டச் செங்குந்தர் மகாசன சங்க வளர்ச்சியின் அடிநாதமாகும்.

## மாநிலத் தலைவர்க்குப் பாராட்டு

தென்னிந்திய செங்குந்தர் மகாசன சங்கத்தின் தலைவர் ஜெ. சுத்தானந்தன் ஆவார். இவர்க்கு 1985–ஆம் ஆண்டில் இந்திய அரசு 'உத்யோக ரத்னா' எனும் உயர்பட்டம் வழங்கியது. இவர்க்குப் பாராட்டும், சிறப்பும் செய்ய எண்ணினார் பெரியவர் முத்துசாமி முதலியார். ஈரோடு மாநகரில் பெருவிழா எடுத்தார்; அவருக்குப் பொன்னாடை போர்த்தினார்; நினைவுப் பரிசுகளை வழங்கினார். இவர் பணி மேன்மேலும் சமுதாய மக்களுக்குக் கிடைக்க வாழ்த்தினார் பெரியவர் முத்துசாமி முதலியார்.

## பஞ்சாயத்து, ஊராட்சி தேர்தல்களில் வெற்றி பெற்றவர்களுக்குப் பாராட்டு விழா

தமிழகத்தில் 2—3—1986–ம் நாளில் பஞ்சாயத்து, ஊராட்சித் தேர்தல்கள் நடைபெற்றன. தேர்தல்களில் செங்குந்தர் இனமக்களில் பலர் வெற்றி பெற்றனர். வெற்றி பெற்ற நூற்று அறுபத்தொன்பது ஆடவர்களுக்கும், இருபத்தேழு பெண்களுக்கும் விழா எடுத்து, பொன்னாடைகளும், நினைவுப் பரிசுகளும் வழங்கி, விருந்து அளித்து, அவர்களின் தொண்டுகள் செங்குந்தர் இன மக்களுக்குப் பயன்பட வேண்டும் என்று வாழ்த்தினார் பெரியவர் முத்துசாமி முதலியார்.

## ஆராய்ச்சித் துறையில் டாக்டர் பட்டம் பெற்ற இனமக்களுக்குப் பாராட்டு

பெரியார் மாவட்டத்தில் செங்குந்தர் இனமக்களில் பலர் கல்வித் துறையில் பெருமைகளைச் சேர்த்துள்ளனர். கல்வித் துறையில்–ஆராய்ச்சித் துறையில் 1986–ஆம் ஆண்டிற்குப்பிறகு ஆராய்ச்சி செய்து, டாக்டர் பட்டம் பெற்ற டாக்டர் வி. ஆறுமுகம், டாக்டர் மே. அ. பாலமுருகன், டாக்டர் மா. அண்ணாதுரை டாக்டர் எஸ். அண்ணாமலை, டாக்டர் ஏ. குழந்தைவேலு, டாக்டர் கே. ஏ. ஆறுமுகம், டாக்டர் டி. கைலாசம், டாக்டர் சி. நடராஜன் ஆகியோர்களுக்குப் பாராட்டு விழா எடுக்க வேண்டும் என்று விரும்பினார் பெரியவர் முத்துசாமி முதலியார். அவ்வாறே 20—1–1991–ஆம் நாளில் ஈரோட்டில் பெரு விழா பெரியவர் முத்துசாமி தலைமையில் நடத்தப்பெற்றது. பொன்னாடை போர்த்தி, நினைவுப் பரிசு வழங்கி, விருந்து அளித்துக் கல்வியில் சிறந்த இனமக்களைப் பெருமைப்படுத்தினார்; ஊக்கப் படுத்தினார்.

## விருது-பதவி உயர்வு பெற்றவர்களுக்குப் பாராட்டு

மத்திய மாநில அரசினால் விருது பெற்றவர்களும், பதவி உயர்வு பெற்றவர்களும் முறையே திருமதி அ. நாகம்மாள், திருமதி சிவகாமிகோபால், ஏ. ஜெகநாதன், பன்மொழிப்புலவர் டாக்டர் எம். சதாசிவம் ஆகியோர்களுக்கு 20—1-1991–ஆம் நாளில் நடைபெற்ற 5-ஆம் 6–ஆம் சங்க ஆண்டு விழாக்களில் பாராட்டிச் சிறப்புச் செய்தார் பெரியவர் முத்துசாமி முதலியார்,

### இலவசத் திருமணம்

09—02—86-ஆம் நாளிட்ட பெரியார் மாவட்டத்தின் தீர்மானத்தின்படி, பெரியார் மாவட்டத்தில் ஏழ்மையில் வாடும் செங்குந்தர் இன மக்களுக்கு இலவசத் திருமணங்கள் செய்வது என்று முடிவு செய்யப் பெற்றது. இத்தீர்மானத்தின்படி, செங்குந்தர் குல வழக்கப்படி, இலவசத் திருமணங்கள் ஈரோட்டில் நடத்தப் பெற்றன. பரிசுகள் வழங்கப் பெற்றன. திருமண மக்களைச் சங்க உறுப்பினர்கள் பாராட்டி வாழ்த்தினர். திருமண மக்கள் செங்குந்தர் சங்கத்தில் உறுப்பினர்களாகச் சேர்க்கப் பெற்றனர்.

### ஆண்டு விழாக்கள்

தங்கம் செய்யாததைச் சங்கம் செய்யும் என்பது முதுமொழி.

"சங்கங்களால் – நல்ல
சங்கங்களால் – மக்கள்
சாதித்தல் கூடும் பெருங்காரியம்
சிங்கங்கள் போல் – இளம்
சிங்கங்கள் போல் – பலம்
சேர்ந்திடும் ஒற்றுமை சார்ந்திட லாலே"

என்று பாவேந்தர் பாரதிதாசன் சங்கத்தின் ஆற்றலை எடுத்துக் கூறுவர். இன மக்களின் ஒற்றுமைக்காக, ஊக்கம் தருவதற்காகப் பெரியார் மாவட்டச் சங்கத் தலைவர் பெரியவர் முத்துசாமி முதலியார் இன்றுவரை சீரிய முறையில் ஆண்டு விழாக்கள் ஆறு நடத்தி வந்துள்ளார். பெரியார் மாவட்டத்தில் செங்குந்தர் சங்கத்தின் ஆயுள் உறுப்பினர்களாக 2000 பேர் சேர்த்தார். சந்தா தொகையை வங்கியில் வைப்பு நிதியாக வைத்தார்.

வைப்பு நிதியிலிருந்து வரும் வருவாயைக் கொண்டு, பெரியார் மாவட்டத்தில் ஒவ்வொரு வட்டம் வாரியாக ஏழு வட்டமும், எஸ். பி. பி. ஒரு வட்டமும் ஆக எட்டு வட்டங்களுக்கு எஸ். எஸ். எல். சி. தேர்வில் வெற்றி பெறும் இருபத்து நான்கு செங்குந்தர் குல மாணவ மாணவியர்க்கு ஒவ்வொரு ஆண்டு விழாவில், முதல் பரிசாக ரூ. 200/-யும் இரண்டாம் பரிசாக ரூ. 150/-யும், மூன்றாம் பரிசாக ரூ. 100/-யும் வழங்கினார். வழங்கி வருகிறார்.

### இலவச மருத்துவ முகாம்

செங்குந்தர் இனத்தில் ஏழ்மையுடைய நெசவுத் தொழிலாளர் பலர் உள்ளனர். உடல் நலமற்றவர்கள் பலர் உள்ளனர். இவர்களின் உடல் நலத்தையும், மன நலத்தையும் பேணுவதற்காக ஈரோட்டில் பரவலாக மருத்துவத் தொழில் புரியும் அறுபத்தாறு செங்குந்தர் இன மருத்துவர்களை ஒன்று சேர்த்தார் பெரியவர் முத்துசாமி முதலியார். ஓர் அமைப்பு உருவாக்கப் பட்டது. இந்த அமைப்பு மூலம் இலவச மருத்துவ உதவிகள் செய்ய ஏற்பாடுகள் செய்தார். மருத்துவ முகாம்கள் நடத்தினார். ஏழை-எளியவர்களுக்கு மருத்துவ உதவிகள் வழங்கினார். இதனால், செங்குந்த ஏழைமக்கள் பலர் பயன் பெற்றனர். பயன்பெற்று வருகின்றனர்.

### மாநிலச் சங்க வளர்ச்சிக்கு உறுதுணை

தென்னிந்தியச் செங்குந்தர் மாநிலச் சங்கத்தில் நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தின்படி, சென்னை வள்ளல் சபாபதி கட்டட அமைப்பு பொறுப்புகளைப் பெரியார் மாவட்டத் தலைவர் பெரியவர் முத்துசாமி

முதலியாரிடம் மாநிலச் சங்கம் கொடுத்தது. பெரியார் மாவட்டத் தலைவர் இன்முகத்துடன் ஏற்றதோடு மட்டுமன்றி, செயலில் இறங்கினார். தென்னார்க்காடு, தஞ்சை, திருச்சி, மதுரை, காஞ்சிபுரம், பாண்டிச்சேரி, இராமநாதபுரம் ஆகிய ஏழு மாவட்டங்களுக்குச் சென்னை வள்ளல் சபாபதி கட்டட அமைப்புக்காக மாவட்டத் தலைவர் பெரியவர் முத்துசாமி முதலியார் பொதுச் செயலாளர் டாக்டர் நா. ஆறுமுகம், பொருளாளர் பி. கே. நஞ்சப்ப முதலியார், செயலர் எம். எஸ். பழனியப்ப முதலியார் போன்ற சங்கப் பொறுப்பாளர்கள் சுற்றுப் பயணம் மேற்கொண்டனர். மாநிலச் சங்கத்தின் வளர்ச்சிக்கு உறுதுணையாக இருந்தார். இன்றும் உறுதுணையாக இருந்து வருகிறார்.

**எழுச்சிப் பேரணி**

செங்குந்தர் குல மக்களின் ஏழ்மை நிலையை அரசுக்குணர்த்தவும், செங்குந்த இனம் அமைதியாகத் தமிழகத்தில் வாழ்ந்து வருவதைத் தமிழகம் உணரும் முறையிலும் தென்னிந்திய செங்குந்தர் மாநிலச் சங்கம் தீர்மானம் நிறைவேற்றியது. தலைநகர் சென்னையில் 12–3–1986-ஆம் நாளில் 'எழுச்சிப் பேரணி' நடத்தியது. இந்த எழுச்சிப் பேரணியில் கலந்து கொள்ள, பெரியார் மாவட்டச் செங்குந்த இன மக்களிடையே 'இது என்றன் சமுதாயப் பணி' என்ற எழுச்சியை உருவாக்கினார். தந்தைமார்களும், தாய்மார்களும் இளைஞர்களும் பேரார்வத்துடன் கலந்துகொள்ளும்படி செய்தார். இம்மாவட்டத்தின் சார்பில் 'எழுச்சிப் பேரணி' வெற்றிபெற உறுதுணை யாக விளங்கினார் பெரியவர் முத்துசாமி முதலியார்.

### ஈரோட்டில் முதல் மாவட்ட மாநாடு

பெரியார் மாவட்டச் செங்குந்த மக்களிடம் உணர்வினை ஊட்ட - ஒற்றுமையை ஏற்படுத்த - எழுச்சியினை உருவாக்க எண்ணினார் பெரியவர் முத்துசாமி முதலியார். 10—03—90-ஆம் நாளில் ஈரோடு மாநகரில் பேரணியும், மாநாடும் நடத்தினார். மாநாடு வெற்றிபெற கிளைச் சங்கங்கள் தோறும் நேரில் சென்றார்; தம் இனமக்களைச் சந்தித்தார்; சங்க வளர்ச்சிக்கு ஆக்கம் தேடும் வகையில் கலந்துரை யாடல் நிகழ்த்தினார் பெரியவர் முத்துசாமி முதலியார். இரண்டு இலட்சத்திற்கும் மேற்பட்ட மக்கள் கலந்து கொண்ட மாவட்ட மாநாட்டிற்கு மாவட்டத் தலைவர் பெரியவர் முத்துசாமி முதலியார் தலைமை ஏற்றார். மாநிலத் தலைவர் ஜெ. சுத்தானந்தன் அவர்களை மாநாட்டினைத் தொடங்கி வைக்கச் செய்தார்.

ஈரோடு மாவட்ட மாநாட்டில் வரலாற்றுச் சிறப்புமிக்க தீர்மானங்கள் நிறைவேற்றக் காரணமாக இருந்தார். நிறைவேற்றப்பட்டத் தீர்மானங்களை அந்தந்தத் துறைகளுக்கு அனுப்பி வைத்து நடவடிக் கையை மேற்கொண்டார் பெரியவர் முத்துசாமி முதலியார்.

### தலைமைச் சங்கம் தந்த பாராட்டு

ஈரோட்டில் 10—03—90-ஆம் நாளில் எழுச்சிப் பேரணியும், பெரியார் மாவட்ட முதல் மாநாடும், சீரோடும் சிறப்போடும்-எழுச்சியோடும் நடத்திக் காட்டியவர் பெரியவர் முத்துசாமி முதலியார். தென்னிந்தியச் செங்குந்த மகாசன சங்கத்தின் பொதுச்

செயலாளர் டாக்டர் தி. ரா. செல்வராசன், தம் பாராட்டுரையில் பின்வருமாறு தெரிவித்துள்ளார்:

"செங்குந்தர் எழுச்சிப் பேரணியும் பெரியார் மாவட்ட முதல் மாநாடும் அனைவரும் போற்றிப் புகழுமாறு சிறப்புடன் நடத்திக் காட்டிய தங்கட்குத் தலைமை சங்கத்தின் மகிழ்ச்சியையும், நன்றியையும் பாராட்டு களையும் படைத்துப் போற்றுகின்றேன். ... .. பெரியார் மாவட்டச் சமுதாய இயக்கத்திற்குத் துணை புரிந்த பெருமக்கள் எல்லார்க்கும் நன்றி"

**உண்ணாவிரதப் போராட்டம்**

17—09—89–ஆம் நாளில் சென்னையில் நடைபெற்ற தென்னிந்திய செங்குந்தர் மாநிலச் செயற்குழுவில் இட ஒதுக்கீடு பிற்படுத்தப்பட்டவருக்கு 40% ஆக உயர்த்தக் கோரும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. மாநிலச் சங்கத்தின் தீர்மானத்திற்கு ஏற்ப, பெரியார் மாவட்டச் சங்கத் தலைவர் பெரியவர் முத்துசாமி முதலியார் தலைமையில் ஈரோட்டில் பெரியார் மாவட்ட ஆட்சியர் அலுவலகத்திற்கு முன்பு 5–11—90–ல் உண்ணாவிரதப் போராட்டம் நடைபெற்றது. இதில் மூவாயிரம் செங்குந்தர்கள் கலந்து கொண்டனர். ஏறக்குறைய ஓராயிரம் செங்குந்தர் இன மக்களிடையே இரத்த கையெழுத்து பெற்று, அந்தக் கடிதத்தைத் தமிழக முதல்வர்க்கு அனுப்பினார் பெரியவர் முத்துசாமி முதலியார். இரண்டாயிரம் அஞ்சல் அட்டைகள் மூலம், செங்குந்தர் இனத்தை மிகவும் பிற்படுத்தப்பட்டோர் பட்டியலில் சேர்க்கக்கோரி, தமிழக முதல்வர்க்குப் பின்வரும் செய்தியைத் தீர்மான வடிவில் அனுப்பி வைத்தார் பெரியவர் முத்துசாமி முதலியார்.

''பிற்படுத்தப்பட்ட வகுப்பு மக்களுக்கு 30% இட ஒதுக்கீடு எனக் குறைத்ததால், கைத்தறித் தொழிலையே பெரிதும் நம்பி வறுமைக் கோட்டிற்கு மிகவும் கீழே நலிந்த நிலையில் இருக்கும் செங்குந்த மக்களின் கல்வி, வேலை வாய்ப்புகள் மிகவும் பாதிக்கப்பட்டிருக்கின்றன. அதனால், பிற்படுத்தப்பட்ட வகுப்பு மக்கள் தொகைக்கேற்ப, பிற்படுத்தப்பட்டோர்க்குரிய இட ஒதுக்கீட்டை 30% இருந்து 40% ஆக உயர்த்துமாறு தமிழ்நாடு அரசைக் கனிவுடன் கேட்டுக் கொள்கிறோம். பல்வேறு சோதனைகளால் தாக்குண்டு வறுமையில் வாடும் நெசவாளர்களுக்குக் குஜராத் மாநிலத்தில் கொடுப்பது போல், செங்குந்தர் மக்களுக்குரிய சமுதாய சலுகைகளைக் கொடுக்க வேண்டும் என்று தமிழ்நாடு அரசை வேண்டிக் கேட்டுக் கொள்கிறோம்''.

உண்ணாவிரதப் போராட்டத்தில் பெரியவர் முத்துசாமி முதலியார் தலைமையில் பொதுச் செயலாளர் எம்.எஸ். பழனியப்பன். பொருளாளர் பி.கே. நஞ்சப்ப முதலியார், வள்ளல் ராணா க.வெ. இலட்சுமணன், கே.எம். தண்டபாணி, நகரச் செயலாளர் கே.என். முருகேசன், செயலர் டாக்டர் மா. அண்ணாதுரை போன்றோர்கள் தீர்மானத்தை வலியுறுத்திப் பேசினர்.

**மாநிலத் தலைவர்க்குக் களங்கம் ஏற்பட்டபோது கலங்கியவர்**

தென்னிந்திய செங்குந்த மகாசன சங்கத்தின் தலைவர் உத்தியோக ரத்னா ஜெ. சுத்தானந்தன்

அவர்களின் பொதுநலப் பணிக்கும் - நற்பெயருக்கும் களங்கம் ஏற்படுத்தும் நோக்கத்தோடு 31-12-1990-ஆம் நாளில் கைது செய்யப்பட்டார். பொதுநல நோக்குடைய ஜெ. சுத்தானந்தன் அவர்களைக் கைது செய்த செய்தியைக் கேட்டவுடன் கலங்கினார்; வருந்தினார் பெரியவர் முத்துசாமி முதலியார். இவர்தம் விடுதலை கோரும் வகையில் கோவை மாநகரில் சிறப்பு ஆலோசனைக் கூட்டம் நடத்தப்பட்டது. தமிழக அரசின் மாண்புமிகு முதல்வர் டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி அவர்களிடம் நேரில் கண்டு முறையீடு செய்யவும், மாநிலத் தலைவர் மீது உள்ள வழக்கைத் திரும்பப் பெறுமாறு வலியுறுத்தவும் ஒன்பதின்மர் கொண்ட குழு அமைக்கப்பட்டது. இந்தக் குழுவில் பெரியவர் முத்துசாமி முதலியார் இடம் பெற்றதோடு, மாநிலத் தலைவரின் விடுதலைக்கு ஆக்கப்பூர்வமான ஆதரவும் ஆலோசனையும் வழங்கினார்.

7—1—1991-ஆம் நாளில் முத்தமிழ் அறிஞர் மாண்புமிகு டாக்டர் கலைஞர் அவர்களுக்குப் பெரியவர் முத்துசாமி முதலியார் பின்வரும் கடிதத்தை எழுதினார்:

"அன்புடையீர்!

எங்கள் செங்குந்தச் சமுதாயத்தின் மாநிலத் தலைவர்நெசவாளர்நேசன்திரு.ஜெ. சுத்தானந்தன் அவர்களின் பொது வாழ்வினைக் களங்கப் படுத்தும் வகையில் தொடரப்பட்ட வழக்கினை வாபஸ் பெற உத்தரவிட்டு வழங்குமாறு வேண்டு கிறோம்.

ஆர். ஏ. என். முத்துசாமி முதலியார்,
தலைவர்,
பெரியார் மாவட்டச் செங்குந்த மகாசன சங்கம்.

## ஏழ்மை இளைஞர்க்கு உதவுதல்

ஏழ்மையில் வாடும் எளியவர்களுக்கு எந்த எதிர் பார்ப்பும் கருதாது உதவும் பண்பு பெரியவர் முத்துசாமி முதலியாரிடம் இன்று காணலாம். ஆன்றோர்களிடம் - சான்றோர்களிடம் - அமைச்சர்களிடம் எடுத்துக் கூறியும், பரிந்துரைக் கடிதம் தந்தும், உதவுகின்ற உள்ளம் படைத்தவர் இவர். ஏழ்மை நிலையில் உள்ள ஒருவர்க்குக் காஞ்சி காமகோடி சங்கராச்சாரியர் அவர்களுக்குப் பரிந்துரைக் கடிதம் கொடுத்து உதவினார். கடிதத்தின் ஒரு பகுதி இவர்தம் பண்பினை எடுத்துக் கூறும்:

17—4—91

ஸ்ரீ ஜகத்குரு சுவாமிஜீ அவர்களுக்கு!

நமஸ்காரத்துடன் எழுதிக் கொண்டது. இந்தக் கடிதம் கொண்டு வரும் எ. நாகராஜன் என்பவர் எமது சமூகத்தைச் சேர்ந்தவர். எனது இனிய நண்பரின் புதல்வரான இவர், சட்டப் படிப்பை முடித்து நான்கு வருட அனுபவம் (நீதிமன்றம்) பெற்றவர். தமிழ்நாடு அரசுப் பணியாளர் தேர்வாணையம் மாவட்ட முன்சீப் மற்றும் மாஜிஸ்ட்ரேட் பதவிகளுக்கு 5—4—91 அன்று நடத்திய நேர்முகத் தேர்வில் கலந்து கொண்டு வந்து இருக்கிறார். இவரது நேர்முகத் தேர்வு எண். 921/91. அந்தப் பதவிக்கான முழுத் தகுதியும் இவரிடம் இருப்பதை நான் உணர்கிறேன். ஆண்டவன் அருளால் இந்தப் பதவியை அவர் பெற்று மேன்மையடைய தங்களின் உதவியை வேண்டுகிறேன். இது

ஏழ்மை நிலை கொண்டுள்ள அவர்கள் குடும்பத்திற்கும் எங்களுக்கும் செய்கின்ற மிகப் பெரும்பேறு ஆகும். எனவே, என் சார்பாகவும் எமது சமூகத்தின் சார்பாகவும் இந்தப் பணிக்கான பரிந்துரையைச் செய்து, பதவியைப் பெற்றுத் தருமாறு பணிவன்புடன் வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன்.

தங்களன்புள்ள,

**ஆர். ஏ. என். முத்துசாமி முதலியார்**

**செங்குந்தர் நகர்**

பெரியார் மாவட்டச் செங்குந்தர் சங்கத்தின் முயற்சியால் ஈரோடு அருகில் செங்குந்தர் நகர் என்னும் பெயரில் ஏறக்குறைய 200 வீட்டு மனைகள் செங்குந்தர்களுக்கு உரிமையாக்கவும்,அதில் வீடுகள் உருவாவதற்கும் தகுந்த நடவடிக்கைகளைச் செங்குந்தர் முன்னேற்றச் சங்கம் எனும் அமைப்பின்கீழ் முயற்சிகள் மேற்கொண்டார் பெரியவர் முத்துசாமி முதலியார்.

**சமுதாய இயக்கப் பயிற்சி முகாம்**

எந்த ஒரு அமைப்பிலும் இளைஞர்களின் பங்கு மிகமிகத் தேவை. இயக்க மாளிகைக்கு இளைஞர்கள் தூண்கள் போன்றவர்கள். இளைஞர்களுக்குச் சரியான வழிமுறைகள் காட்டப் பெற்றால் அந்த இயக்கம் வீறுநடை போடும்; இயக்கம் வலிமை பெறும்; இந்த வகையில் செங்குந்தர் குல இளைஞர்களுக்குச் 'சமுதாய இயக்கம்' பற்றிய இரண்டு நாள் பயிற்சி முகாம் 13—12—91, 14—12—91-ஆம் நாள்களில் கோபியில், புதுக்கூரை புதூரில் நடைபெற்றது. அதில்

பெரியவர் முத்துசாமி முதலியார் கலந்து கொண்டு ஆக்கபூர்வமான சிந்தனைகள் வழங்கினார்.

**தாமரைத் திரு. எம். பி. நாச்சிமுத்து முதலியாரின் 80-ஆம் ஆண்டு பிறந்தநாள் விழா**

தாமரைத் திரு. எம். பி. நாச்சிமுத்து முதலியார் காந்திய சிந்தனைகள் மிக உடையவர்; நெசவாளர்களின் காவலராக விளங்கிய பெருமான். இந்திய அரசு பல கைத்தறிக் குழுக்களில் இவரை நியமனம் செய்து, இவருடைய அறிவாற்றலைப் பயன்படுத்திக் கொண்டது. அத்துணைச் சிறப்புடையவர். இவரின் 80-ஆம் ஆண்டு பிறந்தநாளை ஒவ்வொரு மாவட்டத் தலைநகரிலும் சிறப்பாகக் கொண்டாட எண்ணியது தென்னிந்தியச் செங்குந்தர் சங்கம்; பெரியார் மாவட்டத்தில் பிறந்து, வளர்ந்து, சிறப்புப் பெற்ற தாமரைத்திரு. எம். பி. நாச்சிமுத்து முதலியாரின் பிறந்த நாளை முதலில் ஈரோட்டில்தான் நடத்த வேண்டும் என்று விரும்பினா முத்துசாமி முதலியார். அங்ஙனமே, 28—4—92-ஆம் நாளில் பெரியார் மாவட்டச் செங்குந்தர் மகாசன சங்கத்தின் சார்பில் உத்தியோக ரத்னா ஜெ. சுத்தானந்தன் அவர்களின் தலைமையில், மாண்புமிகு டி. என். சிங்காரவேலு, டாக்டர் தி. ரா. செல்வராசன் போன்ற செங்குந்தர் குலத் தலைவர்கள் பலர் கலந்து கொண்டு சிறப்புச் செய்ய, தாமரைத்திரு. எம். பி. நாச்சிமுத்து செங்குந்தர் அவர்களின் 80-ஆம் ஆண்டு பிறந்த நாள் விழா மாநிலத்தில் முதன் முதலாக ஈரோட்டு மண்ணில் சிறப்பாக நடத்தினார் பெரியவர் முத்துசாமி முதலியார். தம் காலத்தில் வாழ்ந்த, பழகிய

தாமரைத்திரு எம். பி. நாச்சிமுத்து முதலியார்க்கு விழா எடுத்ததில் பெரிதும் மகிழ்ச்சியடைந்தார்

**பாவடிப் பிரச்சனைகள்**

பெரியார் மாவட்டத்தில் நெசவாளர்களும் பிற இனத்தவர்களுக்கும் பாவடிப் பிரச்சனைகள் தொடர்பாக மோதல் நிகழ்வதுண்டு. மாநிலச் சங்கமும் தீர்மான வடிவில் பாவடிப் பிரச்சனைகளைப் பற்றி விவாதித்து. 20—7—1991-ஆம் நாளில் பின்வரும் தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறது. இதற்கேற்ப, பெரியார் மாவட்டத்தில் பாவடிப் பிரச்சனைகள் தீர, பெரியார் மாவட்ட ஆட்சியர் அவர்களை அணுகி, பேசினார்; பாவடிகள் இனமக்களுக்கே சொந்தமாக்க முயற்சிகள் பல மேற்கொண்டார்; தீர்மானங்கள் நிறைவேற்றினார் பெரியவர் முத்துசாமி முதலியார்:

> "நமது மாநிலம் முழுவதும் பரவலாகச் செங்குந்தர்குல மக்கள் வசிக்கும் ஊர்களில் பாவடி நிலங்கள் வாழையடி வாழையாகச் செங்குந்தர் நெசவாளர்களால் பயன்படுத்தி வரப்படுகிறது. அந்தப் பாவடி நிலங்கள் மற்றவர்களால் ஆக்கிரமிப்பு செய்யப்படுகிறது. நமது குல மக்கள் பாவு தோயும் தொழில் செய்ய முடியாத நிலைமை ஏற்படுகிறது. எனவே, நமது செங்குந்தர் இன மக்களின் பாவடி நிலங்களை நம் இன மக்களுக்கு உரிமையாக்க நடவடிக்கை எடுக்க இத்தீர்மானம் கோருகிறது.

**குடியேற்ற மாநாடு**

தென்னிந்தியச் செங்குந்தர் மகாசனத்தின் 17வது சமூக - இளைஞர் - மகளிர் - நெசவாளர் எழுச்சிமிகு

மாநாடு 26-6-93-ஆம் நாளில் நடை பெற்றது. மாநிலச் சங்கத் தலைவர் ஜெ. சுத்தானந்தன், பொதுச் செயலாளர் முனைவர் தி.ரா. செல்வராசன், டாக்டர். சி. பாலசுப்பிரமணியன் ஏ. வீ. ஆர்எம். வீ. சங்கர நாராயணன், எஸ்.பி. சம்பந்தம், நீதியரசர் டி. என். சிங்காரவேலு, அருள்நெறிப்புரவலர் முத்துசாமி முதலியார் போன்றோர்கள் கலந்து கொண்டனர்; மாநாட்டில் பின்வரும் எழுச்சிமிகு சொற்பொழிவினை நிகழ்த்தினார் பெரியவர் முத்துசாமி முதலியார்:

''இதுவரையில் நாம் பதினாறு மாநில மாநாடுகள் நடத்தி இருக்கிறோம். நம் இனமக்களுக்கு வழிகாட்டி இருக்கிறோம். இன்று பதினேழாவது சமூக-இளைஞர்-மகளிர் நெசவாளர் மாநில மாநாடு நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. இதுவரையில் நாம் சாதித்த செயல்கள் என்ன? இனி செய்ய வேண்டிய பணிகள் என்ன? என்பதை இங்கு ஆலோசனைகள் செய்து, எதிர்கால நடவடிக்கைகள் சிறப்பாக அமைய தீர்மானிக்க இருக்கிறோம். நம்குல மக்களுக்கு எதிர்பார்த்த பலன்கள் - நன்மைகள் முழுமையாக கிடைக்கவில்லை. பிற சமூக மக்களுடன் ஒப்பிடும்போது, நம்முடைய சமூகத்தினர் இன்னும் பின்தங்கிய நிலையிலே இருக்கின்றனர். அந்தச் சமூகம் பெற்ற உணர்வினை நாம் இதுவரையில் பெறவில்லை. பதினேழாம் படி கடந்து பதினெட்டாம் படி அடையும் போது, சபரி ஐயப்பன் அருள் கிடைப்பது போல், பதினேழாம் மாநில மாநாடு கடந்து பதினெட்டாம் மாநில மாநாடு

நடைபெறும்போது, நம் இன மக்களுக்குப்
பெரும் நன்மைகள் கிடைக்கும் என்று
நம்புகிறேன். இதுபோல பல மாநாடுகள்
நடைபெற்றாலும், பலதீர்மானங்கள் இயற்றப்
பெற்றாலும், நம் இனமக்களின் ஆதரவும்
எழுச்சியும் இருந்தால் தான் நம் இயக்கம்
வெற்றிபெறும். எனவே, நம் குலமக்கள்
தொடர்ந்து ஆதரவு தர வேண்டுகிறேன்.
ஓரணியில் திரண்டு ஒரு தலைமையின் கீழ்ச்
செயல்படுவோம்! நம்மிடையே உள்ள கருத்து
வேற்றுமைகளை மறப்போம்! ஒன்று படுவோம்!
உயர்வடைவோம்!

**அரசியல் இயக்கம் தேவை**

குடியேற்ற தென்னிந்தியச் செங்குந்தர் மாநிலச் சங்கத்தின் பதினேழாவது மகளிர் சமூக-இளைஞர்-நெசவாளர் மாநாட்டின் அருள்நெறிப் புரவலர் முத்துசாமி முதலியார், செங்குந்தர் குல மக்களுக்கு 'ஓர் அரசியல் இயக்கம் ஏன் தேவை?' என்பதைத் தெளிவாக எடுத்துரைத்தார்; பின்வரும் தீர்மானம் கொண்டு வந்தார்:

"நம்முடைய சமுதாயம் பொருளாதாரத்தில்
பின்னடைந்த நிலையில் உள்ளது.
பொருளாதாரத்தில் நம் இனம் தன்னிறைவு
அடையவும், தொழில் துறையில் வளர்ச்சி
அடையவும், கல்வியில் நம் பங்கைப்
பெறுவதற்கும் அரசின் சலுகைகள் பல
பெறுவதற்கும் நாம் நேரிடையாக அரசியலில்
ஈடுபட வேண்டும். இந்தக் குறிக்கோளை நாம்

அடைய 'அரசியல் இயக்கம்' காண வேண்டும்; உருவாக்க வேண்டும்;

ஏன் இந்த முடிவிற்கு நாம் வரவேண்டும்? காரணம் இதுதான்! நம்முடைய இனமக்களின் ஆதரவினையும், வாக்குகளைப் பெற்று ஆட்சி அமைக்கும் அரசியல் வாதிகள் நம் இனத்தைக் கண்டு கொள்வதில்லை; நன்மை செய்வதில்லை; எனவேதான், புதிய 'அரசியல் இயக்கம்' காண வேண்டும் என்று விரும்புகிறேன்.

மேலும், இதன் தொடர்பாக, மாவட்டப் பொறுப்பாளர்களின் கூட்டத்தினைக் கூட்டிப் பேசலாம். நிதி நிலை பெருக்கலாம்; நிதியும் கொள்கை வலிமையும் இருந்தால் தான் உறுதியாக நாம் 'அரசியல் இயக்கம்' கண்டு, வெற்றி அடைய முடியும் என்று நம்புகிறேன்''.

### பொது வாழ்வு பற்றி முத்துசாமி

பெரியவர் முத்துசாமி முதலியாரின் பொது வாழ்வை-பொதுத் தொண்டினைப் பாராட்டி, விழா எடுத்தனர். பாராட்டு விழாவில், தம் ஏற்புரையில் – தம் பொதுவாழ்வைப் பற்றி பின்வருமாறு குறிப்பிடு கின்றார்:

''3—9—1913-இல் பிறந்த நான் நெசவுத் தொழில், விவசாயத் தொழில் செய்து இரவு பகலாகத் துன்பப்பட்டேன்; பின்பு சிறிய ஜவுளி வியாபாரம் தொடங்கினேன். எனது கடின உழைப்பே, பொது வாழ்வில் பங்கு கொள்ளக் காரணம் என்பேன். மேலும்

கவுந்தப்பாடியில் 1953-இல் சுதேசி ஜவுளி வர்த்தகர் சங்கம் தொடங்கினேன். சங்கம் தொடங்கியகுறுகிய நாளில் சொந்தமாகக் கட்டடம் வாங்கினேன். கவுந்தப்பாடியில் சுகாதார நிலையம், ஆரம்பப் பள்ளி, உயர்நிலைப் பள்ளி, மகளிர் பள்ளி உருவாக இந்தச் சங்கத்திலிருந்து நிதி உதவி செய்தேன். இவை மட்டுமின்றி இந்த நிறுவனங்கள் தோன்ற ஜவுளி வர்த்தகர் சங்கம் அடிப்படைக் காரணமாக இருந்தது. சென்ற ஆண்டுகூட, இச் சங்கத்தின் சார்பில் கவுந்தப்பாடி குடிமக்களுக்குக் குடிநீர் இலவசமாக வழங்க மேல்நிலைத் தொட்டி அமைத்து, இன்றும் குடிநீர் வழங்கி வருகிறோம்.

பெருமைமிகு பெரியார் மாவட்டத்தில் செங்குந்தர்கள் தொழில் துறைகளில் உயர்வடையவும், பதவி பொறுப்பில் முன்னேறவும் கல்விப்பணி சிறக்கவும், தெய்வீகப்பணி மணக்கவும் அனைத்து செங்குந்தர் வாழ்வு வளம் பெற, இடையூறுகள் நீங்க, இன்பம் பொங்க, என்னால் ஆன எல்லா முயற்சிகளையும் எப்பொழுதும் செய்து, பணி ஆற்றுவேன்''.

# சான்றோர் வழங்கிய புகழ் முத்துகள்

"எல்லோராலும் புகழப் பெறும் ஒருவரால் புகழ் பெறுவதே உண்மையான புகழ். உண்மையான புகழ் தற்செயலாக வருவதில்லை. புகழ், வாழ்க்கைக்கு அப்பாலும் நிற்கும். புகழ்-கல்வி, வீரம், கொடை, அருளாண்மையால் வருவது. தோன்றிற் புகழோடு தோன்றுக என்பார் வள்ளுவர். மனிதர்கள் தத்தம் திறமையால் புகழேந்திகளாக விளங்குகிறார்கள். நற்செயலும், நல்லொழுக்கமும் நற்சிந்தனையும் உடையவர்க்கே வரலாறு, புகழ்மலர்களைத் தூவுகிறது. புகழேங்கிகட்கன்று" என்று கவிஞர் மன்னர் மன்னன் புகழின் மேன்மையைக் குறிப்பிடுவர்.

இந்த நிலையான புகழைப் பெற, உழைப்பை மூலதனமாகக் கொண்டார் பெரியவர் முத்துசாமி முதலியார்.

பொதுவாழ்வில் தம்மை இணைத்துக் கொண்ட தன் வாயிலாகப் புகழ்பெற்றார். கல்வித்தொண்டு, ஆன்மீகத்தொண்டு, இனத்தொண்டு எனப் பல்வகை சமுதாயத் தொண்டுகள் புரிந்தார். வாழ்வில், புகழில், ஏற்றம் பெற்றார். ஈரோடு மண்ணிற்கும் புகழைச் சேர்த்தார் பெரியவர்.

இவர்தம் சமுதாயத் தொண்டுகளைத் தமிழறிஞர்கள் பாராட்டினர்; சான்றோர்கள் புகழ்ந்தனர்; ஆன்றோர்கள் வாழ்த்தினர். இவர்கள் வழங்கிய புகழ்முத்துக்கள் சில:

நாலிருப தாண்டுகள் நம்பன் திருவருளால்
சீலமுடன் வாழ்ந்துயரும் சீராளன் – ஞாலமதில்
முத்துவிழா கொண்டுமகிழ் முத்துசா மிப்புனிதன்
நித்தமும் வா்ழ்க நிறைந்து.

**கிருபானந்த வாரியார்**
14—8—1993 சென்னை

ஏ! காலதேவதையே! ஏன் ஒரே மாதிரி ஓடுகிறாய்! முதலியார் வாழ்நாள் ஒவ்வொன்றும் தமிழருக்கு நலம் பயக்கும் நாள்! ஆதலால், திருவாளர் ஆர்.ஏ.என். முத்துசாமி முதலியாரைப் பொறுத்து, மெதுவாகப் போகவும். யாம் வாழும்நாள் வரை முதலியார் வாழவேண்டும். வாழ்த்துக்கள்!

**தவத்திரு குன்றக்குடி அடிகளார்**
10—9—93

கற்றவர்வாழ் ஈரோட்டில் கல்விதரும் தந்தைஅன்பு
முற்றுமுத்து சாமி முதலியார் – உற்றவர்கள்
வாழ்த்தஎண்பதாம்ஆண்டு மண்ணினார்வா ழியவே!
சூழ்த்தநலம் யாவுமிகத் தோய்ந்து

**தவத்திரு சுந்தரசுவாமிகள்**
மகா சந்நிதானம்
கௌமாரமடாலயம்
கோவை-641 006.

கல்விப் பணியில் சமுதாயக்
களத்தில் இறங்கிப் பாடுபடும்
செல்வர் முத்துசாமி யெனும்
சிவஞ்சேர் பக்தி நெறியாளர்

சொல்லும் வண்ணம் செயல்
செய்யும் துணிவும்பணிவும் மிகவுடையார்
பல்லாண் டறஞ்செய் தருள்
நெறியில் பரவி வாழ வாழ்த்து கின்றோம்

**தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார்**
பேரூர் ஆதீனம், பேரூர்
கோவை-10

மனிதனுக்கு வேண்டிய முக்கிய சொத்து கல்வி; அழியாத சொத்து. அப்படிப்பட்ட கல்விப்பணியில் பலரின் அறிவுக் கண்களைத் திறந்தவர் முதலியார் அவர்கள். பல கல்வி நிறுவனங்களை ஏற்படுத்திக் கல்விக்காக அரிய சேவை செய்பவர்.

**ஸ்ரீலஸ்ரீ ச. இராஜலிங்க மாணிக்க சுவாமிகள்**
கூனம்பட்டி ஆதீனம்
விஜயமங்கலம் - 638 056

'வியாபாரத்தில் தனக்கெனத் தனி இடத்தைத் தேடிக் கொண்ட திரு ஆர்.ஏ.என். முத்துசாமி முதலியார் கல்விச் சேவையிலும் தன்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டு அதனைக் குறுகிய காலத்தில் வானளாவி வளர்த்து, பெருமை கொண்டார்

**செ.க. குமாரசாமி**
பதிவாளர் (ஓய்வு)
சென்னைப் பல்கலைக் கழகம்

திரு ஆர். ஏ. என். முத்துசாமி முதலியார் நல்ல உடல் நலத்துடன் பல்லாண்டு வாழ்ந்து நமது சமூகத்திற்கும் கல்விப்பணிக்கும் தொண்டாற்ற வேண்டுமென்று முருகப்பெருமானை வேண்டுகிறேன்.

**வீ. சங்கரசுப்பையன், இ. ப. அ.,**
செயலாளர்
தமிழக அரசு, சென்னை

கல்வி, சமுதாயத் தொழில் துறைகளில் அளப்பரிய சாதனைகள் ஆற்றிய முதலியார் அவர்கள்...... கல்வித்தந்தையாகவும், கல்விச் சக்கரவர்த்தியாகவும் ஈரோட்டில் உலா வருகின்ற பெரியவர். இன்னும் பல்லாண்டுகள் வாழ்ந்து மொழிக்கும் இனத்திற்கும் தொண்டு செய்ய இறையருள் துணை நிற்க வேண்டும் என்று 'அவன் அருளாலே அவன் தாள்' வணங்கு கின்றேன்''.

— முனைவர் சி. பாலசுப்பிரமணியன்
முன்னாள் துணைவேந்தர்
தமிழ்ப் பல்கலைக் கழகம்,
தஞ்சாவூர்–5

'முதலியார் கல்வி நிறுவன முதல்வரே!
ஆர்.ஏ.என். முத்துசாமி முதல்வரே!
நீங்கள்
கோட்டை ஈஸ்வரன் கோவில் தெருவை
நோட்டம் விட்ட வண்ணம் இருந்து
ஈரோட்டுப் பொருளா தாரத்தை ஆய்ந்து
பாராட்டும் டாக்டர் பட்டமும் பெற்றவர்!
மில்லி கிராம் சுத்த மாக
எல்லா ரையும் நீங்கள் எடை போட வல்லவர்!
காசு விசயத்தில் நீங்கள், இந்த
ஈரோட்டுக்கு இரண்டாவது பெரியார்
கல்வியை வளர்க்கும் பணியிலும் பெரியார்'

கவிஞர் தி. முருகுசுந்தரம்
பாரதிதாசன் இதழ்ப்பணிகள்
நூல் வெளியீட்டு விழாவில்...

பெரியவர் ஆர். ஏ என். முத்துசாமி முதலியார் அவர்கள் எளிய முறையில் வாழ்க்கையைத் தொடங்கி, இன்றைய நன்நிலைக்கு உயர்ந்து புகழ் பெற்றதற்குக் காரணம் அவருடைய கடுமையான உழைப்பே யாகும். ஈரோடு கலைக் கல்லூரியும் ஈரோடு தொழில் நுட்ப பயிலகமும் அவரது அயராது உழைப்புக்கும் கல்விப்-பணிக்கும் சான்றாக என்றும் விளங்கிக் கொண்டிருக்கும்.

**ஜெ. சுத்தானந்தன்**
தலைவர்
தென்னிந்தியச் செங்குந்தர்
மகாசன சங்கம், சென்னை

ஒரு மனிதனுக்கு மூன்று வயதுகள் உண்டு. பிறந்த உடலுக்கு ஒரு வயது; தோன்றும் உணர்ச்சிக்கு ஒரு வயது; செய்யும் செயல்களுக்கு ஒரு வயது; இந்த அளவில் நோக்கினால் பெரியவர் முத்துசாமி அய்யா அவர்களுக்கு, உடலால் வயது எண்பது என்றால், அவர் ஆற்றிய அரும்பெரும் செயல்களால் ஆகும் வயதோ எண்பதின் மும்மடங்காகும்.

**டாக்டர் தி. ரா. செல்வராசன்**
பொதுச் செயலாளர்
தென்னிந்தியச் செங்குந்தர்
மகாசன சங்கம்
சென்னை

ஈரோடு முதலியார் காலேஜ், ஆர். ஏ. என். முத்துசாமி முதலியார் அவர்கள் இல்லாவிட்டால் இந்த அளவுக்கு வளர்ந்திருக்க முடியாது. உயர் கல்விக்கு மிகவும் சிறப்பாக ஈரோடு செங்குந்தர் கல்லூரி நடத்தி வருவது அவர்களுடைய இனப்பற்றுக்கும், கடுமையான உழைப்பிற்கும் எடுத்துக் காட்டு.

யாரிடமும் கல்லூரிக்கு நன்கொடை வாங்குவதில் தயங்குவதே இல்லை. தான் நினைத்ததை முடிப்பவர்.

ஏ. வீ. ஆர்எம். வீ. சங்கரநாராயணன்
கோமதி மில்ஸ்
வீரவநல்லூர் – 627 426

அணிதிகழும் ஈரோட்டுப் பெருஞ்செல்வர்
அன்பின் மிக்கார்
துணிவுடனே வாணிகத்தின் துறையிலுயர்
தொழிலின் வல்லார்
பணிவுடையார் இன்சொல்லார் பழுத்தபழம்
பண்புச் சான்றோர்
மணியனைய முதலியார் பன்னெடு நாள்
இனிதே வாழ்க!

டாக்டர் சிற்பி பாலசுப்பிரமணியன்
தமிழ்த்துறைத் தலைவர்
பாரதியார் பல்கலைக் கழகம்
கோவை – 641 046

தான் கற்காத கல்வியைத் தம் மக்களும் தம் உறவினர்களும் பெற வேண்டும் என்று விரும்பினார். பொது வாழ்வில் ஈடுபட்ட பின்பு, தான் கற்காத கல்வியைச் சமுதாய மக்கள் பெற வேண்டும் என்று விழைந்தார். இதன் விளைவே, பல கல்வி நிறுவனங்களை உருவாக்கினார் திரு ஆர். ஏ. என். முத்துசாமி முதலியார்.

ராணா க. வெ. இலட்சுமணன்
செயலர் & தாளாளர்
ஈரோடு கலைக் கல்லூரி (தன்னாட்சி)

திரு RANM அவர்களுடைய சீரிய முயற்சியாலும், ஆர்வத்துடன் இடைவிடா உழைப்பாலும், அடக்கமான குணத்தாலும், துணிவுடன் இடைவிடா முயற்சியாலும் மேற்படி ஸ்தாபனங்கள் இன்றும் சீருடனும் சிறப்புடனும், கீர்த்தியுடனும் விளங்குவது கண்கூடு.

**P. P. சதாசிவம்**
கவுந்தப்பாடி 638 455

கல்விக் கடவுள் காமராசரும், தந்தை பெரியாரும் பயின்ற பள்ளியிலே தான் திரு RANM பயின்றார். காமராசர் தமிழகமெங்கும் கல்விக் கூடங்களைத் திறந்தார். பெரியார் நாடு முழுவதும் அறிவுக் கூடாரங்களைத் தோற்று வித்தார். நம் முத்துசாமி முதலியாரோ கல்விக் கூடங்களையும் அறிவுக் கூடாரங்களையும் இணைந்தே திறந்து வைத்தார்...

மயிலோன் ஏ. **ஆறுமுக முதலியார்**
முதலியார் கல்வி நிறுவனம்
ஈரோடு

திரு ஆர். ஏ. என். முத்துசாமி அவர்கள் இன்று வரையில் உண்மை, ஒழுக்கம், நேர்மை, சைவம் ஆகிய நற்பண்புகளைக் கடைப்பிடித்து வருகிறார். தள்ளாத வயது எனினும், நற்பண்புகளைக் கடைப்பிடித்து வருகிறார் கல்விப் பணியாற்றி வருகிறார். இவர்தம் கல்விப் பணிக்கு ஆசான் – குரு தவத்திரு குன்றக்குடி அடிகளார் எனில் மிகையன்று. இவருடைய நல்ல பாதையிலிருந்து திரு ஆர். ஏ. என். முத்துசாமி முதலியார் என்றும் தடம் புரண்டது இல்லை.

மேலும், இவருடைய கல்வித் தொண்டு புயல் நடுவே சிக்கிய தோணி போன்றது. பலமுறை சிக்கித்

தவித்தார்; அதிலிருந்து மீண்டும் கரை சேர்ந்தார்; கல்வித் தொண்டைத் தொடர்ந்தார்; கல்வித் தொண்டில் தன் அனுபவ முத்திரையை நன்கு பதித்தவர்.

**சக்தி எம். பாலசுப்பிரமணியன்**
நிறுவனச் செயற்குழு உறுப்பினர்
முதலியார் கல்வி நிறுவனம்

உடல் உழைப்பால், உயர்ந்த எண்ணத்தினால் உயரிய இடத்தை எட்டியச் சாதனைச் செம்மல் ஆர்.ஏ.என். முத்துசாமி முதலியார், இவர்தம் வாழ்வில் சரிபாதியைப் பொதுத் தொண்டிற்காக அர்ப்பணித்த அற்புத மாமனிதர்.

**கே. எம். தண்டபாணி**
ஈரோடு

'பெரியவர்' என்று அனைவராலும் அன்புடன் அழைக்கப் பெறும் திரு ஆர். ஏ. என். முத்துசாமி முதலியார் அவர்கள் நடை, உடை, நம்பிக்கை, நாணயம், உழைப்பு, செயல்திறன், அன்பு, பண்பு, அரவணைப்பு, ஆதரவு ஆகியவற்றில் நமக்குத் தந்தையாக, ஆசானாக, நல்ல நண்பனாகத் திகழ்கின்றார்.

**கே. என். முருகேசன்**
தலைவர்
ஈரோடு நகரச் செங்குந்தர் மகாசன சங்கம்

நேர்மையான எண்ணம், பிறர் நலச் சிந்தனை கட்டுப் பாட்டுணர்ச்சி, அயரா உழைப்பு — இவையே தம்மை வழிநடத்திச் செல்லும் அடிப்படைக் கொள்கை

என உணர்ந்து செயல்படும் கல்வித் தந்தை ஆர்.ஏ.என். முத்துசாமி முதலியார்.

சி. சிவசுப்பிரமணியன்
உறுப்பினர்
முதலியார் கல்வி நிறுவனம்

'உழைப்பாலே உயர்ந்தோனே முளைப்பார்
எழிலோனே!
ஓம்சக்தி ஈன்றதமிழ் இளையோனே 'முத்துசாமி'
களைப்பில்லா நோக்காலே 'கலைக்கல்லூரி'
தந்தோனே!
கல்விக்கொரு 'சக்கரவர்த்தி' கொடைபேரைக்
கொண்டோனே!
களைப்பான ஊர்கூட குபேரத்துவம் பெற்றுவிடும்
காமராசர் கொள்கைவழி நிறைகல்வி கற்றுவிடும்
பிழைப்பெல்லாம் நல்வாக்கால் வாழ்வாங்கு
வாழ்ந்துவிடும்
பத்தெட்டு ஆண்டுவிழா கொண்டாடும் ஆலயமே!''

கோல்டு பிஷ் எஸ். நல்லசாமி
ஈரோடு.

திரு. ஆர்.ஏ.என். முத்துசாமி முதலியாரிடம் நான் காணாதன செருக்கும் சினமும் சிறுமையும் ஆகும். குறைகள் செய்ய அஞ்சும் பண்பும், குற்றம் ஏற்படு முன்பு முன்கூட்டியே உணர்ந்து அதுவராமல் தடுக்கும் நடுநிலை நின்று ஆராயும் இயல்பும் இவரிடம் இயல் பாகவே இருப்பதனை உணர்ந்துமகிழ்ந்து இருக்கிறேன்.

பேராசிரியர் க. இராமதாசு
முன்னாள் முதல்வர்
ஈரோடு கலைக்கல்லூரி

தம் வாழ்நாளில் பெரும்பகுதியைப் பொதுவாழ் விற்காகச் செலவிட்டவர் திரு ஆர்.ஏ.என். முத்துசாமி முதலியார் அவர்கள். கல்விக்காக இவர் ஆற்றிய அரும்பணிகளை இந்தத் தமிழ்ச் சமுதாயம் என்றும் மறக்காது. கல்விப்பணியில் இவர் ஒரு அனுபவப்பழம். கண்டிப்பும் அனுசரணையும் காட்டும் உயர்ந்த உத்தமர் இவர் நமக்கு ஒரு வழிகாட்டி.

பேராசிரியர் **ரா. வெ. இராமகிருஷ்ணன்**
முதல்வர்
ஈரோடு கலைக்கல்லூரி (தன்னாட்சி)

அவர் பெயரைப் பாருங்கள். ஆர்வமுடன்
சொல்லுங்கள்!
ஆர்.ஏ.என். முத்துசாமியா இல்லை மால்கம்
ஆதிசேஷய்யா கூறினார் ஆங்கில 'ரேன்'
முத்துசாமியாம்! ஆங்கிலத்தில் 'ரேன்' என்றால் வேகம்
தானே!
ஆம்வேக முத்துசாமி உண்மையிது பொய்யில்லை.
அவர் படிக்கவில்லை. இலக்கியம் கற்கவில்லை.
ஆனால், ஆயிரம்பேர் கற்க வழி செய்தார்.
மக்களை முழுமைப் படுத்துவது கல்வியென்று
தான்நம்பியதை நடைமுறைப்படுத்திய நல்லவர்!

முனைவர் **நா. ஆறுமுகம்**
இணைப் பேராசிரியர்
தமிழ்த்துறை
புதுவைப் பல்கலைக் கழகம்

'ஓரெட்டில் உலகளந்தது போன்ற கதையில்லை இவர் வாழ்வு. ஆலவித்துப் போல் சிறிது சிறிதாக கண்ணுக்குப் புலப்படாமலே விரிந்து பரந்தது தான் இவர் வாழ்வு. பெரியவர் ஆர். ஏ. என். முத்துசாமி

முதலியாரின் வாழ்வு ராஜபாட்டையில் நடை போட்ட வாழ்வல்ல. கல்லும் முள்ளும் நிறைந்த கடினமான பாதை 'மடுத்த வாயெல்லாம் பகடன்னது' இவருடைய வாழ்க்கை'

டாக்டர் மே .அ. பாலமுருகன்
தமிழ்த்துறைத் தலைவர்
ஈரோடு கலைக் கல்லூரி
(தன்னாட்சி)

பொது நலமே தனது நலமாக நினைத்து செயல் படுவதுடன், தனக்குச் சரி என்று பட்டால் அந்த இலக்கை அடைய மிகுந்த மன ஊக்கத்துடனும், திடத்துடனும் மற்றவர்களை வழி நடத்தும் திறனை நான் வியந்து பாராட்டுகிறேன். மிகவும் சிக்கனமாகவும் மதி நுட்பத்துடனும் செயல்படும் அவர்களது அணுகுமுறை என்னை மிகவும் பல தடவை பிரமிப்பில் ஆழ்த்தியதுண்டு

**செய. கோவிந்தராசலு, பி.ஈ.,**
முதல்வர்
ஏ.டி.ஜே. தர்மாம்பாள் மகளிர் தொழில்
நுட்பக் கல்லூரி
நாகப்பட்டினம் - 611 011

பாவுக்கும் ஊடைக்கும் பதமளிக்கும் கஞ்சிபோல்
படிப்பும் தொழிலும் கலந்தளித்த காவலனே
பட்டப் படிப்பு படித்து அறியா-நீர்
பள்ளியும் கல்லூரியும் பாரினில் அமைத்து-அதனைப்
பாரோர் புகழ பணியாற்ற ஓர் மருமகனாம்
பாசமுள்ள ராணா லக்ஷ்மணனைப் பெற்றாயப்பா!

**கே. கிருஷ்ணன்**
கோபிச்செட்டிபாளையம்

சான்றோர்களின் நட்பு

ஒருவருடைய வாழ்வில் தாய், தந்தையர், இல்லாள், ஆசிரியர் ஆகியோர் எவ்வளவு இன்றியமையாதவர் களோ அவ்வாறே சிறந்த நண்பர்கள் அமைவது இன்றியமையாத ஒன்றாகும். பெரியவர் முத்துசாமி முதலியார்க்குக் கல்வியாளர்களின் நட்பு கிடைத்தது. சமயச் சான்றோர்களின் நட்பு கிடைத்தது. அரசியல் பெரியோர்களின் நட்பும் அரவணைப்பும் கிடைத்தன. இனமக்களின் நட்பும், ஆதரவும் கிடைத்தன. ஈரோடு முதலியார் கல்வி நிறுவனத்தின் பெருமக்களின் அன்பும் ஆதரவும் நட்புணர்வும் கிடைத்தன.

குறிப்பாகத் தவத்திரு குன்றக்குடி அடிகளார், தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார், திருமுருக கிருபானந்த வாரியார், டாக்டர் வ. செ. குழந்தைசாமி, டாக்டர் எஸ். வி. சிட்டிபாபு, தாமரைத்திரு நெ. து.சுந்தர வடிவேலு, முன்னாள் பதிவாளர் சி.கே.குமார சாமி, டாக்டர் சி. பாலசுப்பிரமணியன், டாக்டர் கொ. ம. மாரிமுத்து, பேராசிரியர் சிலம்பண்ணன், மாண்புமிகு எஸ்.முத்துசாமி, மாண்புமிகு சுப்புலட்சுமி ஜெகதீசன், பேராசிரியர் க. இராமதாசு, தாமரைத் திரு எம். பி. நாச்சிமுத்து செங்குந்தர் போன்ற சான்றோர்களின் நட்பும் உறுதுணையும் பெரியவர் முத்துசாமி முதலியாரின் புகழுக்கு மேலும் அணி சேர்த்தன.

3—9 –1913-ஆம் ஆண்டில் பிறந்து, 80 ஆண்டுகள் பெருவாழ்வு வாழ்ந்து வருகின்ற பெரியவர் முத்துசாமி முதலியார் பெரியார் மாவட்ட மக்களுக்கும், தமிழக மக்களுக்கும் தொண்டர்க்குத் தொண்டராக-குளிர்

தரும் ஆலமரமாகத் திகழ்கின்றார். இவர் ஒரு நன்முத்து, ஒளிமுத்து; பொற் குவியல்; எழுஞாயிறு; குளிர் நிலவு.

'செல்வம் என்பது சிந்தையின் நிறைவே'

என்பது குமரகுருபர சுவாமியின் வாக்கு. பெரியவர் முத்துசாமி முதலியார் வாக்கில் வாய்மையுடையவர்; சிந்தையில் தெளிவுடையவர்.

'உள்ளத்தால் பொய்யாது ஒழுகின் உலகத்தார்
உள்ளத்துள் எல்லாம் உளன்'

என்ற குறட்பாவின் கருத்திற்கு ஒப்ப, மக்கள் நெஞ்சில் நிலைத்து நின்று வாழ்ந்து வரும் மக்கள் தொண்டர் பெரியவர் முத்துசாமி முதலியார்.

இந்த யாக்கை நிலையில்லாதது; பொன்னும் மணியும் நிலையில்லாதது; சேர்த்த பெருஞ்செல்வம் நிலையில்லாதது; ஆனால், அருள்நெறிப் புரவலர், பெரியவர் முத்துசாமி முதலியார் தம் வாழ்நாளில் சேர்த்த புகழ் நிலையானது. நிலைத்த புகழை நிலை பெற செய்யவே வாழ்ந்து வரும் மாமனிதர். இந்த மண்ணும் வானும் இருக்கும்வரை பெரியவர் முத்துசாமி முதலியாரின் புகழ் நின்று நிலைபெறும்.

'திருவாளர் ஆர். ஏ. என். முத்துசாமி முதலியார்
ஒரு சகாப்தம்'

என்ற தவத்திரு குன்றக்குடி அடிகளாரின் அருள்வாக்கு அமுதவாக்கு ஆகும்.

—▭—



/

★ அரசியல் தலைவர்களுடன் —

★ ஆன்மீகத் தலைவர்களுடன் —

★ கல்வியாளர்களுடன் —

★ முதலியார் கல்வி நிறுவனப் பெருமக்களுடன் —

★ பொது வாழ்வில் —

பெரியவர் ஆர்.ஏ.என். முத்துசாமி முதலியார்



மாண்புமிகு பாபு ஜெகஜீவன்ராம்
அவர்களை நேரில் சந்தித்து உரையாடிய காட்சி



இந்தியக் குடியரசுத் துணைத்தலைவர்
மாண்புமிகு பிரபுதாஸ் பட்வாரி அவர்களுடன்
பெரியார் முத்துசாமி முதலியார் கலந்துரையாடுகிறார்.



தமிழக அமைச்சர் மாண்புமிகு எஸ். முத்துசாமி M.A.,
அவர்களுடன் நிறுவனத் தலைவர் ஆர்.ஏ.என். முத்துசாமி முதலியார்




ஆன்மீகப் பெரியவர் திருமுருக கிருபானந்த வாரியார்
அவர்களும் பெரியவர் முத்துசாமி முதலியார் அவர்களும்



தவத்திரு குன்றக்குடி அடிகளாரிடம் ஈரோடு கலைக் கல்லூரியின் வளர்ச்சிப் பணிகளைக்காட்டி விளக்குகிறார் பெரியவர் ஆர்.ஏ.என். முத்துசாமி முதலியார்



3.9.93ஆம் நாளில் குன்றக்குடியில் பெரியவர் ஆர்.ஏ.என் முத்துசாமி முதலியார் அவர்களுக்கு 'அருள் நெறிப்புரவலர்' எனும் பட்டத்தை வழங்குகிறார் தவத்திரு குன்றக்குடி அடிகளார்



சென்னைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர்
தாமரைத்திரு நெ.து. சுந்தரவடிவேலு அவர்களுடன் பெரியவர்
ஆர்.ஏ.என். முத்துசாமி முதலியார், நிறுவனப் பெருமக்கள்,
முன்னாள் முதல்வர் க. இராமதாசு



தஞ்சை, தமிழ்ப் பல்கலைக்கழகத் துணைவேந்தர்
டாக்டர் சி. பாலசுப்பிரமணியன் அவர்களுடன் ஆர்.ஏ.என். முத்துசாமி
முதலியார் கயிலைமணி அ. முனுசாமி முதலியார்
எஸ்.வி. வையாபுரி முதலியார்



டாக்டர் மா. அண்ணாதுரை எழுதியப் 'பாவேந்தர் படைப்பும் வாழ்க்கையும்' எனும் நூல் வெளியீட்டு விழாவில் பாரதியார் பல்கலைக்கழகத் துணைவேந்தர் டாக்டர் கொ.ம. மாரிமுத்து, நிறுவனத் தலைவர் ஆர்.ஏ.என். முத்துசாமி முதலியார்



'தங்கப்பதக்கம்' வழங்கும் விழாவில் தவத்திரு
குன்றக்குடி அடிகளார், டாக்டர் கொ.ம. மாரிமுத்து - பேராசிரியர்
க. இராமதாஸ் - பெரியவர் ஆர்.ஏ.என். முத்துசாமி முதலியார்



பெரியவர் ஆர்.ஏ.என். முத்துசாமி முதலியாருடன்
ஈரோடு கலைக்கல்லூரி முதல்வர் ரா.வெ. இராமகிருஷ்ணன்



ஈரோடு கலைக்கல்லூரிக்குப் பெருநிதி திரட்டுவதற்கு அயராது உழைத்த பெரியவர் முத்துசாமி முதலியார் அவர்களுக்கு நிறுவனத்தின் சார்பாகப் பொன்னாடைப் போர்த்துகிறார் திருசெங்கோடு திரு M.P.R. அர்த்தனாரி முதலியார், மலர்கிரீடம் அணிவிக்கிறார் சேலம் திரு. S.P. சம்பந்தமுதலியார்



முதலியார் நிறுவனத்திற்குப் பெருநிதியை நன்கொடையாக நல்கிய உறுப்பினர் வள்ளல்களுக்கு 26.6.88ஆம் நாளில் பாராட்டு விழா எடுத்தார்; அவர்களின் திருவுருவப் படங்களைத் தமிழக அமைச்சர் மாண்புமிகு சு . முத்துசாமி அவர்களைக் கொண்டு திறந்து வைத்தார் பெரியவர் ஆர்.ஏ.என். முத்துசாமி முதலியார்



மாணவர்களுக்குத் 'தங்கப்பதக்கம்' வழங்கும் விழாவில் தவத்திரு
குன்றக்குடி அடிகளார் அவர்கள் - நிறுவனத் தலைவர்
ஆர்.ஏ.என். முத்துசாமி முதலியார் - நிறுவனப் பொறுப்பாளர்கள்



வெள்ள நிவாரணப்பணியில்
பெரியவர் ஆர்.ஏ.என். முத்துசாமி முதலியார்




பெரியார் மாவட்டச் செங்குந்தார் மகாசன சங்கத் தலைவர்
ஆர்.ஏ.என். முத்துசாமி முதலியார் அவர்களின் தலைமையில்
உண்ணாவிரதப் போராட்டம்



டாக்டர்

## மா. அண்ணாதுரை

பாவேந்தர் பாரதிதாசனாரின் குடும்பத்தைச் சேர்ந்த டாக்டர் மா. அண்ணாதுரை அவர்கள் தென்பெண்ணையால் வளம் பெற்ற இயற்கை எழில் கொஞ்சும் தென்னார்க்காடு மாவட்டத்தில் மேல்பட்டாம் பாக்கத்தில் 15-10-1946 இல் பிறந்தார். பாவேந்தரின் சம்பந்தியான திரு. இரா. மாணிக்கம் அவர்களின் இளைய புதல்வர். இவருடைய அன்னையார் திருமதி அரங்கநாயகி அம்மாள் ஆவார்.

கல்வி: பிஞ்சு வயதில் புதுவைக் கடற்கரையில் 'பாவேந்தரின் மடியில் கொஞ்சி விளையாடிய இவர் தொடக்கக் கல்வியைப் பிறந்த ஊரிலும், உயர்நிலைக் கல்வியை நெல்லிக்குப்பம் டேனிஷ் மிஷன் உயர்நிலைப் பள்ளியிலும் கற்றவர். புதுச்சேரி தாகூர் கலைக்கல்லூரியில் பி. ஏ. பட்டமும், மதுரைப் பல்கலைக் கழகத்தில் எம். ஏ. பட்டமும், சென்னைப் பல்கலைக் கழகத்தில் பி.லிப்.எஸ்சி.,

எம். எல். ஐ. எஸ்., பட்டங்களும், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் பி. எட்., பட்டமும் பெற்றவர்.

பாவேந்தர் மாப்பிள்ளை திரு. மா. தண்டபாணி அவர்களின் அருமை இளவல் இவர். பாவேந்தர் மகள்—மாப்பிள்ளை வசந்தா—தண்டபாணி ஆகியோரின் முயற்சியால் சென்னை பச்சையப்பன் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் டாக்டர் குருவிக்கரம்பை ஏ. சண்முகம் அவர்களின் வழிகாட்டுதலில் ''பாரதிதாசன் இதழ்ப் பணிகள்—ஓர் ஆய்வு'' என்னும் பொருளில் 1980 முதல் 1986 வரை ஆய்வு செய்து 1988 ஏப்பிரல் திங்களில் 'முதன்மையான ஆராய்ச்சி' (Highly Commended) என்ற சிறப்போடு டாக்டர் பட்டம் பெற்றவர்.

**இதழ்கள்-மலர்கள் தொடர்புகள்:** செந்தமிழ்ச் செல்வி, பாரதிதாசன் குயில், வளரும் தமிழ் உலகம், ஈரோடு கலைக் கல்லூரி மலர், பெங்களூர் தமிழ்ச் சங்கம் மலர், செங்குந்தர் மலர் போன்ற இதழ்களிலும் மலர்களிலும்' புரட்சிக் கவிஞர் பாரதிதாசனும் புரட்சி வீரர் செண்பகராமனும்', 'பாவேந்தர் பார்வையில் நூலகச் சிந்தனைகள்', 'பாவேந்தரின் சுப்ரமண்ய துதியமுது' 'பாரதிதாசன் அறிவியல் சிந்தனைகள்' 'பாவேந்தரின் லதாக்ருகம்' போன்ற பல ஆய்வுக் கட்டுரைகள் எழுதியவர்.

பதிப்புத்துறை: பதிப்புத்துறையிலும் ஈடுபட்ட இவர் பூங்கொடி வெளியீடு [Poongodi Publication. Erode] வாயிலாகப் 'பாவேந்தர் படைப்பும் வாழ்க்கையும்', 'பாவேந்தரில் அகமும் புறமும்' 'பாரதிதாசன் இதழ்பணிகள், 'பாவேந்தர் பாரதிதாசன்', பாரதிதாசன் திருக்குறள் உரைத்திறன்' போன்ற பல படைப்புகள் தமிழகத்திற்கு வழங்கியவர்.

**பங்கேற்ற அமைப்புகள்.** ஈரோடு கலைக் கல்லூரி (தன்னாட்சி) கல்வி அவை உறுப்பினர் (Academic Council), திட்டம்–மதிப்பீடு குழு உறுப்பினர் (Planning and Evaluation Committee), நூலகக் குழு (Library committee), இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம், இந்தியப் பண்பாட்டு மையம் ஆகியவற்றின் உறுப்பினராய் இருந்து செயல்படுகிறவர்.

**கருத்தரங்கு:** இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம், இந்தியப் பண்பாட்டு ஆய்வு மையம் ஆகிய அமைப்புகள் நடத்திய கருத்தரங்குகளில் கலந்துகொண்டு கருத்துரை வழங்குபவர். மேலும், சரசுவதி மகால் நூலகம் நடத்திய நூலகக் கருத்தரங்கில் பங்கு பெற்றுப் பணியாற்றியவர்.

**அலுவல் பணிகள்:** புதுவை மாநிலம் 'மாகி'யில் உள்ள மகாத்மாகாந்தி அரசினர் கலைக்கல்லூரியில் நூலகராகப் பணியாற்றியவர்.

1976 முதல் ஈரோடு கலைக் கல்லூரியில் (தன்னாட்சி) நூலகராகப் பணியாற்றி வருபவர்.

**பரிசும் பாராட்டும்:** 28–4–91 ஆம் நாளில் பாரதிதாசன் இதழ்ப்பணிகள் எனும் பிஎச்.டி. ஆராய்ச்சிக்காகத் தமிழக அரசு, 'பாவேந்தர் பாரதிதாசன் நூற்றாண்டு விழா'வின் போது இவருக்குப் 'பல்கலைக்கழகப் பாவேந்தர் ஆய்வாளர்' என்னும் சான்று வழங்கி பொன்னாடை போர்த்திப் பாராட்டியுள்ளது. மேலும், விரிவான, விளக்கமான இவ்வாய்வு நூல் சிறந்த நூலாகப் புதுவை அரசால் தேர்வு செய்யப் பெற்றது. 29-4–91 ஆம் நாளில் புதுவை கம்பன் கலை அரங்கில் நடைபெற்ற 'பாவேந்தர் பாரதிதாசன்' நூற்றாண்டு நிறைவு விழாவில், புதுவை மாநில மேதகு

துணைநிலை ஆளுநர் டாக்டர் ஹர் சொரூப் சிங் அவர்களால் பரிசும் பாராட்டும் வழங்கப்பட்ட நிகழ்ச்சி குறிப்பிடத் தகுந்ததாகும்.

**பாவேந்தர் பாரதிதாசன்—முதற்பரிசு:** தமிழக அரசு, இந்நூலாசிரியர் எழுதியப் 'பாவேந்தர் பாரதிதாசன்' எனும் நூலினை 1991 ஆம் ஆண்டின் சிறந்த நூலாக-முதற் பரிசு நூலாகத் தேர்ந்தெடுத்தது. முதற் பரிசு தொகை ரூபாய் ஐயாயிரமும், சான்றிதழும் வழங்கி, சிறப்பு செய்தது; பாராட்டியது தமிழக அரசு.

**ஆராய்ச்சிப் பணி:** பிஎச்.டி., எம்.பில்., பட்ட ஆய்வு மாணவர்களுக்கு நெறியாளராகவும் தேர்வாளராகவும் இருந்து ஆய்வுப்பணியை ஊக்குவிப்பவர்.

தொட்டதுறைகளில் எல்லாம் தம்புகழ் நிறுவியவர். இன்னும் பல ஆய்வுப் பணிகளைச் செய்ய இருப்பவர். சுறுசுறுப்பில் தேனீயெனப் பறந்து திரிந்து கருத்துச் சேகரிக்கும் கடமையாளர். இவர் உழைப்பு வளர்க! புகழ் வாழ்க!



பேராசிரியர் டாக்டர் **மே. அ. பாலமுருகன்**






12ஆம் நூற்றாண்டு கவிசக்கரவர்த்தி

# ஒட்டக்கூத்தர் முதலியார்




ஈரோடு முதலியார் கல்வி அறக்கட்டளை

நான்கு கல்லூரிகளை நிறுவிய

**ஆர்.ஏ.என். முத்துசாமி முதலியார்**




ஈரோடு கல்வித்தந்தை, ஈரோடு முன்னாள் சேர்மன்,
OC பிரிவில் இருந்த செங்குந்த கைக்கோளர்
சமுதாயத்திற்கு BC இட ஒதுக்கீடு பெற்றுத் தந்த

**எஸ். மீனாட்சிசுந்தரம் முதலியார்**




மூன்று முறை ஈரோடு சார் மேலாக வெற்றி பெற்று
ஈரோட்டின் தற்போதைய நகரக் கட்டமைப்பு, ஈரோடு வாட்டர்
வொர்க்ஸ், வ.உ.சி பூங்கா ஆகியவற்றை உருவாக்கிய

# டி. சீனிவாச முதலியார்




ஈரோடு செங்குந்தர் கல்விக்கழகம், பழனி முருகன் கோவில் தங்க தேர், வைரவேல், தங்க மயில், வின்ச் ரயில் ஆகியவற்றின் நிறுவனர், சைவப் பெருவள்ளல்

# வி.வி.சி.ஆர். முருகேச முதலியார்




நெசவாளர் நேசன், உத்யோக ரத்னா

**ஜெ. சுத்தானந்தன் முதலியார்**

வெற்றிவேல்





செங்குந்தர் வரலாறு மீட்பு குழு

78269 80901



12 ஆம் நூற்றாண்டு கவிச்சக்ரவர்த்தி
ஒட்டக்கூத்தர் முதலியார்




திருமுருக கிருபானந்த வாரியார்

வீரவேல்



அருணகிரிநாத செங்குந்தர்



வீரதீர செங்குந்தர் வீராந்தக செங்குந்தர் வீரமார்த்தாண்ட செங்குந்தர் வீரராக்கத்த செங்குந்தர் வீரபாகு செங்குந்தர் வீரகேசரி செங்குந்தர் வீரமகேந்திர செங்குந்தர் வீரமகேசுவர செங்குந்தர் வீரபுரந்தக செங்குந்தர்



முருகப் பெருமானின் போர்ப்படைத் தளபதிகள்
வீரபாகு உள்ளிட்ட செங்குந்த கைக்கோள நவவீரர்கள்



